"ஸ்ரீ சங்கர க்ருபா அநுபந்தம்"

21-5

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला-९










# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா
9

21-5

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு



॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–९



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா
# 9

ஸ்ரீ வாணிவிலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்.
1963

२१-५



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவின் ஒன்பதாவது மலர் இது. ஆசார்யாள் அருளிய மூன்று தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரங்களில் ஒன்று எட்டாவது மலரில் வெளி வந்துள்ளது. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி வர்ணமாலா ஸ்தோத்ரம் பின்னால் வெளி வரும் 'ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம்' இதில் வெளிவந்திருக்கிறது. இதைச்சொல்லி நமஸ்காரம் செய்பவர்கள் எல்லோரும் இதன் அர்த்தத்தைப் புரிந்துகொள்வது மிகவும் அவசியம். அதற்கு இம்மலர் மிகவும் உபயோகமாக இருக்கும். பிரபஞ்சம் பொய் என்பதும் தேஹாதிகளைக் காட்டிலும் வேறான ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஸச்சிதானந்த ஸ்வரூபமான ஒரே தத்வம் என்பதும், அஷ்டமூர்த்தி ஸ்வரூபமும் நன்கு விவரிக்கப்பட்டு இருக்கிறது. இந்த பிரகரணத்திற்கு ஸ்ரீஸுரேசுவராசார்யாள் 'மானஸோல்லாஸம்' என்ற அழகான வியாக்யானம் செய்திருக்கிறார்கள். அதிலுள்ள பல விஷயங்கள் இந்தத் தமிழ் உரையில் காட்டப்பட்டிருக்கின்றன.

இரண்டாவது 'அத்வைதானுபூதி': இதில் கடைசி ஐந்து சுலோகங்களில் ஆத்மஞானி ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திகுரு கிருபையால் தனக்கு ஏற்பட்டுள்ள அத்வைதானுபவத்தை வெளியிடுவதால் இப்பெயர் இதற்கு அமைந்திருக்கிறது. இதில் யாவரும் புரியும்படியான பல லௌகிக திருஷ்டாந்தங்களைக் கொண்டு அத்வைதமே வாஸ்தவம் என்பதை நன்கு நிரூபணம் செய்திருக்கிறார். இது மனனத்திற்காக அமைந்த கிரந்தம். இதற்குத் தமிழில் பதஉரையும் கருத்துரையும் எழுதிக் கொடுத்து உதவிய சிருங்கேரிமடம் ஆஸ்தான வித்வான் திருநெல்வேலி ப்ரஹ்மஸ்ரீ P. S. மஹாதேவ சாஸ்திரிகள் அவர்களுக்கு நம் ஸமிதியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மூன்றாவது தத்வோபதேசம்: எவ்வளவு படித்தவனாக இருந்தாலும், புத்திமானாக இருந்தாலும். குருவின் உபதேசம் இருந்தால்தான் அத்வைதானுபூதி வரும். குருவின் உபதேசம்

இப்பிரகரணத்தில் காட்டப்படுகிறது. அதிலும் சாந்தோக்ய உபநிஷத்தில் ஆருணி என்ற குரு தன் புத்ரனும் சிஷ்யனுமான ச்வேதகேதுவுக்கு உபதேசித்த தத்வமஸி மஹாவாக்யத்திலுள்ள பதார்த்த வாக்யார்த்தங்களை விரிவாக விளக்கி காந்தாரபுருஷ திருஷ்டாந்தத்தைக் காட்டி ஜீவனே ப்ரஹ்மம் என்பதை நிரூபணம் செய்கிறார். கடைசியில் குருவின் மஹிமையையும் குருவினிடம் சிஷ்யன் நடந்துகொள்ள வேண்டிய முறைகளையும் அழகாகக் காட்டுகிறார். இந்தப் பிரகரணங்களை வாசிப்பதால் உபநிஷத்துக்களின் கருத்துக்களை நன்றாகத் தெரிந்துகொள்வதுடன் அவைகளை வாசிப்பதற்கும் உபயோகமாக இருக்கும்

நான்காவது 'குர்வஷ்டகம்': உலகில் எத்தனை சிறந்த லாபங்களைப் பெற்றபோதிலும் குரு சரணத்யானம் இல்லாவிடில் அத்தனையும் வீண் என்பதை விளக்குகிறார்.

ஐந்தாவது தன்யாஷ்டகம்: உலகில் யார் பாக்யசாலி என்பதை விவரித்துக் கூறுகிறார்.

ஸ்ரீ பகவத்பாதாள் அருளிய உயர்ந்த இந்த நூல்கள் சிறந்த முறையில் வெளிவரும்படி பரமானுக்ரஹம் செய்துள்ள சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குருவின் மலரடிகளை எப்பொழுதும் பணிவோமாக.

**K. V. சுப்பரத்னம் அய்யர்,**
பொதுக்கார்யதர்சி,
அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதி


விஷயாநுக்ரமணிகை

॥ श्रीः ॥

# ॥ श्रीदक्षिणामूर्त्यष्टकम् ॥

# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம்

[ஆசார்யாள் அருளிய தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரங்களில் தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம் என்பதை சிறிய வேதாந்த பிரகரணமாகக் கூறலாம். இதில் 10 சுலோகங்கள் இருக்கின்றன. முதல் எட்டு சுலோகங்களில் உபநிஷத் ரஹஸ்யார்த்தம் நன்கு பல திருஷ்டாந்தங்களுடன் காட்டப் பட்டிருக்கிறது. அதாவது பிரபஞ்சம் பொய் என்பதும் ஜீவனும் ஈசுவரனும் ஒன்று என்பதும் நன்கு நிரூபிக்கப் பட்டிருக்கிறது. ஒன்றே தத்வம். வேற்றுமை வாஸ்தவமல்ல. அந்த தத்வம்தான் ஜீவர்களைக் கரையேற்ற தக்ஷிணாமூர்த்தி என்ற ஆசார்ய உருவம் கொண்டிருக்கிறது. இந்த முக்யமான விஷயம் எட்டு சுலோகங்களில் காட்டப்பட்டிருப்பதால் இதற்கு தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம் என்ற பெயர் ஏற்பட்டிருக் கிறது. 9-வது சுலோகத்தில் ஈசுவரனுடைய அஷ்டமூர்த்தி களை வர்ணித்து இந்த ஸகுணமும் நிர்குண ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறல்ல என்று கூறுகிறார். 10-வது சுலோகத்தில் பலன் வர்ணிக்கப்படுகிறது.

இந்த ஸ்தோத்திரம் தக்ஷிணாமூர்த்தி நமஸ்காரமாக அமைந்திருப்பதால் வேதாந்தபாடம் ஆரம்பிப்பதற்கு முன்பும் முடிந்த பின்பும் இதைச்சொல்லி நமஸ்காரம் செய்வது வழக்கம். ஸ்ரீபகவத்பாதாள் 10 சுலோகங்களே இயற்றி யிருந்தாலும் இத்துடன் வழக்கமாகப் பெரியோர்கள் சொல்லி வரும் பிராசீன சுலோகங்கள் நான்கும் (முதலில் ஒன்றும் முடிவில் மூன்றும்) இதில் சேர்க்கப்பட்டு அவைகளுக்கும் தமிழ் உரை கொடுக்கப்பட்டிருக்கிறது.]

[ मौनव्याख्याप्रकटितपरब्रह्मतत्वं युवानं
वर्षिष्ठान्तेवसदृषिगणैरावृतं ब्रह्मनिष्ठैः ।
आचार्येन्द्रं करकलितचिन्मुद्रमानन्दमूर्तिं
स्वात्मारामं मुदितवदनं दक्षिणामूर्तिमीडे ॥ ]

மௌனவ்யாக்யா ப்ரகடித பரப்ரஹ்ம தத்வம் யுவாநம்
வர்ஷிஷ்டாந்தேவஸத் ருஷிகணைராவ்ருதம் ப்ரஹ்ம நிஷ்டை:|
ஆசார்யேந்த்ரம் கரகலித சின்முத்ரமாநந்த மூர்த்திம்
ஸ்வாத்மாராமம் முதித வதநம் தக்ஷிணாமூர்த்திமீடே ||

**मौनव्याख्या**–வாய்திறவாத மௌனம் என்னும் கற்றுக் கொடுக்கும் முறையால், **प्रकटित**–நன்கு அறிவுறுத்தப்பட்ட, **परब्रह्मतत्त्वं**–பரப்ரஹ்ம ஸ்வரூபத்தை உடையவரும், **युवानं**–வாலிபப் பருவமுள்ளவரும், **ब्रह्मनिष्ठैः**–ப்ரஹ்ம ஸ்வரூபத்திலேயே நிலைபெற்றவர்களான, **वर्षिष्ठान्तेवसदृषिगणैः**–வயது முதிர்ந்த சிஷ்யர்களான முனிகணங்களால், **आवृतं**–சூழப் பட்டவரும், **करकलितचिन्मुद्रं** – கையில் தரிக்கப்பட்ட சின் முத்ரையை உடையவரும், **आनन्दमूर्तिं**–ஆனந்த உருக் கொண்டவரும், **स्वात्मारामं**–ஸ்வஸ்வரூபத்திலேயே இன்ப முறுகிறவரும், **मुदितवदनं**–ஸந்தோஷம் கொண்ட முகமுள்ள வரும், **आचार्येन्द्रं**-ஆசார்ய சிரேஷ்டருமான, **दक्षिणामूर्तिं**–தக்ஷிணாமூர்த்தியை, **ईडे**–துதிக்கிறேன்.

உலகில் ஆசார்யர்களுக்குள் சிறந்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி கையில் சின்முத்திரை தரித்து தன்னைச்சூழ்ந்துள்ள சிஷ்யர் களுக்கு ப்ரஹ்மதத்வத்தை உபதேசிக்கிறார். இவர் வாலிபர். சிஷ்யர்களோ வயது சென்ற ரிஷிகணங்கள். இவர் வாயைத்திறந்து ஒரு வார்த்தைகூடச் சொல்வதில்லை. மௌனம் தான். ப்ரஹ்மத்தை வாயால் சொல்லமுடியாது என்பதை மௌனத்தால் காட்டுகிறார். வாய்திறந்து பேசா விட்டாலும், மௌனத்தாலும் சின்முத்ரையாலும் உத்தம சிஷ்யர்களான முனிவர்கள் ப்ரஹ்மத்தை நன்கு தெரிந்து கொண்டு விடுகின்றனர். தக்ஷிணாமூர்த்தி எப்பொழுதும் ஸ்வஸ்வரூபத்திலேயே ஆனந்தமடைபவர் ஆதலால் அவர் முகம் ஸந்தோஷத்துடன் கூடியிருக்கும். அவரைத் துதிக் கிறேன்.

विश्वं दर्पणदृश्यमाननगरीतुल्यं निजान्तर्गतं
पश्यन्नात्मनि मायया बहिरिवोद्भूतं यथा निद्रया ।

यः साक्षात्कुरुते प्रबोधसमये स्वात्मानमेवाद्वयं
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ १ ॥

விச்வம் தர்பண த்ருச்யமான நகரீ துல்யம் நிஜாந்தர்கதம்
பச்யந்நாத்மனி மாயயா பஹிரிவோத்பூதம் யதா நித்ரயா ।
ய: ஸாக்ஷாத்குருதே ப்ரபோத ஸமயே
ஸ்வாத்மாநமேவாத்வயம்
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே॥

**दर्पणदृश्यमान**-கண்ணாடியில் காணப்படுகின்ற, **नगरी-तुल्यं** - பட்டணம்போன்றதாய், **निजान्तर्गतं** - தன்னுள்ளே (ஆத்மாவினுள்ளே) இருக்கும், **विश्वं**-பிரபஞ்சத்தை, **निद्रया यथा**-தூக்கத்தினால் போல, **आत्मनि**-ஆத்மாவிடத்து, **मायया**-அக்ஞானத்தால், **बहिः**-வெளியில், **उद्भूतमिव**-உண்டானது போல், **पश्यन्**-பார்க்கின்ற, **यः**-எவன், **प्रबोधसमये**-விழிப்பு சமயத்தில் (ஞானம் வந்தபின்) **अद्वयं**-இரண்டற்ற, **स्वात्मानमेव**-தன் ஆத்மஸ்வருபத்தை மட்டுமே, **साक्षात्कुरुते**-நேரில் காண்கிறானோ, **तस्मै** - அந்த, **श्रीगुरुमूर्तये** - ஸ்ரீமதாசார்ய ஸ்வரூபமான, **श्रीदक्षिणामूर्तये**-ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு, **इदं नमः**-இந்த நமஸ்காரம்.

ஜீவர்கள் ஆத்மாவை அறிந்துகொள்வதற்கு முன் இப்பிரபஞ்சத்தை தன்னைக்காட்டிலும் வேறாக வெளியில் பார்க்கிறார்கள். ஸத்குருவின் உபதேசத்தால் ஆத்மஞானம் ஏற்பட்டதேயானால் ஆத்ம ஸ்வரூபம் தவிற வேறொன்றும் தெரியாது. கண்ணாடியில் இடைவெளியில்லாமல் போனாலும் உள்ளே நகரம் தெரிவது போல் அகண்டமான ஆத்மாவினிடம் ஜகத்து தெரிகிறது. ஸ்வப்ன காலத்தில் கண்ணை மூடிக்கொண்டு தூங்கும் பொழுது வாஸனாமயமான ஸூக்ஷ்ம பிரபஞ்சம் தன்னுள் இருந்தாலும் தூக்கத்தில் அதை வெளியிலிருப்பதாகவே பார்க்கிறான். அதுபோலவே தன்னுள் ஆரோபிதமாயிருக்கின்ற ஸ்தூல பிரபஞ்சத்தை மாயையால் வெளியில் இருப்பதுபோலவே காண்கிறான். விழித்துக்கொண்டதும்

ஸ்வப்ந பிரபஞ்சம் மறைந்துவிடுவதுபோல ஸ்ரீ ஸத்குருவின் உபதேசத்தால் ஆத்மஞானம் ஏற்பட்ட பிறகு இந்த பிரபஞ்சம் மறைந்து தன் ஆத்ம ஸ்வரூபம் ஒன்றையே பார்க்கிறான். तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये। எவன் பார்க்கிறானோ, அந்த குருமூர்த்தியான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம் என்பதால், பார்க்கின்ற ஜீவாத்மாவும், அவருக்கு உபதேசம் செய்கிற குருஸ்வரூபமும், தக்ஷிணாமூர்த்தி என்ற ஈசுவரஸ்வரூபமும், ஒரே தத்வமென்று தெரிகிறது. ஆல மரத்தடியில் தென்திசை பார்த்து உட்கார்ந்துகொண்டு ஸநகாதி யோகிகளுக்கு தத்வ ஞானத்தை உபதேசம் செய்த மூர்த்திக்கு 'தக்ஷிணாமூர்த்தி' என்று பெயர். श्रिया दक्षिणः श्रीदक्षिणः श्रीदक्षिणश्चासौ अमूर्तिश्च श्रीदक्षिणामूर्तिः। ஸ்ரீ என்றால் மாயை. மாயையைக்கொண்டு ஜகத் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைச் செய்வதில் ஸமர்த்தர். உண்மையில் உருவமில்லாதவர் என்றும் அர்த்தம் கொள்ளலாம். (1)

[அவதாரிகை] முதல் சுலோகத்தில் பிரபஞ்சம் ஆத்மாவிடம் உள்ளதென்றும் அது ஸ்வப்னம்போல் பொய் என்றும் கூறப்பட்டது. இந்த சுலோகத்தில் அப்பிரபஞ்சத்திற்கு ப்ரஹ்மமே [1]அபிந்ந நிமித்த உபாதான காரணம் என்று கூறுகிறார் :—

बीजस्यान्तरिवाङ्कुरो जगदिदं प्राङ्निर्विकल्पं पुन-
र्मायाकल्पितदेशकालकलनावैचित्र्यचित्रीकृतम्।
मायावीव विजृम्भयत्यपि महायोगीव यः स्वेच्छया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये॥ २॥

பீஜஸ்யாந்தரிவாங்குரோ ஜகதிதம் ப்ராங் நிர்விகல்பம் புநர்
மாயா கல்பித தேச கால கலநா வைசித்ர்ய சித்ரீக்ருதம் |
மாயாவீவ விஜ்ரும்பயத்யபி மஹாயோகீவ ய: ஸ்வேச்சயா
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே||

1. கார்யத்துடன் சேர்ந்திருக்கும் காரணம் உபாதானம், குடத்திற்கு மண். மற்றது நிமித்த காரணம், குடத்திற்கு குயவன். பிரபஞ்சத்திற்கு பரமாத்மாவே உபாதானமாயும் நிமித்தமாயும் ஆகிறார்.

**इदं जगत्**–இந்த பிரபஞ்சம், **बीजस्यान्तः**–விதையினுள், **अंकुर इव**–முளைபோல், **प्राक्**–ஸிருஷ்டிக்கு முன்னால், **निर्विकल्पं**–வேற்றுமையற்றதாக (ஒரே காரணப் பொருளாக) இருந்து, **पुनः**–பின்னால், **मायाकल्पित**–மாயையால் கல்பிக்கப்பட்ட, **देशकालकलना**–இடம், காலம் இவற்றின் ஸம்பந்தத்தால் ஏற்பட்ட, **वैचित्र्य**–வேற்றுமையினால், **चित्रीकृतं**–பலவகைப்பட்டதாக ஆனதோ, **यः**–எவர், **मायावीव**–மாயாவிபோலவும், **महायोगीवापि**–பெரிய யோகிபோலவும், **स्वेच्छया** தம் ஸங்கல்பத்தால், **विजृम्भयति**–(இப்பிரபஞ்சத்தை) வெளியில் தோன்றும்படி செய்கிறாரோ, **तस्मै**–அந்த, **श्रीगुरुमूर्तये**–ஸ்ரீமதாசார்ய ஸ்வரூபமான, **श्रीदक्षिणामूर्तये**–ஸ்ரீ தக்ஷிணமூர்த்திக்கு, **इदं नमः**–இந்த நமஸ்காரம்.

உலகில் மரம் உண்டாவதற்கு முன்னால் விதையாக இருக்கும்பொழுது விதைக்குள் மரம் ஸூக்ஷ்மமாக இருந்தாலும் அப்பொழுது துளிர், இலை, பூ, காய், பழம் என்ற வேற்றுமைகள் இல்லை. விதையாகவே மரம் இருந்தது. விதையிலிருந்து துளிர் தோன்றி முறையே மரம் உண்டானதும் எல்லா வேற்றுமைகளும் ஏற்படுகின்றன. இதுபோல ஸ்ருஷ்டிக்கு முன்னால் ஆதியில் ஆத்மாவினுள் பிரபஞ்சம் ஸூக்ஷ்மமாக இருந்தாலும் அப்பொழுது ஒருவித பேதமுமில்லாமல் ஆத்ம ஸ்வரூபமாகவே இருந்தது. பிறகு மாயையால் காலதேச நிமித்தங்கள் ஏற்பட அதன்மூலம் பிரபஞ்சமும் பலவித பேதம் நிறைந்ததாக ஆயிற்று. இந்திரஜாலம் காட்டுபவன் வேறு மூலப்பொருள் ஒன்றும் இல்லாமல் மாயையை மட்டும் கருவியாகக்கொண்டு பலவிதப் பொருள்களைக் காட்டுவது போலவும், விசுவாமித்ரர் முதலான மஹாயோகிகள் தம் இச்சையால் யோகசக்தியைக்கொண்டு பலவித பொருள்களை உண்டுபண்ணுவது போலவும், பரமாத்மா தம் மாயாசக்தியை மட்டும் கொண்டு தன்னிடத்திலேயே பலவித வேற்றுமையுள்ள பிரபஞ்சத்தை தோற்றுவிக்கிறார். அவரைத்தவிற வேறு வஸ்து இல்லாததால் பிரபஞ்சத்திற்கு அவரே உபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் ஆகிறார். மாயையின் ஸ்வரூபம்

வாஸ்தவமில்லாததால் அதனுலுண்டாகும் பிரபஞ்சத்திஞல் ஆத்மாவுக்கு ஒருவித விகாரமும் ஏற்படுவதில்லை. (2)

[அ] முதல் சுலோகத்தால் சரீரத்தில் இருந்து கொண்டு வெளியிலுள்ள பிரபஞ்சத்தைக் காண்கின்ற ஜீவாத்மாவையும் 2வது சுலோகத்தால் மாயையால் பிரபஞ்சத்தை ஸிருஷ்டிக்கின்ற ஜகத் காரணமான ஈசுவரனையும் குறிப்பிட்டுவிட்டு இந்த சுலோகத்தில் அந்த இரண்டும் ஒன்றுதானெனக் கூறுகிறார் :—

यस्यैव स्फुरणं सदात्मकमसत्कल्पार्थगं भासते
साक्षात्तत्त्वमसीति वेदवचसा यो बोधयत्याश्रितान् ।
यत्साक्षात्करणाद्भवेन्न पुनरावृत्तिर्भवाम्भोनिधौ
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ३ ॥

யஸ்யைவ ஸ்புரணம் ஸதாத்மகமஸத்கல்பார்த்தகம் பாஸதே
ஸாக்ஷாத் தத்வமஸீதி வேதவசஸா யோ
போதயத்யாச்ரிதான் ।
யத்ஸாக்ஷாத்கரணாத் பவேத் ந புநராவ்ருத்திர்
பவாம்போநிதௌ
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணமூர்த்தயே॥

**यस्यैव**—எந்த பரமாத்மாவையே சேர்ந்ததான, **स्फुरणं**—பிரகாசம், **असत्कल्पार्थगं** - அஸத்தான வஸ்துக்களுக்கொப்பான பிரபஞ்சத்தை அடைந்ததாய், **सदात्मकं** - உண்மை ஸ்வரூபமாக, **भासते**—விளங்குகிறதோ; **यः**—எவர், **आश्रितान्**—தன்னை அண்டியவர்களை, ‘ **त्वं**—நீ, **तत्**—அதுவாக, **असि**—இருக்கிறாய்’, **इति** - என்ற, **वेदवचसा** – வேதவாக்யத்தால், **साक्षात्**—நேராக, **बोधयति**—அறிவுறுத்துகிறாரோ; **यत्साक्षात्करणात्**-எவரை நேரில் அறிவதால், **भवाम्भोनिधौ**—ஸம்ஸாரக் கடலில், **पुनरावृत्तिः**-மறுபடியும் திரும்பிவருதல், **न भवेत्**-ஏற்படாதோ, **तस्मै**—அந்த, **श्रीगुरुमूर्तये**-ஸ்ரீமதாசார்ய ஸ்வரூபமான, **श्रीदक्षिणामूर्तये**—ஸ்ரீ தக்ஷிணமூர்த்திக்கு, **इदं नमः**—இந்த நமஸ்காரம்,

உலகத்தில் காண்கின்ற பொருள்களை ஸத்தென்றும் அஸத்தென்றும் இரண்டாகப் பிரிக்கலாம். ஆத்மா ஸத்தான வஸ்து. முயல் கொம்பு, மலடி மகன் இவையெல்லாம் அஸத்து. இவை ஓரிடத்திலும் தோன்றாததாலும், இதைக் கண்டதாக யாரும் சொல்லாததாலும் இதற்கு ஸத்தையும் (இருப்பும்) ஸ்புரணமும் (விளக்கமும்) கிடையாது. ஆகவேதான் இவைகளை அஸத்தென்று கூறினோம். கயிற்றில் தோன்றும் பாம்பை முயல் கொம்புபோல் அஸத்தாகக் கூற முடியாது. சில சமயங்களில் சிலருக்கு கயிறு பாம்பாகத் தோன்றுவதாலும், அங்கே பாம்பு இருக்கிறது, நான் நேரில் கண்டேன் என்று கூறுவதாலும் இதற்கு ஸத்தையும் ஸ்புரணமும் உண்டு. ஆனாலும் நன்கு கவனித்துப் பார்த்ததும் கயிறு தெரிகிறதே தவிர பாம்பு தெரிவதில்லை. ஆதலால் இதைக் கயிறுபோல் ஸத்தென்று கூற முடியாது. ஸத்தானால் மறைந்து போகாது. கயிற்றில் பாம்பு தோன்றுவதால் இதை அஸத்தாகவும் கூற முடியாது. அஸத்தானால் தோன்றாது. ஆகவே ஸத்திலும் சேராமல் அஸத்திலும் சேராமலிருக்கும் கயிற்றில் தோன்றும் பாம்பு முதலானவற்றை சாஸ்திரங்களில் "ஸதஸத் விலக்ஷணம்" "அநிர்வசநீயம்" என்று கூறுகிறார்கள். இவை ஸத்தில்லாவிட்டால் ஸத்தையும் ஸ்புரணமும் இதற்கு எவ்விதம் ஏற்பட்டது என்று கேட்கலாம். கயிற்றில் பாம்பு தோன்றினாலும்கூட ஸத்தையும் ஸ்புரணமும் அந்தப் பாம்புக்குச் சொந்தமானதல்ல. கயிறே பாம்பாகத் தோன்றுவதாலும் பாம்பு தோன்றும்பொழுது கயிறு தெரியாததாலும் கயிறு தெரிந்ததும் பாம்பு மறைவதாலும் கயிற்றிலுள்ள ஸத்தையும் ஸ்புரணமும்தான் பாம்பில் தோன்றுகிறது.

இந்த த்ருஷ்டாந்தப்படி பிரபஞ்சத்திற்கும் சொந்தமாக ஸத்தாஸ்புரணங்கள் கிடையாது. அதிஷ்டானமான ஆத்மாவிலுள்ள ஸத்தாஸ்புரணங்கள்தான் பிரபஞ்சத்தில் தோன்றுகின்றன. கயிற்றில் தோன்றின பாம்பு உடனே மறைந்துவிடுவதாலும், கயிறு வெகுகாலம் இருப்பதாலும்

கயிற்றை ஸத்து என்று சொல்கிறோம். உண்மையில் நன்கு விசாரித்துப் பார்த்தோமானால் இது கயிறு என்ற ஞானம் வந்ததும் அந்தப் பாம்பு மறைந்து போவதுபோல் ஸர்வம் ப்ரஹ்மம் என்ற ஞானம் வந்ததும் பிரபஞ்சமும் மறைந்துவிடுகிறது. கொஞ்சகாலம் தோன்றுகிறது, வெகுகாலம் தோன்றுகிறது என்ற வேற்றுமை இருந்தாலும் "ஞானத்தால் மறைந்துபோவது" என்பது இரண்டுக்கும் பொதுவானபடியால் ரஜ்ஜுஸர்ப்பம்போல் பிரபஞ்சமும் ஸதஸத்விலக்ஷணமாய் அநிர்வசனீயமானதால் பொய்யே.

இவ்வாறு பொய்யான பிரபஞ்சத்தை உண்மை என்று நினைப்பதாலும் தேஹத்தை ஆத்மாவென்று நினைப்பதாலும் தான் நமக்கு எல்லாவித அனர்த்தங்களும் ஏற்படுகின்றன. இதைப் போக்குவதற்காக பகவானே குருவாக வந்து தன்னைச் சரணமடைந்த சிஷ்யனுக்கு "பிரபஞ்சம் முழுவதும் பொய். ப்ரஹ்மம் ஒன்றே ஸத்யம். நீயும் அந்த ப்ரஹ்மம்தான்" என்று மஹாவாக்யத்தின் அர்த்தத்தை உபதேசிக்கிறார். இதனால் சிஷ்யனுக்கு ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது. மறுபடியும் இவன் இப்பிரபஞ்சத்தில் பிறப்பதில்லை. பிறப்பு இறப்பற்ற நித்யானந்த நிலைமையை அடைகிறான். (3)

[அ] முன் சுலோகத்தில் "ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்று. ஆத்மாவிலுள்ள உண்மையும் பிரகாசமும்தான் பிரபஞ்சத்தில் தோன்றுகின்றன. பிரபஞ்சத்திற்குத் தனியாக உண்மையும் பிரகாசமும் கிடையாது" என்று கூறப்பட்டது. இதன்மேல் "இது சரியன்று. இவ்விதம் சொல்வதற்குப் பிரமாணமென்ன? நம் அநுபவம் இதற்கு ஒத்ததாக இல்லையே" என்ற கேள்விவர பதில் கூறுகிறார்:—

नानाच्छिद्रघटोदरस्थितमहादीपप्रभाभास्वरं
ज्ञानं यस्य तु चक्षुरादिकरणद्वारा बहिः स्पन्दते ।
जानामीति तमेव भान्तमनुभात्येतत्समस्तं जग-
त्तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ।। ४ ।।

நாநாச்சித்ர கடோதர ஸ்தித மஹாதீப ப்ரபா பாஸ்வரம்
ஞானம் யஸ்ய து சக்ஷுராதி கரண த்வாரா பஹி: ஸ்பந்ததே।
ஜானாமீதி தமேவ பாந்தமனுபாத்யேதத் ஸமஸ்தம் ஜகத்
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே॥

**यस्य**-எதனுடைய, **ज्ञानं**-அறிவானது, **नानाच्छिद्र**-பல த்வாரங்களுள்ள, **घटोदरस्थित**-குடத்திற்குள் இருக்கும், **महा-दीप**-பெரிய விளக்கின், **प्रभा**-ஒளிபோல, **भास्वरं**-பிரகாசிக்கின்றதாய், **चक्षुरादिकरणद्वारा**-கண் முதலான புலன்களின் வழியாக, **बहिः**-வெளியில், **स्पन्दते**-செல்கின்றதோ; **एतत्**-இந்த, **समस्तं जगत्**-பிரபஞ்சம் பூராவும், **जानामीति**-அறிகிறேன் என்று, **भान्तं**-தானாகவே விளங்குகின்ற, **तमेव**-அவரையே, **अनुभाति**-அநுஸரித்துப் பிரகாசிக்கிறது, **तस्मै**-அந்த, **श्रीगुरुमूर्तये**-ஸ்ரீமதாசார்யஸ்வரூபரான, **श्रीदक्षिणा-मूर्तये**-ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு, **इदं नमः**-இந்த நமஸ்காரம்.

ஒரு குடத்தில் அநேகம் துவாரங்களைச் செய்து அதனுள்ளே ஒரு தீபத்தை ஏற்றிவைத்தால் அந்த தீபத்தின் ஒளியானது அந்த துவாரங்களின் வழியாக வெளியே சென்று அருகிலுள்ள பொருள்களை விளக்குகிறது. இது போல பல இந்திரிய துவாரங்களை உடைய இந்த தேஹத்தின் உள்ளே பிரகாசிக்கும் ஆத்ம பிரகாசமானது கண் முதலிய இந்திரியங்களின் வழியாக வெளியே சென்று வெளிப்பொருள்களை விளங்கவைக்கின்றது. எவ்விதமெனில் 'நான் குடத்தை அறிகிறேன்' என்று எண்ணும்பொழுது தான் குடம் விளங்குகிறது. இல்லாவிடில் ஜடமான அது விளங்குவதில்லை. குடத்தை அறிகிறேன் என்றவிடத்து அறிவு என்ற ஆத்மபிரகாசம் கண் வழியாக வெளியேவந்து குடத்துடன் ஸம்பந்தப்பட்டதும் குடம் பிரகாசிக்க ஆரம்பிக்கின்றது. குடம் அறிவினால் பிரகாசிக்கிறது. அறிவு தானே விளங்குகிறது. அறிவை விளக்க மற்றோர் கருவி தேவையில்லை. நான் குடத்தை அறிகிறேன் என்று எண்ணும்பொழுதே குடமும் பிரகாசிக்கிறது; அறிவும் பிரகாசிக்கிறது. முன் கூறிய த்ருஷ்டாந்தத்தில் குடத்திற்குள்ளிருக்கும் தீபம் நம் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும்

தீபத்தின் பிரகாசம்தான் துவாரத்தின் வழியாக வெளியே வந்து பொருள்களைக் காட்டுகிறது என்று சொல்வார்களே தவிற ஒருவராவது துவாரமே பொருளை விளக்குகிறது என்று சொல்வதில்லை. அதுபோல ஆத்ம பிரகாசத்தால் தான் இதெல்லாம் விளங்குகிறது. ஆகவே ஆத்மாவில் உள்ள ஸ்புரணம்தான் ஜகத்தில் தோன்றுகிறதே தவிற பிரபஞ்சத்திற்குத் தனியாக ஸ்புரணம் கிடையாது என்று முன் சுலோகத்தில் கூறியது சரியே.

அப்படியானல் குடமிருக்கிறது, குடம் விளங்குகிறது என்று சொல்வது எவ்விதம் பொருந்துமெனில் நெருப்பில் பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கரண்டியை அறியாது தொட்டவனுடைய கை கொப்பளித்து விடுகிறது. கையில் என்னவென்று கேட்டால் காண்டி சுட்டுவிட்டது என்று சொல்லுகிருன். உண்மையில் நெருப்புக்குத்தான் சுடும் சக்தி உண்டே தவிற இரும்புக்குக் கிடையாது. இது அவனுக்கும் தெரியும். ஆனாலும் இரும்பு சுட்டதாகச் சொல் கிருன். என்ன காரணமெனில் நெருப்பும் இரும்பும் சேர்ந் திருப்பதுதான். அதனுல் நெருப்பிலுள்ள சுடும் சக்தியை இரும்பில் ஏற்றி இரும்பு சுட்டதாகச் சொல்கிருன். இது போல ஆத்மாவும் பிரபஞ்சமும் ஒன்ருகக் கலந்திருப்பதால் ஆத்மாநாத்ம விவேகமில்லாதவர்கள் ஆத்மாவிலுள்ள ஸ்புரண சக்தியை பிரபஞ்சத்தில் ஆரோபித்துப் பேசுகிருர் கள். உண்மையில் பிரபஞ்சத்திற்கு ஆத்ம ஸம்பந்தமில்லா மல் ஸ்புரணம் கிடையாது. (4)

[அ] இவ்விதம் நான்கு சுலோகங்களால் பிரபஞ்சம் பொய்யென்றும் ஆத்மா ஸச்சித்ரூபியென்றும் ஆத்மாவே ப்ரஹ்மமென்றும் கூறப்பட்டது. இதற்கு மாருகக் கூறுகின்ற வாதங்கள் சரியல்லவென்று இதில் கூறுகிருர் :—

देहं प्राणमपीन्द्रियाण्यपि चलां बुद्धिं च शून्यं विदुः
स्त्रीबालान्धजडोपमास्त्वहमिति भ्रान्ता भृशं वादिनः ।

मायाशक्तिविलासकल्पितमहाव्यामोहसंहारिणे
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ५ ॥

தேஹம் ப்ராணமபீந்த்ரியாண்யபி சலாம் புத்திம் ச
ஶூந்யம் விது:
ஸ்த்ரீ பாலாந்த ஜடோபமாஸ்த்வஹமிதி ப்ராந்தா
ப்ருஶம் வாதிந: ।
மாயா ஶக்தி விலாஸ கல்பித மஹாவ்யாமோஹ
ஸம்ஹாரிணே
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே ॥

**स्त्रीबालान्धजडोपमाः**–பெண்கள், சிறுவர்கள், குருடர்கள், அறிவிலிகள் இவர்களுக்கொப்பான, **भृशं**-மிகவும், **भ्रान्ताः**–மயக்கம் கொண்ட, **वादिनः**–பலவிதமாக வாதம் புரிபவர்கள் **देहं**–தேஹத்தையும், **प्राणमपि**-பிராணனையும், **इन्द्रियाण्यपि**–இந்திரியங்களையும், **चलां**–சஞ்சலமான, **बुद्धिं च**–புத்தியையும், **शून्यं**–சூன்யத்தையும், **अहमिति**–நான் (ஆத்மா) என்று, **विदुः**-அறிந்துகொண்டிருக்கிறார்கள். **मायाशक्ति**–மாயை என்னும் சக்தியின், **विलासकल्पित**–சேஷ்டையால் ஏற்பட்ட, **महाव्यामोह**–பெரிய மயக்கத்தை, **संहारिणे**–அடியோடு தொலைக்கின்ற, **तस्मै**–அந்த, **श्रीगुरुमूर्तये**–ஸ்ரீமதாசார்ய ஸ்வரூபரான, **श्रीदक्षिणामूर्तये** – ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு, **इदं नमः** – இந்த நமஸ்காரம்.

தம்தம் கொள்கையை நிலை நிறுத்துவதற்காக வாதம் செய்பவர்களில் சிலர் தேஹத்தையே ஆத்மாவென்று பல யுக்திகளால் கூறுகின்றனர். மற்றும் சிலர் இந்திரியங்களை ஆத்மாவென்றும், வேறு சிலர் பிராணனை ஆத்மாவென்றும், சிலர் புத்தியை ஆத்மாவென்றும், சிலர் சூன்யத்தை ஆத்மாவென்றும் கூறுகிறார்கள். இவர்கள் கூறுவது உபநிஷத்திற்கு விருத்தமானது; அதை அநுஸரித்த யுக்திக்கும் விருத்தமானது. அவர்கள் விவேகமில்லாமல் மாயையால் ஏற்பட்ட மதிமயக்கத்தால் இவ்வாறு கூறுகிறார்கள். கீதையில் இவர்களைப்பற்றி " **मायया**

अपहृतज्ञाना आसुरं भावमाश्रिताः" (மாயையால் அறிவிழந்து அஸுரத்தன்மை அடைந்தவர்கள்) என்று பகவான் கூறுகிருர். பெண்கள், பாலர், குருடர், ஜடர் இவர்களுடைய வார்த்தைகள்போல இந்த வாதிகளுடைய வாதங்களும் பிரமாணமாக ஏற்றுக்கொள்ளத் தக்கதல்ல. எந்த மாயையின் சக்தியால் மதிமயக்கம் கொண்டு பலவாருக இவர்கள் வாதம்புரிகின்றனரோ அந்த மாயையை அடியோடு அழிக்கின்றவர் ஸ்ரீ குருமூர்த்தியே. இவரே தக்ஷிணுமூர்த்தி. (5)

[அ] இதுவரை கனவில் தோன்றும் பொருள் போல நனவில் காணும் பிரபஞ்சமும் ஆத்மாவில் கல்பிக்கப்பட்டது. அதிஷ்டானமான இந்த ஆத்மா ஒன்றுதான் உண்மைப் பொருள். மற்றதெல்லாம் பொய். ஆத்மாவே ப்ரஹ்மம் என்று கூறப்பட்டது. இதன்பேரில் ஆத்மாவும் அஸத்து, எல்லாம் சூன்யம் என்று சொல்லும் பௌத்த மதத்தைக் கண்டித்து முன் கூறியவற்றை உறுதிப்படுத்துகிருர் :—

राहुग्रस्तदिवाकरेन्दुसदृशो मायासमाच्छादना-
त्सन्मात्रः करणोपसंहरणतो योऽभूत्सुषुप्तः पुमान् ।
प्रागस्वाप्समिति प्रबोधसमये यः प्रत्यभिज्ञायते
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ६ ॥

ராஹு க்ரஸ்த திவாகரேந்து ஸத்ருஶோ மாயா
ஸமாச்சாதநாத்
ஸன்மாத்ர: கரணோபஸம்ஹரணதோ
யோऽபூத் ஸுஷுப்த: புமான் ।
ப்ராகஸ்வாப்ஸமிதி ப்ரபோத ஸமயே ய: ப்ரத்யபிஜ்ஞாயதே
தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தயே ॥

**यः**-எந்த, **पुमान्**-புருஷன், **करणोपसंहरणतः**-இந்திரியங்களும், மனதும் அடங்கியிருத்தலால், **सुषुप्तः**-நன்கு தூங்கியவனுக, **मायासमाच्छादनात्**-மாயை மறைப்பதால், **राहुग्रस्तदिवाकरेन्दुसदृशः**-ராஹுவால் மறைக்கப்பட்ட சூரியன், சந்திரன் இவர்களுக்கு ஸமானனுக, **सन्मात्रः**-உண்மைப் பொரு

ளான ஆத்மஸ்வரூபமாக மட்டும், अभूत्-இருந்தானே, यः- எவன், प्रबोधसमये-விழித்துக்கொண்ட சமயத்தில், 'प्राक्- முன்பு, अस्वाप्सं-தூங்கினேன்' इति-என்று, प्रत्यभिज्ञायते- நினைவுபடுத்திக்கொண்டு அறிந்துகொள்ளப்படுகிறானே, तस्मै-அந்த श्रीगुरुमूर्तये - ஸ்ரீமதாசார்யஸ்வரூபரான, श्रीदक्षिणामूर्तये - ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு इदं नमः - இந்த நமஸ்காரம்.

இந்திரியங்களுடன் மனது வேலைசெய்யும் நிலைக்கு ஜாக்ரதவஸ்தை என்று பெயர். இந்திரியங்கள் அடங்கி மனதுமட்டும் வேலை செய்யும் அவஸ்தைக்கு ஸ்வப்னம் என்று பெயர். மனதும் அடங்கிவிட்டால் ஸுஷுப்தி. அந்தசமயம் ஒன்றும் தெரியாததாலும், தான் இருப்பதைக் கூடத் தெரியாததாலும் சூன்யமே தத்வம் என்று பௌத்தர்கள் சொல்கின்றனர். இது சரியல்ல. விசேஷ விக்ஞானம் ஏற்படுவதற்குக் காரணமான இந்திரியம், மனம் முதலிய கருவிகள் அப்பொழுது அடங்கி விட்டபடியால் அவ்வித ஞானம் அப்பொழுது ஏற்படாவிட்டாலும் ஞான ஸ்வரூபமான ஆத்மா தான்மட்டும் அப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டுதான் இருக்கிறது. கிரஹணம் ஏற்படும்பொழுது ராஹுவால் மறைக்கப்பட்டு ஸூர்ய சந்திரர்கள் அப்பொழுது நன்கு தெரியாததுபோல ஆத்ம பிரகாசமும் மாயையால் மறைக்கப்பட்டிருப்பதால் அப்பொழுது நமக்குத்தெரிவதில்லை. ராஹுவால் மறைக்கப் பட்டு ஸூர்ய சந்திரர்கள் தெரியாமல் போனாலும் இவர்களின் ஸத்தையை யாரும் ஆக்ஷேபிப்பதில்லை. ஸூர்ய சந்திரர்கள் இல்லையென்று ஒருவரும் சொல்வது கிடையாது. இதுபோல மாயையால் மறைக்கப்பட்டு ஆத்மபிரகாசம் அப்பொழுது தெரியாமல் போனாலும் அது இல்லையென்று யாரும் சொல்லமுடியாது. " இருந்தால் தெரியும். தெரியாததால் இல்லை " என்று சொல்லலாமெனில் இது சரியல்ல. மனது முதலான கருவிகளில்லாததால்தான் ஆத்மபிரகாசம் தெரியவில்லையே தவிர இல்லாததாலல்ல. கண்ணில்லாத குருடனுக்கு பொருள் தெரியாததால் இது இல்லையென்று சொல்ல முடியுமா?

மேலும் ஸுஷுப்தியில் ஆத்மபிரகாசம் இருந்தது என்பதற்கு நமக்குப் பிரமாணம் இருக்கிறது. காலையில் விழித்து எழுந்தவுடன் "நான் இரவில் ஸுகமாய்த் தூங்கினேன், ஒன்றும் தெரியாது" என்று நினைவு படுத்திக்கொள்கிறான். முன்னால் அநுபவியாததை நினைவு படுத்திக்கொள்ளமுடியாது. பின்னால் நினைவுபடுத்திக் கொள்வதால் முன்னால் அநுபவமிருக்கவேண்டும். அந்த அநுபவம் மாயையால் மறைக்கப்பட்டிருந்தது என்பதைத் தான் "ஒன்றும் தெரியாது" என்று காலையில் சொல் கிறான். ஸுஷுப்தியில் இவனுக்கு ஸுகாநுபவம் ஏற்பட் டிருக்கிறது. வேறு விஷயங்களோ அதை விளக்கும் இந்திரியங்களோ, ஒன்றும் அப்பொழுது இல்லாததால் ஆத்ம பிரகாசத்தால்தான் ஸ்வரூபபூதமான ஸுகம் பிரகாசிக்கிறது. மேலும் "ஒன்றும் தெரியாது" என்று சொல்கிறான். ஒன்றும் தெரியாது என்பது இவனுக்கு எப்படித் தெரிந்தது? இதுவும் ஆத்ம பிரகாசத்தால்தான். தன்னை மறைக்கும் ராஹுவை ஸூர்ய சந்திரர்கள் காட்டு வதுபோல தன்னை மறைக்கும் மாயையை ஆத்மாதான் காட்டுகிறது. இந்த ஆத்மாதான் தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபம். (6)

[அ] முன் சுலோகத்தில் "प्रागस्वाप्समिति प्रबोधसमये यः प्रत्यभिज्ञायते" என்று தூங்கி எழுந்தவுடன் "நான் (ஸுகமாக) தூங்கினேன்" என்று ஸுஷுப்தியில் தனக்கு ஏற்பட்ட அநுபவத்தை நினைவுபடுத்தி அறிந்துகொள்வதால் ஒன்றும் தோன்றாத நிலையாகிய ஸுஷுப்தியிலும் ஆத்மா பிரகாசிக்கிறார் என்பதற்கு பிரத்யபிக்ஞையே பிரமாணமென்றும், மாயையால் அப்பொழுது தெரிவதில்லை யென்றும் கூறப்பட்டது இதில் அந்த பிரத்யபிக்ஞையை விரிவாகக் காட்டி ஆத்மா ஒன்றே ஸ்தாயி (நிலை) யான வஸ்து என்றும், அது தேஹாதிகளைக்காட்டிலும் வேறான தென்பதையும் விவரிக்கிறார்:—

बाल्यादिष्वपि जाग्रदादिषु तथा सर्वास्ववस्थास्वपि
व्यावृत्तास्वनुवर्तमानमहमित्यन्तः स्फुरन्तं सदा ।

स्वात्मानं प्रकटीकरोति भजतां यो मुद्रया भद्रया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर்तये ॥ ७ ॥

பால்யாதிஷ்வபி ஜாக்ரதாதிஷு ததா
ஸர்வாஸ்வவஸ்தாஸ்வபி
வ்யாவ்ருத்தாஸ்வநுவர்த்தமாநமஹமித்யந்த:
ஸ்புரந்தம் ஸதா ।
ஸ்வாத்மாநம் ப்ரகடீகரோதி பஜதாம் யோ முத்ரயா பத்ரயா
தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம இதம்
ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே ॥

व्यावृत्तासु–மாறிமாறி வருகின்ற, बाल्यादिष्वपि-இளமைப் பருவம் முதலியனவும், तथा-அவ்விதமே, जाग्रदादिषु-கனவு முதலியனவுமான, सर्वासु अवस्थास्वपि-எல்லா நிலைகளிலும், अनुवर्तमानं–தொடர்ந்து வருகின்றதும், अन्तः–உள்ளே, सदा–எப்பொழுதும், अहमिति - நான் என்று, स्फुरन्तं-விளங்குகின்றதுமான, स्वात्मानं–தனது ஆத்மஸ்வரூபத்தை, भजतां-பக்தர்களுக்கு, यः-எவர், भद्रया मुद्रया-மங்களகரமான சின் முத்திரையினுல், प्रकटीकरोति-வெளிப்படுத்திக் காட்டுகின்ருரோ, तस्मै–அந்த, श्रीगुरुमूर्तये-ஸ்ரீமதாசார்யஸ்வரூபரான, श्रीदक्षिणामूर्तये-ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு, इदं नमः–இந்த நமஸ்காரம்.

உலகில் பிறக்கின்ற பிராணிகளுக்கெல்லாம் முதலில் பால்யாவஸ்தையும், பிறகு அது போய் யௌவனுவஸ்தையும், பிறகு கிழப்பருவமும் ஏற்படுகிறது. பிறகு இந்த சரீரத்தைவிட்டு வேறு சரீரத்தை அடைந்ததும் அங்கும் இம்மாதிரியே பால்யம் முதலிய அவஸ்தைகள் ஏற்படுகின்றன. இவைகளில் முன் அவஸ்தை போய்த்தான் பின் அவஸ்தை வருகிறது. யௌவனம் வந்தால் பால்யம் போய்விடுகிறது. கிழப்பருவம் வந்தால் முன் இரண்டும் போய்விடுகின்றன இரண்டு அவஸ்தைகள் சேர்ந்திருப்பதில்லை. மாறி மாறியே வருகின்றன. இதுபோலவே தான் ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற அவஸ்தைகளும்

மற்றுமுள்ள எல்லா அவஸ்தைகளும் மாறி மாறி வருகின்றன. இவைகள் எல்லாம் தேஹத்தை ஒட்டி ஏற்படுவன. இவ்விதம் மாறி மாறி வருகின்ற எல்லா அவஸ்தைகளிலும் நான் என்ற ஆத்மா ஒருவன் மட்டும் தொடர்ந்து வருகின்றான். 'எந்த நான் தூக்கத்தில் கனவு கண்டேனோ, பிறகு ஒன்றுமறியாமல் ஸுகமாகத் தூங்கினேனோ, அந்த நான் இப்பொழுது விழித்துக்கொண்டிருக்கிறேன்'' என்று கூறுகிறான். இதுபோல ''எந்த நான் குழந்தையாக இருந்தேனோ, பிறகு வாலிபனாயிருந்தேனோ அந்த நான் இப்பொழுது கிழவனாக இருக்கிறேன்'' என்று கூறுகிறான். இதில் அவஸ்தைகள் மாறி மாறி வந்தபோதிலும் நான் என்பது ஒன்றாகவே வருகிறது. இதைத்தான் சாஸ்திரங்களில் பிரத்யபிக்ஞை என்கிறார்கள். அதாவது ஒரு பொருளை நேரில் பார்க்கும்பொழுது அதேபொருளை முன்பு மற்றோர் ஸந்தர்ப்பத்தில் தான் பார்த்ததை ஞாபகப்படுத்தி அறிந்து கொள்வதற்கு பிரத்யபிக்ஞை என்று பெயர். ஸ்ரீரங்கத்தில் தான் முன்பு பார்த்த ஒருவனை சிலநாள் கழித்து சிதம்பரத்தில் பார்க்கும்பொழுது முன்பு பார்த்ததை ஞாபகப்படுத்திக் கொண்டு அவனே இவன் என்று அறிந்துகொள்கிறான். இங்கு காலதேசங்கள் மாறுபட்டாலும் இரண்டு இடங்களிலும் தோன்றின மனிதன் ஒருவனே. இதுபோல பால்யம் முதலான அவஸ்தைகள் மாறுபட்டாலும் எல்லா அவஸ்தைகளிலும் ஒரே மாதிரியாக நான் என்று தோன்றுகிற ஆத்மா ஒருவனே. அவன் எப்பொழுதும் மாறுபடாமல் ஒரேமாதிரியாக ஸ்தாயியாக இருக்கிறான்.

மேலும் அவஸ்தைகள் மாறுபட்டுப்போவதாலும் ஆத்மா மாறுபடாமல் ஒரேமாதிரியாயிருப்பதாலும் ஆத்மா அந்த அந்த அவஸ்தைகளுடனோ, அவஸ்தைகளுடன் கூடிய சரீரத்துடனோ உண்மையில் ஸம்பந்தப்பட்டவனல்ல. பலவித பூக்களாலாகிய மாலையில் பூக்கள் மாறி மாறி இருந்தபோதிலும் எல்லாப் பூக்களிலும் ஒரே நூல் தொடர்ந்து வருகிறது. அது பூக்களைக் காட்டிலும் வேறானது என்பது எல்லோருமறிந்த விஷயம். இவ்விதம்

விவேசனம் செய்து பார்த்தோமானால் அவஸ்தைகளுடன் கூடிய தேஹாதிகளைக் காட்டிலும் ஆத்மா விலக்ஷணன் என்பது தெரியவரும். இவ்விதம் ஆத்மாவை சோதனம் செய்து பிரித்துத் தெரிந்துகொண்டோமேயானால் அதுவே ப்ரஹ்மமாகிறது.

இவ்விஷயத்தை ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி குருவானவர் தன்னை ஆச்ரயித்த சிஷ்யர்களுக்கு பத்ரை என்ற சின் முத்ரையால் விளங்கவைக்கிறார். சின்முத்ரைக்கே பத்ரா முத்ரை என்றும் பெயர் உண்டு. ஆள்காட்டிவிரலை சிறு விரல், மோதிரவிரல், நடுவிரல் என்ற மூன்று விரல்களிலிருந் தும் பிரித்து அதன் நுனியை கட்டைவிரலின் நுனியோடு சேர்த்து வைத்துக்கொண்டால் அதற்கு சின்முத்ரை என்று பெயர். கட்டைவிரல் பரமாத்மாவையும், ஆள்காட்டிவிரல் ஜீவாத்மாவையும், முதல் மூன்று விரல்கள் முக்குணங்களை யும் அதன் கார்யங்களையும் குறிக்கும். ஜீவன் முக்குணங் களுடன் சேர்ந்திருக்கும் வரையில்தான் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறாகத் தோன்றுகிறான். அதைவிட்டுப் பிரித்துவிட்டால் ஜீவன் ப்ரஹ்மத்துடன் சேர்ந்துவிடுகிறான். இது குருவின் உபதேசத்தால்தான் அறியத்தக்கது. (7)

[அ] இதுவரை ஏழுசுலோகங்களால் ஞானஸ்வரூப மான ஆத்மா ஒன்றே உண்மைப் பொருள். இதைத்தவிர இரண்டாவது பொருள் உண்மையில் கிடையாது என்று தீர்மானிக்கப்பட்டது. இவ்விதமானால் பந்தம், மோக்ஷம், சிஷ்யன், ஆசார்யன், அவருடைய உபதேசம் என்ற பேதங்கள் எல்லாம் எவ்விதமேற்பட்டது என்ற கேள்விக்கு விடை கூறுகிறார்:—

विश्वं पश्यति कार्यकारणतया स्वस्वामिसंबन्धतः
शिष्याचार्यतया तथैव पितृपुत्राद्यात्मना भेदतः ।
स्वप्ने जाग्रति वा य एष पुरुषो मायापरिभ्रामित-
स्तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ८ ॥

விச்வம் பச்யதி கார்ய காரணதயா ஸ்வஸ்வாமி ஸம்பந்ததः
ஶிஷ்யாசார்யதயா ததைவ பித்ரு புத்ராத்யாத்மநா பேதத: |
ஸ்வப்நே ஜாக்ரதி வா ய ஏஷ புருஷோ மாயா பரிப்ராமித:
தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தயே ||

**यः**-எந்த, **एष पुरुषः**-இந்த புருஷன், **मायापरिभ्रामितः**-மாயையால் மிகுந்த மோஹத்தை அடைந்தவனாய், **स्वप्ने**-கனவிலும், **जाग्रति वा**-விழித்துக்கொண்டிருக்கும் நிலையிலும் **कार्यकारणतया** - கார்யம் காரணம் என்பதாகவும், **स्वस्वामिसंबन्धतः**-உடைமை, யஜமானன் என்ற ஸம்பந்தம் உள்ளதாகவும், **शिष्याचार्यतया**-சிஷ்யன், ஆசார்யன் என்பதாகவும் **तथैव**-அவ்விதமே, **पितृपुत्राद्यात्मना**-தந்தை, தநயன் முதலிய ரூபமாகவும், **विश्वं**-பிரபஞ்சத்தை, **भेदतः**-வேற்றுமையுள்ளதாக, **पश्यति**-காண்கிறானோ, **तस्मै**-அந்த, **श्रीगुरुमूर्तये**-ஸ்ரீமதாசார்யமூர்த்தியான, **श्रीदक्षिणामूर्तये** - ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு, **इदं नमः**-இந்த நமஸ்காரம்.

இரவில் படுத்துத் தூங்குகின்றவன் நித்ரையால் மயங்கியவனாய் தான் ஒருவனாயிருந்தும் ஸ்வப்னத்தில் பல பொருள்களைக் காண்கிறான். மனது ஒன்றே பார்க்கும் கருவியாகவும் பார்க்கப்படும் பொருளாகவும் ஆகிறது. நித்ரை என்ற தோஷத்தால் பலவித வேற்றுமைகள் உள்ளதாக இவன் காண்கிறான். இவன் பார்க்கும் பொருள்களெல்லாம் உண்மையில் அங்கு இல்லை. எல்லாம் தோற்றமே. இதேபோல அனாதியான மாயையால் மோஹத்தை அடைந்த ஜீவன் பலவித வேற்றுமை கொண்ட பிரபஞ்சத்தைக் காண்கிறான். கார்யமென்றும் காரணமென்றும், வேலைக்காரனென்றும், யஜமானனென்றும், சிஷ்யன் என்றும் குருவென்றும், தந்தையென்றும் மகனென்றும், இன்னும் இதுபோல கணக்கிலடங்காத பலவித பேதங்களோடு கூடியதாகத் தோன்றும் இப்பிரபஞ்சமும் வாஸ்தவமல்ல. வெறும் தோற்றமே. ஸ்வப்னத்தில் போல இங்கும் ஒரே ஆத்ம வஸ்துதான் மாயையால் பல வாறாகத் தோன்றுகிறது. ஸ்ரீ ஸத்குருவின் உபதேசத்தால்

ஞானம் ஏற்பட்டு மாயை நீங்கும்வரை இந்த வேற்றுமை தோன்றிக்கொண்டுதானிருக்கும். விழித்துக்கொள்ளும்வரை ஸ்வப்னம் தோன்றிக்கொண்டிருக்கவில்லையா? ஒரே மனிதன் தந்தையைக் குறித்து மகனென்றும், மகனைக் குறித்து தந்தையென்றும் கூறப்படுவதுபோல ஒரே ஆத்மா பல பெயர்களால் கூறப்படுகிறான். சப்தம்தான் வேறு. பொருள் ஒன்றே.

எல்லாம் பொய் எனில் பொய்யான பிரபஞ்சத்திலுள்ள உபநிஷத்தைக்கொண்டும், குருவைக்கொண்டும், அவருடைய உபதேசத்தைக்கொண்டும் உண்மையான ப்ரஹ்மத்தை எவ்வாறு அறிந்துகொள்ள முடியும்? என்று கேட்கலாம். உண்மையை அறிந்துகொள்வதற்கு அதன் ஸாதனமும் உண்மையாகத்தான் இருக்கவேண்டுமென்பது கட்டாயமில்லை. பொய்யாலும் உண்மையை அறிந்து கொள்ளலாம். காரணம் பொய்யாக இருந்தாலும் அதனால் ஏற்படும் கார்யம் உண்மையாக இருக்கலாம். கயிறில் தோன்றின பாம்பு பொய்யாயிருந்தாலும் அதைக்கண்டு பயந்து நடுங்கி ஓடிப்போகிறான். பிறகு கயிறு என்று தெரிந்தவுடன் பாம்பு மறைந்து போனாலும் முன்னால் ஏற்பட்ட பயம், நடுக்கம், வியர்வை முதலியவை உண்மையாகவே இருக்கிறது. இரவில் திண்ணையில் படுத்துத் தூங்கும்பொழுது கனவில் கண்ட புலி பொய்யாயிருந்தாலும் அதைக் கண்ட பயத்தால் திண்ணையிலிருந்து கீழே விழுந்ததால் ஏற்பட்ட உடம்பின் காயம் உண்மையாகவே இருக்கிறது. இதுபோல் சாஸ்திரம், குரு, உபதேசம் இவை பொய்யாயிருந்தாலும் அதனால் உண்மையான ப்ரஹ்மத்தை அறிந்துவிடுகிறான். கனவுகாணும் பொழுதே புலியைக் கண்டு பயந்து நடுங்கி அதன் மூலமே சிலசமயம் சிலர் கனவு நீங்கி விழித்துக்கொள்வதுபோல பிரபஞ்சம் முழுதும் பொய்யாயிருந்தாலும் அதிலுள்ள குருவைத்தேடி உபநிஷத்துக்கள் மூலம் ஆத்ம விசாரம் செய்யும் சிஷ்யனுக்கு அதன் மூலமே ஞானம் ஏற்பட்டு மாயை நீங்கி உண்மை பிரகாசிக்கிறது. பிறகு எல்லாத் துன்பங்களும் நீங்கி ஆனந்தத்தை அடைகிறான். (8)

[அ] இதுவரை உபநிஷதர்த்தத்தை குருமுகமாக விசாரித்து ஆத்மாவை ப்ரஹ்மமாக அறிவதென்ற ஞான மார்க்கம் உத்தமாதிகாரிகளுக்குக் கூறப்பட்டது. அதற்குத் திறமையில்லாத மந்தாதிகாரிகளுக்கு ஞானத்திற்கு ஸாதனமாக ஈசுவரோபாஸனத்தை இதில் கூறுகிறார்:—

भूरम्भांस्यनलोऽनिलोऽम्बरमहर्नाथो हिमांशुः पुमा-
नित्याभाति चराचरात्मकमिदं यस्यैव मूर्त्यष्टकम् ।
नान्यत्किंचन विद्यते विमृशतां यस्मात्परस्माद्विभो-
स्तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ९ ॥

பூரம்பாம்ஸ்யநலோऽநிலோம்பரமஹர்நாதோ ஹிமாம்ஶு:
புமான்
இத்யாபாதி சராசராத்மகமிதம் யஸ்யைவ மூர்த்யஷ்டகம்
நாந்யத் கிஞ்சந வித்யதே விம்ருஶதாம் யஸ்மாத்
பரஸ்மாத் விபோ:
தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம இதம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே ||

**चराचरात्मकं**—ஜங்கமமாயும் ஸ்தாவரமாயும் உள்ள, **इदं**—இந்த பிரபஞ்சம், **भूः**—பூமி, **अम्भांसि**—ஜலம், **अनलः**-தேஜஸ், **अनिलः**-வாயு, **अम्बरं**-ஆகாசம், **अहर्नाथः**-சூரியன், **हिमांशुः**-சந்திரன், **पुमान्**-புருஷன் (யஜமானன்), **इति**-என்று **यस्य**-எவருடைய, **मूर्त्यष्टकमेव** - எட்டு சரீரங்களாகவே, **आभाति** - விளங்குகிறதோ, **विमृशतां** - (உண்மையை) ஆராய்ந்து பார்ப்போர்களுக்கு, **यस्मात्**-எந்த, **परस्मात् विभोः**-வியாபகமான பரம்பொருளைக் காட்டிலும், **अन्यत्**-வேறு, **किंचन**-ஒன்றும், **न विद्यते**-இல்லையோ, **तस्मै**-அந்த, **श्रीगुरुमूर्तये**-ஸ்ரீமதாசார்யஸ்வருபரான, **श्रीदक्षिणामूर्तये**-ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு, **इदं**-இந்த, **नमः**-நமஸ்காரம்.

பரமேச்வரனுக்கு "அஷ்டமூர்த்தி" என்று ஒரு பெயர். எட்டு சரீரங்களை உடையவர் என்பது இதன் பொருள். பிருதிவி, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம், ஸூர்யன், சந்திரன், யஜமானன் என்று பிரபஞ்சத்தை எட்டாகப்

பிரித்து இந்த எட்டும் ஈசுவரனது சரீரம் என்று சொன்னதால், பிரபஞ்சம் முழுவதும் ஈச்வரனுடைய சரீரம் என்று ஆகிறது. உபநிஷத்துக்கள் மூலம் ஆத்ம விசாரம் செய்து பிரபஞ்சத்தை பொய் என்று அறிந்து நிர்குணமான பிரஹ்மத்தை அறிய சக்தியில்லாதவர்கள் பிரபஞ்சம் முழுவதையும் ஈசுவரனுக பாவித்து அந்த ஸர்வாத்மகமான அஷ்டமூர்த்தியான ஈசுவரனே நான் என்று தியானம் செய்ய வேண்டும். இவ்விதம் நிரந்தரமாக தியானம் செய்தால் அந்த ஈசுவரனுடைய பூர்ணநுக்ரஹத்தை அடைந்து அதன் மூலம் பரமாத்மா ஒன்றே ஸத்யம், அவரைத் தவிற இரண்டாவது பொருள் உண்மையில் கிடையாது. பிரபஞ்சம் முழுவதும் அவரிடம் ஆரோபிதம், வாஸ்தவமல்ல என்ற ஞானத்தை அடைந்து முன் சுலோகங்களில் கூறப்பட்ட ஞான ஸ்வரூபமான பரப்ரஹ்மஸாக்ஷாத்காரத்தை அடைகிறான். (9)

[அ] இவ்வாறு ஒன்பது சுலோகங்களால் பரமாத்ம ஸ்வரூபத்தையும் அதை அறியும் ஸாதனங்களையும் கூறிவிட்டு முடிவில் இந்த ஸ்தோத்திரத்தைக்கேட்பது, படிப்பது முதலானதுகளாலுண்டாகும் பலனைக் கூறுகிறார்:—

सर्वात्मत्वमिति स्फुटीकृतमिदं यस्मादमुष्मिंस्तवे
तेनास्य श्रवणात्तदर्थमननाद्ध्यानाच्च संकीर्तनात् ।
सर्वात्मत्वमहाविभूतिसहितं स्यादीश्वरत्वं स्वतः
सिद्ध्येत्तत्पुनरष्टधा परिणतं चैश्वर्यमव्याहतम् ॥ १० ॥

ஸர்வாத்மத்வமிதி ஸ்புடீக்ருதமிதம்
யஸ்மாதமுஷ்மிம்ஸ்தவே
தேநாஸ்ய ச்ரவணாத் ததர்த்தமநநாத் த்யாநாச்ச
ஸங்கீர்த்தநாத்
ஸர்வாத்மத்வ மஹாவிபூதி ஸஹிதம் ஸ்யாதீச்வரத்வம்
ஸ்வத:
ஸித்த்யேத் தத் புநரஷ்டதா பரிணதம்
சைச்வர்யமவ்யாஹதம் ॥

इति-இவ்வாறு, अमुष्मिन्-இந்த, स्तवे-ஸ்தோத்திரத்தில் यस्मात्-யாதொரு காரணத்தால் इदं-இந்த, सर्वात्मत्वं-(ஸார்வாத்ம்யம்) எல்லாமாக இருக்கும் தன்மை, स्फुटीकृतं-நன்கு விளக்கிக் காட்டப்பட்டதோ, तेन-அதனால், अस्य श्रवणात्-இதை சிரவணம் செய்வதாலும், तदर्थमननात्-அதிலுள்ள விஷயங்களை சிந்தனம் செய்வதாலும், ध्यानात्-த்யானம் செய்வதாலும், संकीर्तनाच्च-திருப்பித்திருப்பிக்கூறுவதாலும், सर्वात्मत्वमहाविभूतिसहितं-ஸர்வாத்மாவாக இருத்தல் என்ற பெரிய பெருமையுடன்கூடிய ईश्वरत्वं-ஈச்வரபாவம் स्यात्-ஏற்படும். पुनः-மேலும், अष्टधा-எட்டுவிதமாக, परिणतं-அமைந்துள்ள, अव्याहतं-தடையில்லாத, तत्-அந்த, ऐश्वर्यं च-அணிமா முதலான ஐசுவர்யமும், स्वतः-தானுகவே, सिद्ध्येत्-கிடைக்கும்.

இந்த ஸ்தோத்திரத்தில் ஸர்வமும் பரமாத்ம ஸ்வரூபம், அவரைத்தவிற வேறு ஒன்றுமில்லை என்பது நன்கு விவரிக்கப்பட்டது. ஆதலால் இதைப் படித்து முறையாக சிரவணம், மனனம், த்யானம் செய்கிறவர்களும் பிறருக்கு சொல்கிறவர்களும் ஸர்வாத்மாவான ஈசுவரனின் நிலையை அடைகிறார்கள். குறுகிய சரீரத்தில் நான் என்ற எண்ணம் நீங்கி ஸர்வமும் நான் என்ற பூர்ணமான அஹம்பாவம் ஏற்படுவதுதான் இந்த ஸ்தோத்திரத்தின் முக்கியப் பலன். குளிர் காலத்தில் சமைப்பதற்காக அடுப்பு மூட்டி அதன் அருகில் உட்கார்ந்து சமைக்கிறவனுக்கு அந்த நெருப்பால் சமையல் ஆவதுடன் இவனுடைய குளிரும் நீங்குவதுபோல் இந்த ஸ்தோத்ரத்தால் மேலே கூறப்பட்ட முக்ய பலன் ஏற்படுவதுடன் அணிமா, மஹிமா, லகிமா, கரிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என்ற அஷ்ட ஸித்திகளும் தனம், தான்யம், புத்ரன் முதலான இம்மைச் செல்வங்களும் இடையே ஏற்படுகின்றன. ஆனாலும் சமையல் செய்பவன் குளிர் நீங்குவதுடன் திருப்தியடையாமல் சமையல் முடியும் வரை நெருப்பைக் காப்பாற்றிக்கொண்டு அதிலேயே முனைந்திருப்பான்! அதுபோல விவேகியாயுள்ளவன் அல்பமான அஷ்டைசுவர்யம், மற்றுமுள்ள ஐஹிக போகங்களில் ஆசை

வைக்காமல் அவை தானாக கிடைத்தாலும் அத்துடன் திருப்தியடையாமல் இந்த ஸ்தோத்திரத்தைக் கொண்டு மஹா பலமான ஈசுவரபாவத்தை அடையவே முயற்சிக்க வேண்டும். அல்ப பலத்தில் ஆசைவைத்தால் மஹா பலம் கிடைக்காமல் போவதுடன் கிடைத்த அல்பபலமும் அநித்ய மானதால் ஒருகாலத்தில் அதுவும் தன்னைவிட்டு நீங்கிவிடும். ஆனாலும் முற்றும் ஆசையைத் துறக்க முடியாதவர்கள் இந்த ஸ்தோத்ரத்தைக்கொண்டே ஐஹிகமாயும் ஆமுஷ்மிக மாயுமுள்ள ஸகல போகங்களையும் பெறலாம். (10)

[वटविटपिसमीपे भूमिभागे निषण्णं
सकलमुनिजनानां ज्ञानदातारमारात् ।
त्रिभुवनगुरुमीशं दक्षिणामूर्तिदेवं
जननमरणदुःखच्छेददक्षं नमामि ॥]

வடவிடபி ஸமீபே பூமிபாகே நிஷண்ணம்
ஸகல முனிஜநாநாம் ஞான தாதாரமாராத் ।
த்ரிபுவன குருமீசம் தக்ஷிணாமூர்த்தி தேவம்
ஜநந மரண துக்க ச்சேத தக்ஷம் நமாமி ॥

**वटविटपिसमीपे**–ஆலமரத்திற்கருகில், **भूमिभागे**-பூமியில், **निषण्णं**–அமர்ந்திருப்பவரும், **सकलमुनिजनानां**–எல்லா முனிவர்களுக்கும், **ज्ञानदातारं**–ப்ரஹ்ம ஞானத்தை அருளுபவரும், **त्रिभुवनगुरुं**-மூவுலகுக்கும் குருவும், **ईशं**-ஈசனும், **जननमरण-दुःखच्छेददक्षं**–பிறவி, சாவு இவைகளினால் ஏற்படும் துன்பங்களைப் போக்குவதில் திறமை உள்ளவருமான, **दक्षिणा-मूर्तिदेवं**-ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திதேவரை, **नमामि**-வணங்குகிறேன்.

மூவுலகங்களுக்கும் குரு ஈசுவரனே தான். உலகமாந்தர்கள் உண்மை தெரியாது மாயையால் மயங்கி தோன்றுவதை எல்லாம் உண்மை என எண்ணி ஆசைகொண்டு மீளமுடியாமல் ஸம்ஸாரஸாகரத்தில் துன்புறுகின்றனர். பிறவி, மரணம் முதலான துன்பங்களை அடியோடு போக்கக் கருணையால் ஈசுவரனே தக்ஷிணாமூர்த்தி உருவம்கொண்டு

ஆலமரத்தடியில் பூமியில் தெற்கு முகமாக அமர்ந்து விட்டார். உடன் எல்லா முனிவர்களும் சீடர்களாக அங்கு வந்துவிட்டனர். அவர்களுக்கு ஞானத்தை உபதேசிக்கும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியை வணங்குகிறேன்.

[ चित्रं वटतरोर्मूले वृद्धाः शिष्या गुरुर्युवा ।
गुरोस्तु मौनं व्याख्यानं शिष्यास्तु छिन्नसंशयाः ॥]

சித்ரம் வடதரோர் மூலே வ்ருத்தா: ஶிஷ்யா குருர் யுவா ।
குரோஸ்து மௌநம் வ்யாக்யாநம் ஶிஷ்யாஸ்து
ச்சிந்ந ஸம்ஶயா: ॥

**वटतरोः**–ஆலமரத்தின், **मूले**-அடியில், **चित्रं**-ஆச்சர்யம்! **शिष्याः**–சீடர்கள், **वृद्धाः**–வயது முதிர்ந்தவர்கள். **गुरुः**–ஆசிரியர், **युवा**–வாலிபர், **गुरोस्तु**–ஆசிரியருக்கோ, **मौनं**–பேசாமலிருப்பதே, **व्याख्यानं**–கற்றுக்கொடுக்கும் முறை. **शिष्यास्तु**–சிஷ்யர்களோவெனில், **छिन्नसंशयाः**–எல்லா ஸந்தேஹங்களும் நீங்கினவர்களாக ஆய்விடுகின்றனர்.

குருவாக வந்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஆலமரத்தடியில் வாலிபப்பருவமுள்ளவராகக் காணப்படுகிறார். அவரிடம் உபதேசம் பெறுவதற்குவந்த சிஷ்யர்களான முனிவர்களோ மிகவும் வயதானவர்கள். குரு வாய்திறந்து பேசாமலே உபதேசம் செய்கிறார். இதனாலேயே சிஷ்யர்களின் ஸந்தேஹங்கள் எல்லாம் நீங்கிவிடுகின்றன. உலகில் காணாத இரண்டு அதிசயங்கள் ஆலமரத்தடியில் ஏற்பட்டன. ஆசிரியர் வயதானவராகவும், சிஷ்யர்கள் சிறுவர்களாகவும் இருப்பதைத் தான் உலகில் காண்கிறோம். இதற்கு நேர் மாறாக குரு சிறுவராயும் சிஷ்யர்கள் வயதானவர்களாயும் இருப்பது ஓர் அதிசயம். இரண்டாவது குரு வாய் திறவாமலேயே சிஷ்யர்களின் ஸந்தேஹங்களைப்போக்குவது வாயைத்திறந்து ஒரு வார்த்தைகூட உபதேசிக்காமலே சிஷ்யர்களுக்கு ஞானம் ஏற்பட்டு ஸம்சயம் நீங்குவதை எங்கும் கண்டதில்லை. வார்த்தை பேசாமல் மௌனமாய் இருப்பதைக்கொண்டே பிரஹ்மம் வாக்குக்கு எட்டாதது என்று சிஷ்யர்கள் அறிந்துகொள்கின்றனர்.

[ अंगुष्ठतर्जनीयोगमुद्राव्याजेन देहिनाम् ।
श्रुत्यर्थं ब्रह्मजीवैक्यं दर्शयन्नोऽवताच्छिवः ॥ ]

அங்குஷ்ட தர்ஜநீ யோக முத்ரா வ்யாஜேந தேஹிநாம் ।
ச்ருத்யர்த்தம் ப்ரஹ்மஜீவைக்யம் தர்ஶயந் நோவதாத்ஶிவ:॥

अंगुष्ठतर्जनीयोग-கட்டைவிரலும், ஆள்காட்டி விரலும், சேர்ந்துள்ள, मुद्राव्याजेन-சின்முத்ரை என்ற வியாஜத்தினுல், देहिनां-மனிதர்களுக்கு, श्रुत्यर्थं-உபநிஷத்தின் தாத்பர்யமான, ब्रह्मजीवैक्यं-ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்று என்ற அத்வைதத்தை दर्शयन्-காட்டுகின்ற, शिवः-பரமசிவன், नः-நம்மை, अवतात्-காப்பாற்றட்டும்.

தக்ஷிணாமூர்த்தி வாய் திறந்து பேசாவிட்டாலும் கட்டைவிரலையும் ஆள்காட்டிவிரலையும் சேர்த்து சின் முத்ரையைக் காட்டுகின்ருர். கட்டைவிரல் ப்ரஹ்மத்தைக் குறிக்கிறது. ஆள்காட்டிவிரல் ஜீவனைக்காட்டுகிறது. இரண்டையும் சேர்த்துக் காட்டுவதால் இதன்மூலம் ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்று என்று உபதேசிக்கிருர். இந்த அத்வைதத்தில்தான் உபநிஷத்துக்களுக்குப் பரம தாத்பர்யம்.





॥ श्रीः ॥

# ॥ अद्वैतानुभूतिः ॥

# அத்வைதாநுபூதி:

[அத்வைதானுபூதி 84 சுலோகங்கள் கொண்ட சிறிய பிரகரணம். குருமுகமாக வேதாந்த சிரவணம் செய்தவனுக்கு மனதில் தோன்றும் ஸந்தேஹங்கள் எல்லாம் நீங்கி அத்வைதானுபவம் ஏற்பட ஏராளமான யுக்திகள் இதில் காட்டப்பட்டிருக்கின்றன. ஒரு பொருள் வேறொரு பொருளாகவும், பலவாகவும் தோன்றுவதற்கு திருஷ்டாந்தங்களைக் காட்டி ஒரே ஆத்மா பல பிரிவுகளுள்ள பிரபஞ்சமாகத் தோன்றுகிறது என்பதைத் தீர்மானிக்கிறார். எங்கும் பரவியுள்ள ஆத்மாதான் ஸச்சிதானந்த வஸ்து. அக்ஞானத்தால் பிரபஞ்சத்தை அவ்வாறு நினைக்கிறோம். ஆத்ம தர்மங்கள் பிரபஞ்சத்தில் தோன்றுகிறதே தவிற பிரபஞ்சத்திற்குள் அதிலும் தேஹாதிகளுக்குள் ஆத்மா இருந்தாலும் அவைகளின் தர்மங்கள் ஆத்மாவுக்குக் கிடையாது. ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களிலிருந்து ஆத்மா வேறுபட்டவன். ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற அவஸ்தைகள் சரீரத்திற்கே தவிற ஆத்மாவுக்குக் கிடையாது. இவ்வாறு ஆத்மானாத்ம விவேசனம் செய்து இந்த ஆத்மாவே ப்ரஹ்மம் என்று அத்வைதத்தை நிரூபணம் செய்கிறார்]

अहमानन्दसत्यादिलक्षणः केवलः शिवः ।
सदानन्दादिरूपं यत्तेनाहमचलोऽद्वयः ॥ १ ॥

அஹமானந்தஸத்யாதிலக்ஷண: கேவல: ஶிவ: ।
ஸதானந்தாதிரூபம் யத் தேநாஹமசலோऽத்வய: ॥

अहम्-நான், आनन्दसत्यादिलक्षणः-ஆனந்தம், ஸத்யம் முதலியவைகளை லக்ஷணமாகக் கொண்டவனும், केवलः-ஒருவித தர்மமுமற்றவனும், शिवः-ஸாக்ஷியுமானவன். यत्-யாதொரு ப்ரம்மம், सदानन्दादिरूपं-ஸத், ஆனந்தம் முதலான ரூபமுடையதோ, (तत्-அதே நான்), तेन-அதனால்

अहं-நான், अचलः-சலனமற்றவனும், अद्वयः-இரண்டற்றவனாகவுமிருக்கிறேன்.

நான் ஸத்யமாயும் ஞானமாயும், ஆனந்தமாயும் யாதொரு தர்மமும் அற்றவனும் ஸாக்ஷியாயுமிருப்பவன். எந்த ப்ரஹ்மம் ஸத், ஞான, ஆனந்த வடிவாக உளதோ, அதுவே நான். இருவருக்கும் லக்ஷணத்தில் வேறுபாடு இல்லாததால் வ்யாபகமானதும் இரண்டற்றதுமான ப்ரம்ம வஸ்துவே நான். ஆத்மா ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி, ஸமாதி, மூர்ச்சை என்ற எல்லா நிலைகளிலும் இருக்கிறேன் என்று அறிவதால் ஸத்ரூபமானது. எல்லா நிலைகளிலும் மற்றொரு பிரகாசத்தை அபேக்ஷிக்காமல் தானே விளங்குவதால் சித்ரூபமானது. எல்லையற்ற ப்ரீதிக்கு விஷயமாய் இருப்பதால் ஆனந்தரூபமானது என்று தெரியவருகின்றது. இவ்வாறே வேதாந்தங்களில் सत्यं ज्ञानमनन्तम् (ஸத்யம் ஞானமனந்தம்) विज्ञानमानन्दं ब्रह्म (விக்ஞானமானந்தம் ப்ரஹ்ம) என்று ப்ரஹ்மலக்ஷணம் சொல்லப்படுகிறது எந்த வஸ்துக்களுக்கு லக்ஷணத்தில் வேற்றுமை இல்லையோ அது ஒன்றே என்ற முறைப்படி நானே ப்ரம்மம். எந்த வஸ்துவின் ஸம்பந்தத்தால் எந்த வஸ்து தோன்றுகின்றதோ அது அதில் தோன்றுவதாகும். எவ்வாறெனில் கயிற்றில் இது ஸர்ப்பம், இது தண்டம் என்று தோன்றுகிறது. ஒவ்வொன்றிலும் இது, இது என்று ஸம்பந்தம் தோன்றுவதால் அந்தக் கயிற்றில் ஸர்ப்பம் முதலியவை தோற்றமாகும். மேலும் தங்கத்தில் செய்த ஆபரணங்கள் ஒவ்வொன்றிலும், தங்கக் காப்பு, தங்கக்குண்டலம், என்று தங்கம் தங்கம் என்று ஸம்பந்தம் தோன்றுவதால் தங்கத்தை தவிர ஆபரணங்கள் வேறல்ல. அவ்வாறே सद्धीदं सर्वं सत्सत् (ஸத் ஹி இதம் ஸர்வம் ஸத்ஸத்) चिद्धीदं सर्वं काशते काशते इति (சித் ஹி இதம் ஸர்வம் காஶதே காஶதே இதி) என்ற வாக்யப்படி கடம் இருக்கின்றது, படம் இருக்கின்றது என்று தோன்றுவதினால் ஸத்வஸ்துவில் ஸகல ஜகத்தும் தோன்றுகின்றது. அந்த ஸத்வஸ்து ஒன்றே உண்மையாகும் सदेव सत्यम् (ஸதேவ ஸத்யம்) என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஜகத்

தோற்றம் என்று சொல்வதுபோல் ஜீவன் ஈச்வரன் என்ற பேதமும் மாயை அந்தக்கரணம் என்ற உபாதி பேதத்தினுல் கல்பிதமே. ஆகையால் ஜீவன் ஈச்வரன் ஜகத் இவைகளுக்குள் பேதம் கிடையாது. மாயையினுலேயே தோன்றுகின்றது. அதுவும் கல்பிதமாகையால் அத்வைதம் ஸித்தம் என்று முதல் சுலோகத்தினுல் எல்லா வேதாந்தப் பொருள்களையும் பகவத்பாதாள் அநுபவமூலம் விளக்குகிருர்கள். (1)

(அ) பேதம் தோன்றுவதின் காரணமாவது :—

अक्षिदोषाद्यथैकोऽपि द्वयवद्भाति चन्द्रमाः ।
एकोऽप्यात्मा तथा भाति द्वयवन्मायया मृषा ॥ २ ॥

அக்ஷிதோஷாத் யதைகோபி த்வயவத் பாதி சந்த்ரமா: ।
ஏகோப்யாத்மா ததா பாதி த்வயவந்மாயயா ம்ருஷா ॥

**चन्द्रमाः**—சந்திரன் **एकोऽपि**—ஒன்ருக இருந்தபோதிலும், **अक्षिदोषात्**-கண்ணில் உள்ள காசம் முதலான தோஷத்தினுல் **यथा**—எவ்விதம், **द्वयवत्**—இரண்டு போல, **भाति**—தோன்றுகின்றதோ, **तथा**—அவ்விதமே, **आत्मा**-ஆத்மாவானது, **एकोऽपि**—ஒன்ருக இருப்பினும், **मायया**—அக்ஞானத்தினுல், **मृषा**—பொய்யாக **द्वयवत्**—இரண்டாக இருப்பதுபோல் (அநேகமாக) **भाति**-தோன்றுகின்றது.

ஒருவனுகிய சந்திரன் கண்களின் கோளாறினுல் இருவனுகத் தோன்றுவதுபோல், ஒன்ருகிய ஆத்மா, மாயையினுல் பொய்யாக இரண்டாகத் தோன்றுகின்றது. இதற்குச் சான்ருக **मायामात्रमिदं द्वैतमद्वैतं परमार्थतः** (மாயாமாத்ரமிதம் த்வைதம் அத்வைதம் பரமார்த்தத:) என்ற வாக்யங்களும் உள்ளன. (2)

(அ) பேதம் நீங்குவதற்குக் காரணம் உதாரணமூலம் விளக்கப்படுகின்றது :—

अक्षिदोषविहीनानामेक एव यथा शशी ।
मायादोषविहीनानामात्मैवैकस्तथा सदा ॥ ३ ॥

அக்ஷிதோஷவிஹீநாநாமேக ஏவ யதா ஶஶீ ।
மாயாதோஷவிஹீநாநாமாத்மைவைகஸ்ததா ஸதா ॥

**शशी**-சந்திரன், **अक्षिदोषविहीनानां**-கண்ணில் குற்றமில்லாதவர்களுக்கு, **यथा**-எவ்விதம், **एक एव**-ஒன்றுதானே, **तथा**-அவ்விதமே, **मायादोषविहीनानां**-அக்ஞானமாகிற குற்றம் இல்லாதவர்களுக்கு, **सदा**-எப்பொழுதும், **आत्मा**-ஆத்மா, **एक एव**-ஒன்றுதான்.

தோஷமற்ற கண்கள் உள்ளவர்களுக்குச் சந்திரன் ஒருவனாகவே எப்பொழுதும் தோன்றுவதுபோல் மாயையாகிய தோஷம் அற்றவர்களுக்கு எப்பொழுதும் ஆத்மா ஒன்றே. அதாவது கண்களில் ரோகம் ஏற்படுவதற்கு முன்பும், ரோகம் உண்டான சமயத்திலும் (சந்திரன் இரண்டு என்று தோன்றும் சமயம்) ரோகம் நீங்கிய காலத்திலும் சந்திரன் ஒருவனே. அவ்வாறே, த்வைதம் தோன்றும் காலத்திலும் (அக்ஞான காலம்) ஞானத்தினால் அறியாமை நீங்கிய பிறகும் ஆத்மா ஒன்றே. ஆனால் நேத்ர ரோகம் என்ற தோஷம் நடுவில் ஏற்படுவது. மாயா தோஷமோ அநாதியாக ஏற்பட்டது. ஆகையால் மாயைக்கு முன் என்று கூறமுடியாது. **(3)**

(அ) முன் கூறியதையே விளக்குகிறார் :—

**द्वित्वं भात्यक्षिदोषेण चन्द्रे स्वे मायया जगत् ।**
**द्वित्वं मृषा यथा चन्द्रे मृषा द्वैतं तथात्मनि ॥ ४ ॥**

த்வித்வம் பாத்யக்ஷிதோஷேண சந்த்ரே ஸ்வே மாயயா ஜகத் ।
த்வித்வம் ம்ருஷா யதா சந்த்ரே ம்ருஷா த்வைதம் ததாத்மனி ॥

**यथा**-எவ்விதம், **चन्द्रे**-சந்திரனிடத்தில், **अक्षिदोषेण**-கண்ணின் நோயால், **द्वित्वं**-இரண்டு என்ற தன்மை, **भाति**-தோன்றுகின்றதோ, **तथा**-அவ்வாறு, **स्वे**-தன் ஸ்வரூபமான ஆத்மாவில், **जगत्**-உலகம், **मायया**-மாயையினால், (**भाति**-தோன்றுகின்றது.) **यथा**-எவ்வாறு, **चन्द्रे**-சந்திரனிடத்தில்,

**द्वित्वं**-இரண்டு என்பது, **मृषा**-பொய்யோ, **तथा**-அவ்வாறே, **आत्मनि**-ஆத்மாவில், **द्वैतं**-இரண்டு என்பது, **मृषा**-பொய்.

கண் ரோகத்தினுல் சந்திரனிடத்தில் பேதம் தோன்றுவது (இரண்டாகத் தோன்றுவது) போல் தன் ஆத்ம ஸ்வரூபத்தில் மாயையினுல் உலகம் தோன்றுகின்றது. சந்திரனிடத்தில் பேதம் பொய்யானதுபோல் ஆத்மாவிலும் ஜகத் பேதம் பொய்யானது. (4)

(அ) ஆத்மா எங்கும் நிறைந்தது :—

**आत्मनः कार्यमाकाशो विनात्मानं न संभवेत् ।**
**कार्यस्य पूर्णता सिद्धा किं पुनः पूर्णतात्मनः ॥ ५ ॥**

ஆத்மந: கார்யமாகாஶோ விநாத்மாநம் ந ஸம்பவேத் ।
கார்யஸ்ய பூர்ணதா ஸித்தா கிம் புந: பூர்ணதாத்மந: ॥

**आत्मनः**-ஆத்மாவினிடமிருந்து, **कार्यं**-உண்டான, **आकाशः**-ஆகாயமானது, **आत्मानं विना**-ஆத்மாவை விட்டு, **न संभवेत्**-இருக்காது, **कार्यस्य**-கார்யமான ஆகாயத்திற்கு, **पूर्णता**-வியாபகத்தன்மை (எங்கும் பரவி இருத்தல்) **सिद्धा**-பிரசித்தமானது. **आत्मनः** - (காரணமான) ஆத்மாவிற்கு, **पूर्णता**-வியாபகத்தன்மை, **किं पुनः** - கூறவும் வேண்டுமா ?

**आत्मन आकाशः संभूतः** (ஆத்மந ஆகாஶ: ஸம்பூத:) என்ற ச்ருதியின்படி ஆத்மாவிலிருந்து உண்டான கார்யமான ஆகாயம் காரணமான ஆத்மாவை விட்டு விலகி இருக்கமுடியாது. ஆகாயம் எங்கும் பரவியுள்ளது என்பது பிரஸித்தமாகும். அதற்குக் காரணமான ஆத்மா எங்கும் பரவியுள்ளது என்பதைக் கூறவும் வேண்டுமா ! (5)

(அ) ஆத்மா ஒன்று :—

**कार्यभूतो यथाकाश एक एव न हि द्विधा ।**
**हेतुभूतस्तथात्मायमेक एव विजानतः ॥ ६ ॥**

கார்யபூதோ யதாகாஶ ஏக ஏவ நஹி த்விதா ।
ஹேதுபூத ஸ்ததாத்மாய மேக ஏவ விஜானத: ॥

**यथा**-எவ்வாறு, **कार्यभूतः**-காரியமாக ஆன, **आकाशः**-ஆகாயமானது, **एक एव**-ஒன்றுதானே. **द्विधा**-இரண்டாக, **नहि**-இல்லையோ, **तथा**-அவ்வாறே, **हेतुभूतः**-காரணமான, **अयम् आत्मा**-இந்த ஆத்மாவானது, **विजानतः**-அறிவாளிக்கு **एक एव** ஒன்றுதான்.

ஆத்மாவின் காரியமான (ஆத்மாவிலிருந்து உண்டான) ஆகாயம் ஒன்றே; இரண்டல்ல. அவ்வாறே காரணமான ஆத்மாவும் அறிவாளிக்கு ஒன்றே. (6)

(அ) ஆத்மா இரண்டாகத் தோன்றக் காரணம்:—

एकोऽपि द्वयवद्भाति यथाकाश उपाधितः ।
एकोऽपि द्वयवत्पूर्णस्तथात्मायमुपाधितः ॥ ७ ॥

ஏகோபி த்வயவத் பாதி யதாகாஶ உபாதித: ।
ஏகோபி த்வயவத் பூர்ணஸ்ததாத்மாயமுபாதித: ॥

**यथा**-எவ்வாறு, **आकाशः**-ஆகாயம், **एकोऽपि**-ஒன்ருக இருப்பினும், **उपाधितः**-(குடம், மடம் முதலான) உபாதிகளால், **द्वयवत्**-இரண்டுபோல், **भाति**-தோன்றுகின்றதோ, **तथा**-அவ்வாறே, **पूर्णः**-வியாபகமான (எங்கும் நிறைந்த), **अयम्**-இந்த, **आत्मा**-ஆத்மா, **एकोऽपि**-ஒன்ருயினும், **उपाधितः**-உபாதி ஸம்பந்தத்தால், **द्वयवत्**-இரண்டுபோல், **भाति**-பிரகாசிக்கின்றது.

ஒன்ருகிய ஆகாயம் குடம், மடம் என்ற உபாதிகளால் வெவ்வேருகத் தோன்றுவதுபோல எங்கும் நிறைந்த ஒன்ருகிய ஆத்மாவும் சரீராதி உபாதிகளால் வெவ்வேருகத் தோன்றுகிறது. உபாதியாவது — பொருளில் ஸம்பந்தப்படாமல் அதை அளவிடுவதற்குச் சாதனமானது. (7)

(அ) ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்பது:—

कारणोपाधिचैतन्यं कार्यसंस्थाच्चितोऽधिकम् ।
न घटाभ्रान्मृदाकाशः कुत्रचिन्नाधिको भवेत् ॥ ८ ॥

निर्गतोपाधिराकाश एक एव यथा भवेत् ।
एक एव तथात्मायं निर्गतोपाधिकः सदा ॥ ९ ॥

காரணோபாதி சைதன்யம் கார்யஸம்ஸ்தாச்சிதோதிகம் ।
ந கடாப்ரான் ம்ருதாகாஶ: குத்ரசித் நாதிகோ பவேத் ॥

நிர்கதோபாதிராகாஶ ஏக ஏவ யதா பவேத்
ஏக ஏவ ததாத்மாயம் நிர்கதோபாதிக: ஸதா ॥

**कारणोपाधिचैतन्यं** - காரணோபாதியான சைதன்யம் (மாயையுடன் கூடிய ஞானம்) **कार्यसंस्थात्**-அந்தக்கரணத்தை அடைந்த, **चितः**-சைதன்யத்தைக் காட்டிலும், **अधिकं** வேறாக, **न भवेत्**-ஆகாது. **घटाभ्रात्**-கடாகாசத்தைக் காட்டிலும், **मृदाकाशः**-மண்ணைச்சேர்ந்த ஆகாசம், **कुत्रचित्**-ஒருக்காலும், **अधिकः**-வேறாக, **न भवेत्**-ஆகாது.

**यथा**-எவ்வாறு, **आकाशः**-ஆகாயமானது, **निर्गतोपाधिः**-உபாதி ஸம்பந்தம் இல்லாத நிலைமையில், **एक एव**-ஒன்றாகவே, **भवेत्**-ஆகுமோ, **तथा**-அவ்வாறு, **अयम् आत्मा**-இந்த ஆத்மா, **निर्गतोपाधिकः**-உபாதி ஸம்பந்தம் அற்றநிலையில் **सदा**-எப்பொழுதும், **एक एव**-ஒன்று தான்.

ஜகத் காரணமான மாயையாகிய உபாதியில் ப்ரதிபிம்பத்தை அடைந்த சைதன்யம் (ஞானம்) பரமாத்மா. மாயையின் காரியமான அந்தக்கரணமாகிய உபாதியில் பிரதிபிம்பத்தை அடைந்த சைதன்யம் ஜீவாத்மா **कार्योपाधिरयं जीवः कारणोपाधिरीश्वरः** (கார்யோபாதிரயம் ஜீவ: காரணோபாதிரீச்வர:) என்று சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது. ஆகையால் எவ்விதம் கடஸம்பந்தமான ஆகாயத்தைக்காட்டிலும் மண் ஸம்பந்தமான ஆகாசம் ஒரு காலத்திலும் வேறில்லையோ அவ்வாறே ஜீவனைக்காட்டிலும் பரமாத்மா வேறில்லை.

எவ்வாறு ஆகாயத்திற்கு உபாதிகளான (வேற்றுமைக்குக் காரணமான) குடம், மண் இவைகளை மறந்தால் ஆகாயம் என்ற முறையில் ஒன்ருகவே இருக்கிறதோ அவ்வாறே சைதன்யத்திற்கு உபாதிகளான மாயையையும், அந்தக்கரணத்தையும் விட்டால் (மறந்தால்) சைதன்யம் என்பது முக்காலத்திலும் ஒன்றுதான். (8-9)

**आकाशादन्य आकाशः आकाशस्य यथा नहि ।**
**एकत्वादात्मनो नान्य आत्मा सिद्ध्यति चात्मनः ॥ १० ॥**

ஆகாஶாதன்ய ஆகாஶ: ஆகாஶஸ்ய யதா நஹி ।
ஏகத்வாதாத்மனோ நான்ய ஆத்மா ஸித்யதி சாத்மந: ॥

**यथा**–எவ்வாறு, **आकाशस्य**–ஆகாயம், **एकत्वात्**–ஒன்ருயிருப்பதால், **आकाशात्**–ஆகாசத்தைக் காட்டிலும், **अन्यः**–மற்ருெரு, **आकाशः**–ஆகாயம், **नहि**–இல்லையோ, **तथा**–அவ்வாறு, **आत्मनः**–ஆத்மாவானது, **एकत्वात्**–ஒன்ருக இருப்பதால், **आत्मनश्च**–ஆத்மாவைக்காட்டிலும், **अन्यः**–மற்ருெரு, **आत्मा**–ஆத்மா, **न सिद्ध्यति**–ஸித்திக்காது.

உபாதியற்ற ஸ்வபாவமான ஆகாயத்தைக்காட்டிலும் மற்ருெரு ஆகாசம் இல்லாததுபோன்று உபாதியற்ற ஆத்மாவும் ஒன்றே. '**आत्मा सर्वगतश्च नित्यः । सर्वभूतेषु चात्मानम्** (ஆத்மா ஸர்வகதச்ச நித்ய: ஸர்வபூதேஷு சாத்மானம்) முதலிய வாக்கியங்கள் ஆத்மா ஒன்று என்பதற்கு ஆதாரங்களாகும். (10)

(அ) ஜீவாத்ம பரமாத்ம பேதம் இல்லாவிடினும் பிரபஞ்ச பேதமிருப்பதால் அத்வைதம் எவ்வாறு ஸித்திக்கும் எனில்:—

**मेघयोगाद्यथा नीरं करकाकारतामियात् ।**
**मायायोगात्तथैवात्मा प्रपञ्चाकारतामियात् ॥ ११ ॥**

மேகயோகாத் யதா நீரம் கரகாகாரதாமியாத் ।
மாயாயோகாத் ததைவாத்மா ப்ரபஞ்சாகாரதாமியாத் ॥

**यथा**-எவ்விதம், **नीरं**-ஜலமானது, **मेघयोगात्**-மேகத்தின் சேர்க்கையினால், **करकाकारतां**-ஆலங்கட்டி உருவத்தை, **इयात्**-அடையுமோ, **तथैव**-அவ்விதமே, **आत्मा**-ஆத்மாவானது, **मायायोगात्**-மாயையின் ஸம்பந்தத்தினால், **प्रपञ्चाकारतां**-உலகமாயிருக்கும் தன்மையை, **इयात्**-அடைகின்றது.

மேகத்தின் சேர்க்கையினால் தண்ணீர் பனிக்கட்டியாவதுபோல் மாயையின் சேர்க்கையினால் ஆத்மாவும் உலகமாக ஆகின்றது. (11)

**वर्षोपल इवाभाति नीरमेवाभ्रयोगतः ।**
**वर्षोपलविनाशेन नीरनाशो यथा न हि ॥ १२ ॥**

**आत्मैवायं तथा भाति मायायोगात्प्रपञ्चवत् ।**
**प्रपञ्चस्य विनाशेन स्वात्मनाशो नहि क्वचित् ॥ १३ ॥**

வர்ஷோபல இவாபாதி நீரமேவாப்ரயோகத: ।
வர்ஷோபலவிநாஶேன நீரநாஶோ யதா நஹி ॥

ஆத்மைவாயம் ததா பாதி மாயாயோகாத் ப்ரபஞ்சவத் ।
ப்ரபஞ்சஸ்ய விநாஶேன ஸ்வாத்மநாஶோ நஹி க்வசித் ॥

**यथा**-எவ்விதம், **नीरमेव**-ஜலமே, **अभ्रयोगतः**-மேகத்தின் சேர்க்கையினால், **वर्षोपल इव**-ஆலங்கட்டிபோன்று, **आभाति**-தோன்றுகின்றதோ, **वर्षोपलविनाशेन**-ஆலங்கட்டியின் அழிவினால், **नीरनाशः**-ஜலத்திற்கு அழிவு, **न हि**-இல்லையோ. **तथा**-அவ்விதமே, **अयम् आत्मैव**-இந்த ஆத்மாவே, **मायायोगात्**-மாயையின் ஸம்பந்தத்தினால், **प्रपंचवत्**-உலகம் போன்று **भाति**-தோன்றுகின்றது. **प्रपञ्चस्य**-அத்தகைய உலகத்தின், **विनाशेन**-அழிவினால், **स्वात्मनाशः**-தன் ஆத்மாவிற்கு அழிவானது, **क्वचित्**-ஒருபொழுதும், **नहि**-உண்டாகாது.

மேகத்தின் சேர்க்கையினால் தண்ணீரே ஆலங்கட்டியாகத் தோன்றுவதுடன், அக்கட்டி அழிந்த சமயத்திலும் நீர் அழியாமலே இருப்பதுபோல, மாயையின் சேர்க்கையினால் ஆத்மாவே உலகமாகத் தோன்றிடினும், அவ்வுலகம்

அழிந்தபொழுதும் ஆத்மா அழியாமலிருக்கின்றது. பஞ்சதசியில் तमःप्रधानप्रकृतेः तद्भोगायेश्वरेच्छया । वियत्पवनतेजोम्बुभुवो भूतानि जज्ञिरे (தம: ப்ரதானப்ரக்ருதே: தத்போகாயேச்வரேச்சயா। வியத்பவனதேஜோம்பு புவோ பூதானி ஜஜ்ஞிரே ॥) मायामात्रमिदं सर्वं (மாயாமாத்ரமிதம் ஸர்வம்) என்ற வாக்யங்களும், உலகம் மாயை என்பதற்குச் சான்றாகும். அதிஷ்டானமான கயிற்றில் தோன்றிய பாம்பு மறைந்தாலும் கயிறு மறையாமலே இருப்பதுபோல, அதிஷ்டானமான ஆத்மாவில் மாயையினால் தோன்றிய ஜகத் அழிந்தாலும் ஆத்மா அழியாமலே இருக்கும். (12–13)

जलादन्य इवाभाति जलोत्थो बुद्बुदो यथा ।
तथात्मनः पृथगिव प्रपञ्चोऽयमनेकधा ॥ १४ ॥

यथा बुद्बुदनाशेन जलनाशो न कर्हिचित् ।
तथा प्रपञ्चनाशेन नाशः स्यादात्मनो नहि ॥ १५ ॥

ஜலாதன்ய இவாபாதி ஜலோத்தோ புத்புதோ யதா।
ததாத்மன: ப்ருதகிவ ப்ரபஞ்சோயமநேகதா ॥

யதா புத்புதநாசேன ஜலநாசோ ந கர்ஹிசித்।
ததா ப்ரபஞ்சநாசேன நாச: ஸ்யாதாத்மநோ நஹி ॥

यथा–எவ்விதம், जलोत्थः–ஜலத்திலிருந்து உண்டான, बुद्बुदः–குமிழியானது, जलात्–ஜலத்தைக்காட்டிலும், अन्य इव–வேறாக உள்ளது போல், आभाति–தோன்றுகின்றதோ, तथा–அவ்விதமே, अनेकधा–பலவாறாக உள்ள, अयं–இந்த, प्रपञ्चः–உலகமானது, आत्मनः–ஆத்மாவைக்காட்டிலும், पृथगिव–வேறானது போன்று, आभाति–தோன்றுகின்றது.

यथा–எவ்வாறு, बुद्बुदनाशेन–குமிழியின் நாசத்தினால், कर्हिचित् – ஒருபொழுதும், जलनाशः – ஜலத்திற்கு நாசம், न–இல்லையோ, तथा–அவ்விதமே, प्रपंचनाशेन–உலகத்தின் அழிவினால், आत्मनः–ஆத்மாவிற்கு, नाशः-நாசமானது, नहि स्यात् கிடையாது.

தண்ணீரில் உண்டாகும் குமிழ் தண்ணீரைக் காட்டிலும் வேருகத் தோன்றுவதுபோல், ஆத்மாவில் உண்டாகிய ப்ரபஞ்சம் அதைக்காட்டிலும் வேருகத் தோன்றுகின்றது. குமிழ் அழிவதிஞல் ஒருக்காலும் தண்ணீருக்கு அழிவு ஏற்படாததுபோல் உலகம் அழிந்தாலும் ஆத்மாவுக்கு அழிவு கிடையாது.

பால் தயிராக மாறின்பின் தயிர் நாசமடைந்தால் பாலுக்கும் நாசம் ஏற்படுகின்றது. அவ்வாறு உலகமாக மாறிய ஆத்மாவிற்கு உலக நாசத்திஞல் நாசம் ஏற்படுமோ எனில் இல்லே. ஏனெனில் ஆத்மா உலகமாக பரிணமத்தை (மாறுதல்) அடைவதில்லே. மண்ணிலிருந்து உண்டாகிறது குடம். அது உண்டாவதற்கு முன்பும், குடமாக இருக்கும்பொழுதும், அது அழிந்தகாலத்திலும் மண்ணிற்கு அழிவு இல்லே. ஆஞல் குடம் என்ற பெயர், அகன்ற உடல் இந்த நாமரூபங்கள் மாத்திரம் குடம் மறைவதிஞல் மறைந்து விடுகின்றன. அவ்வாறே கயிற்றில் தோன்றிய ஸர்பநாசத்திஞல் கயிற்றிற்கு நாசம் ஏற்படுவதில்லே. இதுபோல ஆத்மாவிற்கு நாசம் கிடையாது. **वाचारंभणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम्।** (வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்) **अधिष्ठानावशेषो हि नाशः कल्पितवस्तुनः।** (அதிஷ்டாஞவஶேஷோ ஹி நாஶ: கல்பிதவஸ்துன:) என்ற வாக்யங்கள் இவ்விஷயத்தில் பிரமாணங்களாகும். **(14-15)**

(அ) ஸ்தூல ஸூக்ஷ்ம காரணசரீரங்களின் தர்மங்கள் ஆத்மாவைச் சார்ந்தவை அன்று. எவ்வாறெனில்:—

**अहिर्निर्ल्वयनीजातः शुच्यादिर्नाहिमाप्नुयात् ।**
**तथा स्थूलादिसंभूतः शुच्यादिर्नाप्नुयादिमम् ॥ १६ ॥**

அஹிர்நிர்ல்வயனீஜாத: சுச்யாதிர் நாஹிமாப்னுயாத் ।
ததா ஸ்தூலாதிஸம்பூத: சுச்யாதிர் நாப்னுயாதிமம் ॥

**अहिर्निर्ल्वयनीजातः** —பாம்புச்சட்டையில் உண்டான, **शुच्यादिः** — தூய்மையோ, அக்னியோ முதலியவை, **अहिम्**—

பாம்பை, **न आप्नुयात्**-அடையாதோ, **तथा**-அவ்விதமே, **स्थूलादिसंभूतः**-ஸ்தூலம் முதலிய சரீரங்களில் உண்டான, **शुच्यादिः**-சுத்தம் முதலியவை, **इमं**-இந்த ஆத்மாவை, **न आप्नुयात्**-ஸம்பந்திக்காது.

கழற்றப்பட்ட பாம்புச்சட்டையில் பிடித்த நெருப்பு முதலியவை பாம்பை எரிக்காததுபோல் ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களைச் சார்ந்த தர்மங்கள் ஆத்மாவைச்சாராது. ஸ்தூல சரீரம், கைகால்களுடன் கூடிய, கண்ணில் தென்படும் சரீரம். அதன் தர்மம், வியாதி, மூப்பு, மரணம் முதலியவை. ஸூக்ஷ்ம சரீரம்:—ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, ஐந்து பிராணன்கள், மனது, புத்தி, ஆகிய பதினேழும் சேர்ந்தது. இவற்றின் தர்மம். குருட்டு, செவிட்டுத்தன்மைகள், பசிதாகங்கள், ஸங்கல்ப விகல்பங்கள், காரியத்தைச் செய்தல், சுகம், துக்கம் இவைகளாகும். காரணசரீரம் என்பது அக்ஞானமாகும். அதன் தர்மம் மறைத்தல். இவைகள் அனைத்தும் ஆத்மாவைச் சேரா. (16)

(அ) ஆத்மாவில் இருப்பதுபோல் தோன்றுகிறதே எனில்:—

**त्यक्तां त्वचमहिर्यद्वदात्मत्वेन न मन्यते ।**
**आत्मत्वेन सदा ज्ञानी त्यक्तदेहत्रयं तथा ॥ १७ ॥**

த்யக்தாம் த்வசமஹிர் யத்வதாத்மத்வேன ந மன்யதே ।
ஆத்மத்வேன ஸதா ஞானீ த்யக்ததேஹத்ரயம் ததா ॥

**यद्वत्**-எவ்வாறு, **अहिः**-பாம்பு, **त्यक्तां**-கழற்றப்பட்ட, **त्वचं**-சட்டையை, **आत्मत्वेन**-தான் ஆக, **न मन्यते**-எண்ணுதோ, **तथा**-அவ்விதமே, **ज्ञानी**-ஞானியானவன், **त्यक्तदेहत्रयं**-அபிமானத்தைவிட்ட ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களை, **सदा**-எப்பொழுதும், **आत्मत्वेन**-ஆத்மாவாக, **न मन्यते**-எண்ண மாட்டான்.

ஸர்ப்பம் தான் கழட்டிய சட்டையை தான் என்று நினைக்காததுபோன்று ஞானியும் ஆத்மாவன்று என்று

அறிந்த ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களை ஆத்மாவாக நினைப்பதில்லை. இவ்விதம் சரீரத்தில் ஆத்மா என்ற எண்ணம் இல்லாததால் அதன் தர்மங்களும் ஆத்மாவிற்கு இல்லை. எவ்விதமெனில் தேகத்திற்கும் ஆத்மாவிற்கும் அத்யாஸம் என்ற ஸம்பந்தத்தைத்தவிர வேறு ஸம்யோகம் முதலான ஸம்பந்தம் ஸம்பவிக்காது. அவ்விதம் ஸம்பவித்தால் அக்நியின் ஸம்பந்தத்தினால் ஜலத்திற்கு உஷ்ணம் ஏற்படுவதுபோல் ஏற்படலாம். அத்யாஸ ஸம்பந்தமோ ப்ரமஜ்ஞானமே. சிவந்த மேகத்தைப் பார்த்து நெருப்பு எரிகிறது என்று தோன்றினாலும் அருகில் சென்றால் நெருப்பு காணப்படுவதில்லை. அவ்வாறே மூன்று தேகங்களும் ஆத்மா என்ற ப்ரமம் இருக்கும்வரை ஆத்மாவில் சுக துக்காதிகள் தோன்றும். பஞ்சகோச விவேகத்தினால் அவை ஆத்மாவன்று என்று தெரிந்தபின் அவைகளின் தர்மங்களும் ஆத்மாவில் தோன்றுவதில்லை. இவ்விஷயத்தில் **न ह वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्ति। अशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशतः** (ந ஹ வை ஸஶரீரஸ்ய ஸத: ப்ரியாப்ரியயோரபஹதிரஸ்தி। அஶரீரம் வாவ ஸந்தம் ந ப்ரியாப்ரியே ஸ்ப்ருஶத:।) என்ற சாஸ்திரம் பிரமாணமாகும். சரீராபிமானம் இருப்பவனுக்கு சுகதுக்கங்கள் நீங்குவதில்லை. அந்த அபிமானத்தை விட்டவனுக்கு சுகதுக்கங்கள் ஏற்படுவதில்லை. (17)

(அ) முன் சுலோகத்தின் விஷயத்தையே விளக்குகிறார் :—

**अहिनिर्ल्वयनीनाशादहेर्नाशो यथा न हि।**
**देहत्रयविनाशेन नात्मनाशस्तथा भवेत् ॥ १८ ॥**

அஹிநிர்ல்வயநீநாஶாதஹேர்நாஶோ யதா ந ஹி।
தேஹத்ரயவிநாஶேந நாத்மநாஶஸ்ததா பவேத் ॥

**यथा**—எவ்விதம், **अहिनिर्ल्वयनीनाशात्**—பாம்பு சட்டையின் அழிவினால், **अहेः**—பாம்பிற்கு, **नाशः**—அழிவு, **नहि**—இல்லையோ **तथा**—அவ்விதமே, **देहत्रयविनाशेन**—மூன்று தேகங்களின் அழி

விஞலும், आत्मनाशः-ஆத்மாவிற்கு நாசம், न भवेत् - ஏற்படாது.

பாம்பின் சட்டை அழிவதால் பாம்பு அழிவதில்லே. அவ்வாறே மூவகை சரீரங்களின் அழிவால் ஆத்மா அழிவதில்லே. இதையே देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत ॥ (தேஹீ நித்யமவத்யோயம் தேஹே ஸர்வஸ்ய பாரத ॥) என்ற கீதா வாக்யமும் அறிவிக்கிறது. (18)

(அ) ஆத்மாவில் தேகம் முதலானவற்றின் தர்மங்களும், அவைகளில் ஆத்மாவின் தர்மங்களும் தோன்றுவது ப்ரமம் என்பதை உதாரணங்கள்மூலம் விளக்குகிறுர் :—

तक्रादि लवणोपेतमज्ञैर्लवणवद्यथा ।
आत्मा स्थूलादिसंयुक्तो दृश्यते स्थूलकादिवत् ॥ १९ ॥

தக்ராதி லவணோபேதமக்ஞைர் லவணவத் யதா ।
ஆத்மா ஸ்தூலாதிஸம்யுக்தோ த்ருச்யதே ஸ்தூலகாதிவத் ॥

लवणोपेतं-உப்புடன் கூடிய, तक्रादि-மோர் முதலியவை, लवणवत् - உப்புச் சுவையுடன் கூடியதாக, यथा - எவ்விதம், अज्ञैः-அறிவற்றவர்களால், दृश्यते-காணப்படுகின்றதோ, तथा-அவ்விதம், स्थूलादिसंयुक्तः - ஸ்தூலம் முதலிய சரீரங்களுடன் கூடிய, आत्मा-ஆத்மாவானது, स्थूलकादिवत्-பருத்தல் முதலிய தர்மங்களுடன் கூடியதாக, दृश्यते-தவருக எண்ணப்படுகின்றது.

அதிக உப்புச்சேர்ந்த மோர் முதலானவற்றை உப்புச் சுவையுள்ளதாக அறிவற்றவர்கள் சொல்கின்றனர். அவ்வாறே பருத்தல், இளைத்தல், முதலியவற்றுடன் கூடிய சரீரத்துடன் ஒன்ருக நினைத்து ஆத்மாவையும் பருத்தல், இளைத்தல் இவைகளுடன் கூடியதாகச் சொல்கின்றனர். இவ்விதம் சரீரத்தின் தர்மம் ஆத்மாவில் தோற்றத்திற்கு மோர் உதாரணமாகக் கூறப்பட்டது. (19)

(அ) ஆத்மாவின் தர்மங்கள் தேகாதிகளில் தோன்றுவதைக் கூறுகிறுர் :—

अयःकाष्ठादिकं यद्वद्वह्निवद्वह्नियोगतः ।
भाति स्थूलादिकं सर्वमात्मवत्स्वात्मयोगतः ॥ २० ॥

அய: காஷ்டாதிகம் யத்வத் வஹ்னிவத் வஹ்னியோகத: |
பாதி ஸ்தூலாதிகம் ஸர்வமாத்மவத் ஸ்வாத்மயோகத: ||

**यद्वत्**-எவ்வாறு, **अयःकाष्ठादिकं**-இரும்பு, விறகு முதலியவை, **वह्नियोगतः**-அக்னியின் சேர்க்கையினுல், **वह्निवत्**-அக்னிபோன்று, **भाति**-பிரகாசிக்கின்றதோ, **तद्वत्**-அவ்விதமே, **स्थूलादिकं**-ஸ்தூலம் முதலிய, **सर्वं**-எல்லாம், **स्वात्मयोगतः**-தன் ஆத்மாவின் ஸம்பந்தத்திஞல், **आत्मवत्**-ஆத்மாவைப் போன்று, **भाति**-பிரகாசிக்கின்றது.

இரும்பு, விறகு முதலியவை நெருப்பின் சேர்க்கையால் நெருப்பைப்போல் தோன்றுகின்றது. அவ்வாறு ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களும் ஆத்மாவின் சேர்க்கையால் ஆத்மாவைப்போல் தோன்றுகின்றன. ஆத்மாவின் தர்மங்கள், ஸத்வம் (இருப்பு) ப்ரகாசம் (ஞானம்) சுகம் (ஆனந்தம்) இவைகளாகும். முறையாக தேவதத்தனுகிய நான் இருக்கிறேன், அறிகிறேன். சுகமுள்ளவன் என்று ஸ்தூல சரீரத்தில் அந்த தர்மங்கள் தோன்றுகின்றன. இவ்வாறே மற்ற சரீரங்களிலும் ஊகித்துக்கொள்ள வேண்டும். (20)

(அ) இதையே விளக்குகிறுர் :—

दाहको नैव दाह्यं स्यात् दाह्यं तद्वन्न दाहकः ।
नैवात्माऽयमनात्मा स्यादनात्माऽयं न चात्मकः ॥ २१ ॥

தாஹகோ நைவ தாஹ்யம் ஸ்யாத் தாஹ்யம் தத்வத் ந தாஹக: |
நைவாத்மாயமநாத்மா ஸ்யாதநாத்மாயம் ந சாத்மக: ||

(**यद्वत्**-எவ்விதம்), **दाहकः**-எரிக்கும் பொருள், **दाह्यं**-எரிக்கப்படும் பொருளாக, **नैव स्यात्**-ஆகாதோ, **दाह्यं**-எரிக்கப்படும் பொருள், **दाहकः**-எரிக்கும் பொருளாகவும், **नैव**-

**स्यात्**-ஆகாதோ, **तद्वत्**-அதுபோன்று, **अयम्**-இந்த, **आत्मा**-ஆத்மாவானது, **अनात्मा**-அநாத்மாவாக (ஜடமாக) வும், **अयम् अनात्मा च**-இந்த ஆத்மாவிற்கு வேருன ஜடப்பொருள், **आत्मकः**-ஆத்மாவாகவும், **नैव स्यात्**-ஆகாது.

எரிக்கும் அக்னி முதலானவை எரிக்கப்படும் விறகு முதலியவைகளாக ஆகா. எரிக்கப்படும் விறகு முதலியவை எரிக்கும் அக்னியாக ஆகா. அவ்வாறு அறிகிற (ஸாக்ஷியான) ஆத்மா அறியப்படும் சரீரம் முதலியவைகளாக ஆகாது. அறியப்படும் சரீரம் முதலியவை அறியும் ஆத்மாவாக ஆகா. எவ்வாறெனில் எனதுசரீரம், கண், மூக்கு, பிராணன், மனம், புத்தி என்றும், தூங்குகையில் நான் ஒன்றும் அறியேன் என்றும், மூன்று சரீரங்களும் அறியப் படுவதால் இவைகளைக் காட்டிலும் அறியும் ஆத்மா வேருக ஆகின்றது. (21)

(அ) ஆத்மா ஸாக்ஷி என்பதை விளக்குகிருர் :—

**प्रमेयादित्रयं सार्थं भानुना घटकुड्यवत् ।**
**येन भाति स एवाहं प्रमेयादिविलक्षणः ॥ २२ ॥**

ப்ரமேயாதி த்ரயம் ஸார்த்தம் பாநுநா கடகுட்யவத் ।
யேந பாதி ஸ ஏவாஹம் ப்ரமேயாதி விலக்ஷண: ॥

**प्रमेयादित्रयं**-ப்ரமேயம் முதலான மூன்றும் (ப்ரமேயமான பொருள்கள், பிரமாணமான அறிவு, ப்ரமாதாவான அறிபவன்), **सार्थं**-ஒரே சமயத்தில், **भानुना**-சூரியனுல், **घटकुड्यवत्**-குடம், சுவர் இவைகள் போல், **येन**-எந்த ஆத்மாவினுல், **भाति**-விளங்குகின்றதோ, **प्रमेयादिविलक्षणः**-ப்ரமேயம் முதலியவற்றைக் காட்டிலும் வேருன, **स एव**-அந்த ஆத்மாவே, **अहम्**-நான்.

சூரியனுல் குடம், சுவர் முதலியவை ஒரே சமயத்தில் விளங்குகின்றது. அவைகளைவிட சூரியன் வேருனவனே. அவ்வாறே ப்ரமேயம் (அறியப்படும் பொருள்) ப்ரமாணம் (அறிவு) ப்ரமாதா (அறிகின்றவன்) ஆகிய மூன்றும் ஒரே

சமயத்தில் எதனால் விளங்குகின்றதோ அது அவற்றி னின்றும் வேறுபட்டது. அதையே ஸாக்ஷி என்பர். அந்த ஸாக்ஷியே நான். (22)

(அ) ப்ரமேயம் முதலியவற்றிற்கு ஸ்வயம் ப்ரகாசம் இல்லை:—

भानुस्फुरणतो यद्वत्स्फुरतीव घटादिकं ।
स्फुरतीव प्रमेयादिरात्मस्फुरणतस्तथा ॥ २३ ॥

பானு ஸ்புரணதோ யத்வத் ஸ்புரதீவ கடாதிகம் ।
ஸ்புரதீவ ப்ரமேயாதி ராத்மஸ்புரணதஸ் ததா ॥

**यद्वत्**-எவ்வாறு, **भानुस्फुरणतः**-சூரியனது பிரகாசத்தினால், **घटादिकं**-குடம் முதலியவை, **स्फुरतीव** - பிரகாசம் உடையவைபோல இருக்கின்றதோ, **तथा**-அவ்விதமே, **प्रमेयादिः**-ப்ரமேயம் முதலியவை, **आत्मस्फुरणतः**-ஆத்மாவின் பிரகாசத்தினால், **स्फुरतीव**-தானே பிரகாசிப்பவை போன்று, (தோன்றுகின்றது).

(உண்மையில்) சூரியன் ஒளியினால் விளங்கும் குடம் முதலியவை, தானே விளங்குவதாகத் தோன்றுவதுபோல் ஆத்மாவின் பிரகாசத்தினாலேயே விளங்குகின்ற ப்ரமேயம் முதலானவை தாங்களே ப்ரகாசிப்பவைபோலத் தோன்று கின்றன. இவ்விஷயத்தில் **तस्य भासा सर्वमिदं विभाति** (தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி) என்பது பிரமாணமாகும்.

(அ) ஆத்மாவின் ஆனந்தமே மற்றவைகளில் தோன்றுகின்றது:—

पिष्टादिर्गुलसंपर्काद्गुलवत्प्रीतिमान्यथा ।
आत्मयोगात्प्रमेयादिरात्मवत्प्रीतिमान्भवेत् ॥ २४ ॥

பிஷ்டாதிர் குளஸம்பர்காத் குளவத் ப்ரீதிமான் யதா ।
ஆத்மயோகாத் ப்ரமேயாதிராத்மவத் ப்ரீதிமான் பவேத் ॥

**पिष्टादिः**-மா முதலியவை, **यथा**-எவ்விதம், **गुलसंपर्कात्** வெல்லத்தின் சேர்க்கையால், **गुलवत्** - வெல்லம் போன்று,

**प्रीतिमान्** – பிரியத்தை உண்டுபண்ணுகின்றதாக, **भवेत्** – ஆகின்றதோ, **तथा** – அவ்விதம், **प्रमेयादिः**–ப்ரமேயம் முதலியவை, **आत्मयोगात्**–ஆத்மாவின் ஸம்பந்தத்தினுல், **आत्मवत्**–ஆத்மாவினிடத்தில்போல், **प्रीतिमान्** – பிரீதிகொள்ளத் தக்கதாக, **भवेत्**–ஆகின்றது.

எவ்விதம் மாவு முதலியவைகளில் வெல்லம் சேர்த்ததும் அந்த மாவில், வெல்லத்தில்போல் ப்ரீதி ஏற்படுகின்றதோ, அவ்வாறே ஆத்மாவின் சேர்க்கையால் ப்ரமேயம் முதலானவற்றில் ப்ரீதி (ஆனந்தம்) உண்டாகின்றது. **विज्ञानमानन्दं ब्रह्म** (விக்ஞானமானந்தம் ப்ரஹ்ம) 'ஆத்மா சுகரூபம்' என்று வேதத்தில் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் ஆத்மாவின் சேர்க்கையினுலேயே மற்றவைகளில் ஆனந்தம் உண்டாகின்றது. (24)

**घटनीरान्नपिष्टानामुष्णत्वं वह्नियोगतः ।**
**वह्निं विना कथं तेषामुष्णता स्याद्यथा क्वचित् ॥ २५ ॥**

**भूतभौतिकदेहानां स्फूर्तिता स्वात्मयोगतः ।**
**विनात्मानं कथं तेषां स्फूर्तिता स्यात्तथा क्वचित् ॥ २६ ॥**

கடநீரான்ன பிஷ்டாநாமுஷ்ணத்வம் வஹ்னியோகத: ।
வஹ்னிம் விநா கதம் தேஷாமுஷ்ணதா ஸ்யாத் யதா க்வசித் ॥

பூதபௌதிகதேஹாநாம் ஸ்பூர்திதா ஸ்வாத்மயோகத: ।
விநாத்மானம் கதம் தேஷாம் ஸ்பூர்திதா ஸ்யாத்
ததா க்வசித் ॥

**घटनीरान्नपिष्टानां**–குடம், ஜலம், அன்னம், மாவு இவைகளுக்கு, **वह्नियोगतः**–அக்னியின் ஸம்பந்தத்தினுல், **उष्णत्वं**–சூடு உண்டாகின்றது. **तेषां**–அவைகளுக்கு, **वह्निं विना**–அக்னி இல்லாமல், **क्वचित्** – ஒரு இடத்திலாவது, **उष्णता**-சூடு, **कथं स्यात्**–எவ்வாறு உண்டாகும்? **यथा**–இது எவ்வாருே, **तथा**–அவ்வாறு, **भूतभौतिकदेहानां**–பூதங்கள், (பூமி முதலியவை) அவைகளின் காரியங்கள், தேஹங்கள் இவைகளுக்கு,

**स्वात्मयोगतः**-தன் ஆத்மாவின் ஸம்பந்தத்தினுல்; **स्फूर्तिता**-பிரகாசமானது, (உண்டாகின்றது). **तेषां** - அவைகளின், **स्फूर्तिता**-பிரகாசமானது **आत्मानं विना** ஆத்மா இல்லாமல், **क्वचित्**-ஒரு இடத்திலாவது, **कथं स्यात्**-எப்படி உண்டாகும்?

குடம், நீர், அன்னம், மாவு முதலியவை அக்நியின் சேர்க்கையினுலேயே சூட்டைப் பெறுகின்றன. அக்நியின் சேர்க்கை இல்லையெனில் ஓரிடத்திலும் அவைகளுக்குச் சூடு கிடையாது. இதுபோல பஞ்சபூதங்கள், அவைகளால் உண்டான பொருள்கள், தேகங்கள் இவைகளுக்குப் பிரகாசம் ஆத்ம ஸம்பந்தத்தினுலேயே ஏற்படுகின்றது. ஆத்மாவின் ஸம்பந்தம் இல்லையெனில் இவைகளுக்குப் பிரகாசமும் இல்லை. (25-26)

(அ) பல சரீரங்களிலும் ஆத்மா ஒன்றே:—

**नानाविधेषु कुम्भेषु वसत्येकं नभो यथा ।**
**नानाविधेषु देहेषु तद्वदेको वसाम्यहम् ॥ २७ ॥**

நாநாவிதேஷு கும்பேஷு வஸத்யேகம் நபோ யதா ।
நாநாவிதேஷு தேஹேஷு தத்வதேகோ வஸாம்யஹம் ॥

**यथा**-எவ்விதம், **नानाविधेषु**-பலவிதமான, **कुम्भेषु**-குடங்களில், **एकं**-ஒரே, **नभः**-ஆகாயம், **वसति**-இருக்கின்றதோ, **तद्वत्**-அதுபோல, **नानाविधेषु** - பலவிதமான, **देहेषु**-சரீரங்களில், **अहं**-நான், **एकः**-ஒருவனே, **वसामि**-வசிக்கிறேன்.

எவ்வாறு பலவிதமான குடங்களில் உள்ள ஆகாசம் ஒன்ருே, அவ்வாறே பலவித தேஹங்களிலும் நான் ஒருவனே ஆத்மாவாக வசிக்கின்றேன். **क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत** (க்ஷேத்ரக்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத) என்று க்ஷேத்ரங்களான சரீரங்கள் அநேகம் என்றும் க்ஷேத்ரக்ஞன ஆத்மா ஒன்று என்றும் கூறப்பட்டிருக்கின்றது. (27)

(அ) தேஹத்தின் விசேஷங்கள் ஆத்மாவில் இல்லை :—

नानाविधत्वं कुम्भानां न यात्येव यथा नभः ।
नानाविधत्वं देहानां तद्वदेव न याम्यहम् ॥ २८ ॥

நாநாவிதத்வம் கும்பாநாம் ந யாத்யேவ யதா நப: ।
நாநாவிதத்வம் தேஹாநாம் தத்வதேவ ந யாம்யஹம் ।

**यथा**-எவ்விதம், **नभः**-ஆகாயமானது, **कुम्भानां**-குடங்களுடைய, **नानाविधत्वं**-பலவிதத் தன்மையை, **नैव याति**-அடைவதில்லையோ, **तद्वदेव**-அதுபோல், **अहं**-நான், **देहानां**-சரீரங்களுடைய, **नानाविधत्वं**-பலவித்த் தன்மையை, **न यामि** அடைவதில்லை.

எவ்விதம் குடங்களில் உள்ள பலவிதத்தன்மை, அதிலுள்ள ஆகாயத்தை அடைவதில்லையோ, அவ்வாறு சரீரங்களில் உள்ள பருத்தல், இளைத்தல், குட்டை, உயரம் முதலியவை என்னிடம் வருவதில்லை. (28)

यथा घटेषु नष्टेषु घटाकाशो न नश्यति ।
तथा देहेषु नष्टेषु नैव नश्यामि सर्वगः ॥ २९ ॥

யதா கடேஷு நஷ்டேஷு கடாகாஶோ ந நச்யதி ।
ததா தேஹேஷு நஷ்டேஷு நைவ நச்யாமி ஸர்வக: ॥

**यथा**-எவ்விதம், **घटेषु**-குடங்கள், **नष्टेषु**-அழிந்தபொழுது **घटाकाशः**-குடங்களில் உள்ள ஆகாயம், **न नश्यति**-அழிவதில்லையோ, **तथा**-அவ்விதம், **देहेषु**-சரீரங்கள், **नष्टेषु**-அழிந்தபொழுது, **सर्वगः**-எங்கும் நிறைந்த, (**अहं**-நான்) **नैव नश्यामि** அழிவதில்லை.

எவ்வாறு குடங்கள் அழிந்தபோதிலும் அவைகளில் உள்ள ஆகாசம் அழிவதில்லையோ அவ்வாறே சரீரம் அழிந்தாலும் எங்கும் உள்ள நான் அழியமாட்டேன். ஆத்மாவை ச்ருதியில் "आकाशवत् सर्वगतश्च नित्यः" (ஆகாஶவத் ஸர்வகதச்ச நித்ய:) என்றுவியாபகமாகக் கூறி இருக்கின்றது. தார்க்கிகர் யுக்தியால் வியாபகமான ஆகாயத்திற்கே அழிவில்லை என்று சொல்லுகின்றனர்.

அந்த ஆகாசத்திற்கும் காரணமான ஆத்மாவிற்கு அழிவு இல்லை என்பதைக் கூறவும்வேண்டுமோ ? (29)

उत्तमादीनि पुष्पाणि वर्तन्ते सूत्रके यथा ।
उत्तमाद्यास्तथा देहा वर्तन्ते मयि सर्वदा ॥ ३० ॥

உத்தமாதீனி புஷ்பாணி வர்த்தந்தே ஸூத்ரகே யதா ।
உத்தமாத்யாஸ்ததா தேஹா வர்த்தந்தே மயி ஸர்வதா ॥

**यथा**–எவ்விதம், **सूत्रके**–நூலில், **उत्तमादीनि**–உயர்ந்தது, நடுத்தரம், தாழ்ந்தது முதலான, **पुष्पाणि**–புஷ்பங்கள், **वर्तन्ते**-இருக்கின்றனவோ, **तथा**–அவ்விதமே, **उत्तमाद्याः**-உத்தம, மத்யம, அதமமான, **देहाः**–சரீரங்கள், **मयि**–என்னிடத்தில், **सर्वदा**-எப்பொழுதும், **वर्तन्ते**-இருக்கின்றன.

ஓர் நூலில் தொடுக்கப்பட்ட உயர்ந்ததும், நடுத்தரமானதும் சாதாரணமானதுமான புஷ்பங்கள் அந்நூலில் உள்ளனவோ அதுபோன்று உத்தம, மத்யம அதமமான தேஹங்கள் என்னிடம் (ஆத்மாவிடம்) இருக்கின்றன. தாமரை, மல்லிகை, அரளி புஷ்பங்களால் கட்டிய மாலையில் அவைகளுள் உள்ளவேற்றுமையை அடையாத நூல் ஒன்றே எல்லாப் புஷ்பங்களுடனும் ஸம்பந்தப்பட்டிருக்கின்றது. அவ்விதமே தேவசரீரம், மனித சரீரம், பசுசரீரம் இவைகளில் இருக்கும் ஆத்மாவும் அவைகளைக்காட்டிலும் வேருன ஒன்றே. **शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः** (ஶுனி சைவ ச்வபாகே ச பண்டிதா: ஸமதர்சின:) என்று கீதையில் இவ் விஷயம் கூறப்பட்டிருக்கின்றது. (30)

यथा न संस्पृशेत्सूत्रं पुष्पाणामुत्तमादिता ।
तथा नैकं सर्वगं मां देहानामुत्तमादिता ॥ ३१ ॥

पुष्पेषु तेषु नष्टेषु यद्वत्सूत्रं न नश्यति ।
तथा देहेषु नष्टेषु नैव नश्याम्यहं सदा ॥ ३२ ॥

யதா ந ஸம்ஸ்ப்ருஶேத் ஸூத்ரம் புஷ்பாணாமுத்தமாதிதா ।
ததா நைகம் ஸர்வகம் மாம் தேஹாநாமுத்தமாதிதா ॥

புஷ்பேஷு தேஷு நஷ்டேஷு யத்வத் ஸூத்ரம் ந நச்யதி ।
ததா தேஹேஷு நஷ்டேஷு நைவ நச்யாம்யஹம் ஸதா ॥

**यथा**-எவ்விதம், **सूत्रं** - நூலை, **पुष्पाणां**-பூக்களுடைய, **उत्तमादिता**-உயர்ந்தது, நடுவானது, தாழ்ந்தது என்ற தன்மை, **न संस्पृशेत्**-ஒட்டாதோ, **तथा**-அவ்விதம், **एकं**-ஒன்றுனவனும், **सर्वगं**-எங்கும் நிறைந்தவனுமான, **मां**-என்னை, **देहानां**-சரீரங்களுடைய, **उत्तमादिता**-மேல், நடு, தாழ்ந்தது என்ற தன்மை, **न (संस्पृशेत्)**-ஒட்டாது.

**यद्वत्**-எவ்விதம், **तेषु**-அந்த, **पुष्पेषु**-பூக்கள், **नष्टेषु**-அழிந்தபொழுதும், **सूत्रं**-நூல், **न नश्यति**-அழிவதில்லையோ, **तथा**-அவ்விதம், **देहेषु**-சரீரங்கள், **नष्टेषु**-அழிந்தபொழுதும், **अहं**-நான், **सदा**-எப்பொழுதும், **नैव नश्यामि**-அழிவதே யில்லை.

எவ்விதம் புஷ்பங்களுள் உள்ள உயர்வு தாழ்வு நூலைச் சார்வதில்லையோ அவ்வாறே ஒருவனும் எங்கும் நிறைந்தவனுமான என்னை தேஹங்களின் உயர்வு தாழ்வு அணுகுவதில்லை. மாலையிலுள்ள புஷ்பங்கள் அழிந்தாலும் அதனால் நூல் அழிவதில்லை. அதேபோன்று தேஹம் அழிந்தாலும் எனக்கு அழிவு இல்லை. கீதையிலும் "**अविनाशि तु तद्विद्धि**" "**देही नित्यमवध्योऽयम्**" (அவிநாசி து தத் வித்தி, தேஹீ நித்யமவத்யோயம்) 'ஆத்மாவிற்கு அழிவு இல்லை' என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (31-32)

**पर्यङ्करज्जुरन्ध्रेषु नानेवैकापि सूर्यभा ।**
**एकोऽप्यनेकवद्भाति तथा क्षेत्रेषु सर्वगः ॥ ३३ ॥**

பர்யங்கரஜ்ஜுரந்த்ரேஷு நாநேவைகாபி ஸூர்யபா ।
ஏகோऽப்யநேகவத் பாதி ததா க்ஷேத்ரேஷு ஸர்வக: ॥

[**यथा**-எவ்விதம்] **सूर्यभा**-சூரியவெளிச்சம், **एकापि**-ஒன்றுயினும், **पर्यङ्करज्जुरन्ध्रेषु**-ஊஞ்சல் சங்கிலிகளின் இடைகளில், **नानेव**-அநேகம்போல, **भाति**-தோன்றுகின்றதோ, **तथा**-அவ்விதம், **सर्वगः**-எங்கும் நிறைந்த (ஆத்மா) **एकोऽपि**-ஒன்றுக

இருப்பினும், क्षेत्रेषु-சரீரங்களில், अनेकवत् - அநேகம்போல, भाति-தோன்றுகின்றது.

எவ்விதம் சூரியனுடைய ஒளி ஒன்ருக இருப்பினும் ஊஞ்சல் சங்கிலியின் பல துவாரங்களில் அநேகம்போல் தோன்றுகின்றதோ அவ்விதம் எங்கும் நிறைந்த ஆத்மா ஒன்ருக இருந்தபோதிலும் சரீரங்களில் பலவாகத் தோன்று கின்றது. (33)

रज्जुरन्ध्रस्थदोषादि सूर्यभां न स्पृशेद्यथा ।
तथा क्षेत्रस्थदोषादि सर्वगं मां न संस्पृशेत् ॥ ३४ ॥

ரஜ்ஜு ரந்த்ரஸ்த தோஷாதி ஸூர்யபாம் ந ஸ்ப்ருஶேத் யதா ।
ததா க்ஷேத்ரஸ்த தோஷாதி ஸர்வகம் மாம் ந
ஸம்ஸ்ப்ருஶேத் ॥

यथा—எவ்வாறு, रज्जुरन्ध्रस्थदोषादि—ஊஞ்சல் சங்கிலியின் இடையிலுள்ள குற்றம் முதலியவை, सूर्यभां—சூரியபிரகாசத்தை, न स्पृशेत् - தொடாதோ, तथा—அவ்வாறு, क्षेत्रस्थदोषादि—சரீரங்களிலுள்ள குற்றம் முதலியவை, सर्वगं—எங்கும் நிறைந்த, मां—என்னை (ஆத்மாவை), न संस्पृशेत् - தொடுவதில்லை.

சங்கிலியின் துவாரங்களில் தென்படும் குற்றங்கள் அதில் உள்ள சூரியனது காந்தியைச் சாராதது போன்று சரீரங்களில் உள்ள குணதோஷங்கள் எங்கும் நிறைந்த என்னைச்சாராது. (34)

तद्रज्जुरन्ध्रनाशेषु नैव नश्यति सूर्यभा ।
तथा क्षेत्रविनाशेषु नैव नश्यामि सर्वगः ॥ ३५ ॥

தத்ரஜ்ஜு ரந்த்ர நாஶேஷு நைவ நச்யதி ஸூர்யபா ।
ததா க்ஷேத்ர விநாஶேஷு நைவ நச்யாமி ஸர்வக: ॥

(यथा—எவ்விதம்) सूर्यभा—சூரியபிரகாசம், तद्रज्जुरन्ध्रनाशेषु—அந்த ஊஞ்சல் சங்கிலியின் இடைவெளி நாசமான பொழுது, नैव नश्यति—அழிவதில்லையோ, तथा—அவ்விதம்,

क्षेत्रविनाशेषु - சரீரங்களின் அழிவினால், सर्वगः-எங்கும் நிறைந்த நான், नैव नश्यामि-அழிவதில்லை.

சங்கிலியின் துவார நாசத்தினால் ஸூர்ய கிரணங்கள் நாசத்தை அடைவதில்லை. அதுபோன்று சரீரங்களின் நாசத்தினால் வியாபியான நான் அழிவதில்லை. (35)

देहो नाहं प्रदृश्यत्वाद्भौतिकत्वान्न चेन्द्रियम् ।
प्राणो नाहमनेकत्वान्मनो नाहं चलत्वतः ॥ ३६ ॥

बुद्धिर्नाहं विकारित्वात्तमो नाहं जडत्वतः ।
देहेन्द्रियादिकं नाहं विनाशित्वाद्घटादिवत् ॥ ३७ ॥

தேஹோ நாஹம் ப்ரத்ருச்யத்வாத் பௌதிகத்வாத்
ந சேந்த்ரியம் ।
ப்ராணோ நாஹமநேகத்வாத் மநோ நாஹம் சலத்வத: ॥
புத்திர் நாஹம் விகாரித்வாத் தமோ நாஹம் ஜடத்வத: ।
தேஹேந்த்ரியாதிகம் நாஹம் விநாசித்வாத் கடாதிவத் ॥

देहः-சரீரம், प्रदृश्यत्वात् - பார்க்கப்படுகிறபடியால், अहं-நான் (ஆத்மா) न-இல்லை. इन्द्रियं च-புலனும், भौतिकत्वात्-பஞ்சபூதங்களால் உண்டாயிருப்பதால், अहं न - ஆத்மா இல்லை. प्राणः-பிராணன், अनेकत्वात्-பலவாக இருப்பதால், अहं न-ஆத்மா இல்லை. मनः-மனது, चलत्वतः-சலனமுள்ள தாகையால், अहं न-ஆத்மா இல்லை. बुद्धिः-புத்தி, विकारित्वात् -மாறுதலுடையதால், अहं न-ஆத்மா இல்லை. तमः-அக்ஞானம் जडत्वतः-அசேதனமானதால், अहं न - ஆத்மா இல்லை. (இவ்வாறு) देहेन्द्रियादिकं-தேகம், இந்திரியம் முதலியன, घटादिवत् - குடம் முதலியவை போன்று, विनाशित्वात् - அழியும் தன்மையுடையதால், अहं न-ஆத்மா இல்லை.

பார்க்கப்படுவதால் நான் (ஆத்மா) சரீரமல்ல. பஞ்சபூதங்களால் உண்டாகி இருப்பதால் இந்திரியங்களும் நானல்ல. பிராணன், அபானன் முதலான அநேகமாயிருப்பதால் நான் பிராணனல்ல. சஞ்சலமுள்ளதாக இருப்பதால்

மனதும் நானல்ல. மாறுதல் உடையதாயிருப்பதால் நான் புத்தியல்ல. ஜடமாயிருப்பதால் அக்ஞானம் நானல்ல. இவ்விதம் குடம் போல் தேஹம் இந்திரியம் முதலானவை அழியக்கூடியதாயிருப்பதால் அவை நானல்ல (36–37)

देहेन्द्रियप्राणमनोबुद्ध्यज्ञानानि भासयन् ।
अहंकारं तथा भासि चैतेषामभिमानिनम् ॥ ३८ ॥

தேஹேந்த்ரிய ப்ராண மநோ புத்யக்ஞாநானி பாஸயன் ।
அஹம்காரம் ததா பாமி சைதேஷாமபிமாநினம் ॥

देहेन्द्रियप्राणमनोबुद्ध्यज्ञानानि–சரீரம், புலன்கள், பிராணன்கள், மனது, புத்தி, அக்ஞானம் இவைகளையும், तथा–அவ்விதமே, एतेषां–இவைகளில், अभिमानिनं–நான் என்ற பற்றுதல் உள்ள, अहंकारं च–அஹங்காரத்தையும், भासयन्–பிரகாசிக்கச்செய்துகொண்டு, भासि–நான் பிரகாசிக்கின்றேன்.

தேஹம், இந்திரியங்கள், பிராணன்கள், மனது, புத்தி அக்ஞானம் இவைகளையும், அவ்விதமே மேற்கூறியவைகளை நான் என்று எண்ணுகின்ற அஹங்காரத்தையும் (நான் என்ற விருத்தியோடு கூடிய அந்தக்கரணத்தையும்) பிரகாசிக்கச் செய்துகொண்டு நான் ஸ்வயம் பிரகாசிக்கின்றேன். (38)

सर्वं जगदिदं नाहं विषयत्वादिदंधियः ।
अहं नाहं सुषुप्त्यादौ अहमः साक्षितः सदा ॥ ३९ ॥

ஸர்வம் ஜகதிதம் நாஹம் விஷயத்வாதிதம்திய: ।
அஹம் நாஹம் ஸுஷுப்த்யாதௌ அஹம: ஸாக்ஷித: ஸதா॥

सर्वं–எல்லா, इदं जगत्–இந்த பிரபஞ்சம், इदंधियः–இது என்ற புத்திக்கு, विषयत्वात्–விஷயமாதலால், अहं न–நான் இல்லை. अहं–நான், सुषुप्त्यादौ–தூக்கம் முதலியவைகளில், अहमः–அஹங்காரத்திற்கு, सदा–எப்பொழுதும், साक्षितः–ஸாக்ஷியாக இருப்பதால், अहं–அகங்காரமும், न–ஆத்மா இல்லை.

இது என்ற புத்தி அல்லது அறிவிற்கு விஷயமாவதால் பார்க்கப்படும் ஸர்வ உலகமும் நானில்லை. ஸுஷுப்தி, ஸமாதி, மூர்ச்சை இவைகளில் எப்பொழுதும் நான் அஹங்காரத்திற்கு ஸாக்ஷியாக இருப்பதால் நான் அஹங்காரமாக ஆகமாட்டேன். (39)

**सुप्तौ यथा निर्विकारस्तथावस्थाद्वयेऽपि च ।**
**द्वयोर्मात्राभियोगेन विकारीव विभाम्यहम् ॥ ४० ॥**

ஸுப்தௌ யதா நிர்விகாரஸ் ததாவஸ்தா த்வயேऽபி ச।
த்வயோர் மாத்ராபியோகேன விகாரீவ விபாம்யஹம் ॥

**अहं**-நான், **सुप्तौ**-தூக்கத்தில், **यथा**-எவ்விதம், **निर्विकारः**-விகாரமற்றவனோ, **अवस्थाद्वयेऽपि च**-ஜாக்ரத் ஸ்வப்னம் இரண்டு அவஸ்தைகளிலும், **तथा**-அவ்வாறே (விகாரமற்றவன்). **द्वयोः**-ஜாக்ரத், ஸ்வப்நம் இரண்டிலும், **मात्राभियोगेन**-விஷயங்களின் ஸம்பந்தத்தினால், **विकारीव**-மாறுதல் உள்ளவன் போல, **अहं**-நான், **विभामि**-தோன்றுகின்றேன்.

ஸுஷுப்தியில் நான் விகாரமற்றவனாக இருப்பதுபோல் ஜாக்ரத் ஸ்வப்நங்களிலும் விகாரமற்றவன். ஜாக்ரத் ஸ்வப்நங்களில் விஷய ஸம்பந்தத்தால் விகாரமுள்ளவன் போல் தோன்றுகின்றேன். (விகாரம் என்பது கர்த்ருத்வம் போக்த்ருத்வம் முதலியவை) (40)

**उपाधिनीलरक्ताद्यैः स्फटिको नैव लिप्यते ।**
**तथात्मा कोशजैः सर्वैः कामाद्यैर्नैव लिप्यते ॥ ४१ ॥**

உபாதி நீல ரக்தாத்யை: ஸ்படிகோ நைவ லிப்யதே ।
ததாத்மா கோஶஜை: ஸர்வை: காமாத்யைர் நைவ லிப்யதே ॥

**यथा**-எவ்விதம், **उपाधिनीलरक्ताद्यैः**-உபாதிகளில் உள்ள (நீலபுஷ்பம், சிவப்பு புஷ்பங்களிலுள்ள) கருப்பு, சிவப்பு முதலிய நிறங்களுடன், **स्फटिकः**-ஸ்படிகமணி **नैव लिप्यते**-ஒட்டுவதில்லையோ, **तथा**-அவ்விதம், **आत्मा**-ஆத்மா, **कोशजैः**-

ஐந்து கோசங்களால் உண்டான, **कामाद्यैः** – ஆசை முதலிய **सर्वैः**–எல்லாவற்றுடனும், **नैव लिप्यते**-ஒட்டுவதில்லை.

கருப்பு, சிவப்பு வஸ்துக்களாகிய உபாதிகளின் சேர்க்கையினால் உண்டான கருப்பு, சிவப்பு நிறங்களுடன் ஸ்படிகம் எவ்விதம் ஸம்பந்தப்படுவதில்லையோ, அவ்விதம் ஐந்து கோசங்களால் உண்டான ஆசை முதலான எல்லா தர்மங்களுடனும் ஆத்மா ஸம்பந்திப்பதில்லை. (41)

**फालेन भ्राम्यमाणेन भ्रमतीव यथा मही ।**
**अगोऽप्यात्मा विमूढेन चलतीव प्रदृश्यते ॥ ४२ ॥**

பாலேந ப்ராம்யமாணேந ப்ரமதீவ யதா மஹீ ।
அகோப்யாத்மா விமூடேன சலதீவ ப்ரத்ருச்யதே ॥

**यथा**-எவ்விதம், **मही**-பூமியானது, **फालेन**-நெற்றியானது, **भ्राम्यमाणेन**-சுற்றும்பொழுது, **भ्रमतीव**–சுழலுவது போல் இருக்கின்றதோ, (**तथा**–அவ்விதம்) **आत्मा**-ஆத்மா, **अगोऽपि**–சலனமற்றதாயினும், **विमूढेन**-அறிவில்லாதவனால், **चलतीव**–சலனமுடையது போன்று, **प्रदृश्यते** – பார்க்கப்படுகின்றது.

தலை சுழலும்பொழுது பூமி சுழலுவதுபோல் எவ்வாறு தோன்றுகின்றதோ அவ்விதம் ஆத்மா சலனமற்றதாக இருப்பினும் அறிவில்லாதவர்களால் சலனமுள்ளதுபோல் பார்க்கப்படுகின்றது. இவ்விஷயம் ஆத்மபோதத்திலும்

**व्यापृतेष्विन्द्रियेष्वात्मा व्यापारीवाविवेकिनाम् ।**
**दृश्यतेऽभ्रेषु धावत्सु धावन्निव यथा शशी ॥**

(வ்யாப்ருதேஷ்விந்த்ரியேஷ்வாத்மா வ்யாபாரீவாவிவேகிநாம் த்ருச்யதேऽப்ரேஷு தாவத்ஸு தாவந்நிவ யதா சசீ ॥) (மேகம் ஓடும்பொழுது சந்திரன் ஓடுவதுபோன்று) என்று த்ருஷ்டாந்தம் கூறப்பட்டிருக்கின்றது. (42)

(அ) முன் கூறியபடியான அத்யாஸரூபமான அக்ஞானமே ஸம்ஸாரகாரணம்:—

देहत्रयमिदं नित्यमात्मत्वेनाभिमन्यते ।
यावत्तावदयं मूढो नानायोनिषु जायते ॥ ४३ ॥

தேஹத்ரயமிதம் நித்யமாத்மத்வேநாபிமன்யதே ।
யாவத் தாவதயம் மூடோ நாநாயோநிஷு ஜாயதே ॥

अयं-இந்த, मूढः-அக்ஞானி, इदं-இந்த, देहत्रयं-ஸ்தூல ஸூக்ஷ்ம, காரண சரீரங்களை, नित्यं-எப்பொழுதும், आत्मत्वेन-ஆத்மாவாக, यावत्-எதுவரை, अभिमन्यते-அபிமானிக்கிறுனே, तावत्-அதுவரை, नानायोनिषु-பல பிறவிகளில், जायते-பிறக்கிறுன்.

அக்ஞானியான புருஷன் எதுவரை ஸ்தூல, ஸூக்ஷ்ம காரண சரீரங்களை ஆத்மாவாக (தாளுக) எண்ணுகின்றுனே, அதுவரை பல பிறவிகளில் பிறக்கின்றுன். (43)

(அ) ஆத்மாவிற்கு துக்கஸம்பந்தமில்லை:—

निद्रादेहजदुःखादिः जाग्रद्देहं न संस्पृशेत् ।
जाग्रद्देहजदुःखादिस्तथात्मानं न संस्पृशेत् ॥ ४४ ॥

நித்ரா தேஹஜ துக்காதிர் ஜாக்ரத்தேஹம் ந ஸம்ஸ்ப்ருசேத் ।
ஜாக்ரத் தேஹஜ துக்காதிஸ்ததாத்மாநம் ந ஸம்ஸ்ப்ருசேத் ॥

यथा-எவ்விதம், निद्रादेहजदुःखादिः-ஸ்வப்ன சரீரத்திலுண்டான சுகதுக்கங்கள், जाग्रद्देहं-ஜாக்ரத் நிலையிலுள்ள சரீரத்தை, न संस्पृशेत्-சாருவதில்லையோ, तथा-அவ்விதம், जाग्रद्देहजदुःखादिः-ஜாக்ரத் நிலையிலுள்ள சரீரத்திலேற்பட்ட சுகதுக்கங்கள், आत्मानं-ஆத்மாவை, न संस्पृशेत्-சாருவதில்லை.

ஸ்வப்நதேஹத்தில் உண்டான சுகதுக்கங்கள் ஜாக்ரத் தேஹத்தில் ஸம்பந்தப்படாதது போன்று ஜாக்ரத் தேஹத்தில் உண்டான சுகதுக்கங்கள் ஆத்மாவில் ஸம்பந்தப்படுவதில்லை. (44)

जाग्रद्देहवदाभाति निद्रादेहस्तु निद्रया ।
निद्रादेहविनाशेन जाग्रद्देहो न नश्यति ॥ ४५ ॥

तथायमात्मवद्भाति जाग्रद्देहस्तु जागरात् ।
जाग्रद्देहविनाशेन नात्मा नश्यति कर्हिचित् ॥ ४६ ॥

ஜாக்ரத் தேஹவதாபாதி நித்ரா தேஹஸ்து நித்ரயா
நித்ராதேஹ விநாசேன ஜாக்ரத்தேஹோ ந நச்யதி ।

ததாயமாத்மவத் பாதி ஜாக்ரத்தேஹஸ்து ஜாகராத் ।
ஜாக்ரத்தேஹ விநாசேன நாத்மா நச்யதி கர்ஹிசித் ॥

**निद्रादेहस्तु** – ஸ்வப்ன சரீரமானது, **निद्रया**–ஸ்வப்னத்திருல், **जाग्रद्देहवत्**–ஜாக்ரத்நிலையின் சரீரம் போன்று **आभाति** தோன்றுகின்றது. **निद्रादेहविनाशेन**-ஸ்வப்ன தேஹ நாசத்திருல், **जाग्रद्देहः** – ஜாக்ரத் நிலையிலுள்ள சரீரம், **न नश्यति**–அழிவதில்லை.

**तथा**–அது போன்று, **अयं**-இந்த, **जाग्रद्देहस्तु** – விழிப்பிலுள்ள சரீரம், **जागरात्**–விழிப்பிருல், **आत्मवत्**–ஆத்மாவைப் போல், **भाति**-தோன்றுகின்றது. **जाग्रद्देहविनाशेन**-விழிப்பிலுள்ள சரீரநாசத்திருல், **आत्मा**-ஆத்மா, **कर्हिचित्**-ஒருபொழுதும், **न नश्यति**-அழிவதில்லை.

ஸ்வப்னத்தில் தோன்றும் தேகம் நித்ரை என்ற தோஷத்திருல் ஜாக்ரத் தேஹம்போல் (உண்மையானது போல்) தோன்றுகின்றது ஆயினும் ஸ்வப்னதேஹ நாசத்திருல் ஜாக்ரத்தேஹம் அழிவதில்லை. ஜாக்ரத்தில் தோன்றும் தேஹம் ஜாக்ரதவஸ்தையிருல் ஆத்மாவைப்போன்று தோன்றுகின்றது. ஆகையால் ஜாக்ரத்தேஹ நாசத்திருல் ஆத்மாவிற்கு அழிவு இல்லை. (45–46)

हित्वायं स्वाप्निकं देहं जाग्रद्देहमपेक्षते ।
जाग्रद्देहप्रबुद्धोऽयं हित्वात्मानं यथा तथा ॥ ४७ ॥

ஹித்வாயம் ஸ்வாப்நிகம் தேஹம் ஜாக்ரத்தேஹமபேக்ஷதே ।
ஜாக்ரத்தேஹப்ரபுத்தோயம் ஹித்வாத்மாநம் யதா ததா ॥

**यथा**-எவ்விதம், **अयं**-இந்த ஜீவன், **स्वाप्निकं**-ஸ்வப்நத்திலுண்டான, **देहं**-சரீரத்தை, **हित्वा**-விட்டுவிட்டு, **जाग्रद्देहं**-விழிப்பிலுள்ள சரீரத்தை, **अपेक्षते**-விரும்புகின்றானோ, **तथा**-அவ்விதம், **जाग्रद्देहप्रबुद्धः**-விழிப்பிலுள்ள சரீரத்தைப் பொய் என்று அறிந்த, **अयं**-இவன் (ஜீவன்) **हित्वा**-(ஜாக்ரத் சரீரத்தை) விட்டு **आत्मानं**-ஆத்மாவை (ஸ்வரூபத்தை) **अपेक्षते**-விரும்புகிறான்.

ஸ்வப்னத்திலிருந்து விழித்தவன் ஸ்வப்ன சரீரத்தை விரும்பாது ஜாக்ரத் சரீரத்தையே விரும்புவதுபோன்று ஜாக்ரத் தேஹத்தை பொய் என்று அறிந்த ஞானி அதை விரும்பாது ஆத்மாவையே விரும்புகின்றான். (ஸ்வப்ந சரீரம் பொய் என்றும், வெகுசீக்கிரத்தில் அழியக்கூடியது என்றும் அறிந்து அதை விரும்புவதில்லை. அதுபோன்று விவேகியும் ஜாக்ரத் தேஹமும் பொய்யென்றும், அழியக் கூடியது என்றும் அறிவதால் அழிவற்ற ஆத்மாவையே விரும்புகிறான்.) (47)

**स्वप्नभोगे यथैवेच्छा प्रबुद्धस्य न विद्यते ।**
**असत्स्वर्गादिके भोगे नैवेच्छा ज्ञानिनस्तथा ॥ ४८ ॥**

ஸ்வப்நபோகே யதைவேச்சா ப்ரபுத்தஸ்ய ந வித்யதே ।
அஸத்ஸ்வர்காதிகே போகே நைவேச்சா ஞானினஸ்ததா ॥

**यथा**-எவ்விதம், **स्वप्नभोगे**-ஸ்வப்நாநுபவத்தில், **प्रबुद्धस्य** விழிப்படைந்தவனுக்கு, **इच्छा**-ஆசையானது, **नैव विद्यते**-ஏற்படுவதில்லையோ, **तथा**-அவ்விதம், **ज्ञानिनः**-ஞானிக்கு (ஆத்மாவை அறிந்தவனுக்கு) **असत्स्वर्गादिके**-பொய்யான ஸ்வர்க்கம் முதலான, **भोगे**-போகத்தில், **इच्छा**-ஆசை, **नैव**-உண்டாவதில்லை.

ஸ்வப்நத்திலிருந்து விழித்தவனுக்கு ஸ்வப்ந சுகத்தில் ஆசை இல்லாததுபோல் ஞானிக்கு சாஸ்திர யுக்திகளால்

பொய் என்று அறியப்பட்ட ஸ்வர்க்கம் முதலான சுகங்களில் ஆசை உண்டாவதில்லை. (48)

भोक्त्रा बहिर्यथा भोग्यः सर्पो दृषदि कल्पितः ।
रूपशीलादयश्चात्मभोगा भोग्यस्वरूपकाः ॥ ४९ ॥

போக்த்ரா பஹிர் யதா போக்ய: ஸர்போ த்ருஷதி கல்பித: ।
ரூபஶீலாதயச்சாத்ம போகா போக்ய ஸ்வரூபகா: ॥

**यथा**–எவ்வாறு, **बहिः**–வெளியில், **भोक्त्रा**–அனுபவிக்கிறவனால், **दृषदि**–கல்லில், **कल्पितः**–கல்பிக்கப்பட்ட, **सर्पः**–ஸர்ப்பம், **भोग्यः**–போக்யவஸ்துவோ, (அவ்வாறே) **आत्मभोगाः**–உள்ளே ஆத்மாவில் போகத்தைத்தருகின்ற, **रूपशीलादयश्च**–ரூபம், சீலம் முதலியவைகளும், **भोग्यस्वरूपकाः** – போக்ய வஸ்துக்களே (போக்தாவான ஆத்மஸ்வரூபத்தில் சேர்ந்தவையல்ல.)

போக்தாவான ஜீவனால் வெளியில் கல்லில் கல்பிக்கப்பட்ட ஸர்ப்பம் போக்யவஸ்துவேயன்றி போக்தாவான ஆத்மா அல்ல. இதுபோல உள்ளே சரீராதிகளில் உள்ள ரூபம், சீலம் முதலியவைகளும் போக்ய வஸ்துக்கள்தான். போக்தாவான ஆத்மஸ்வரூபத்தில் சேர்ந்தவைகள் அல்ல.

ज्ञस्य नास्त्येव संसारो यद्वदज्ञस्य कर्मिणः ।
जानतो नैव भीर्यद्वद्रज्जुसर्पमजानतः ॥ ५० ॥

க்ஞஸ்ய நாஸ்த்யேவ ஸம்ஸாரோ யத்வதக்ஞஸ்ய கர்மிண: ।
ஜானதோ நைவ பீர் யத்வத் ரஜ்ஜுஸர்பமஜானத: ॥

**संसारः**–ஸம்ஸாரமானது, **अज्ञस्य** – அக்ஞானியான, **कर्मिणः**–கர்மாவைச் செய்பவனுக்கு, **यद्वत्**–எவ்விதமிருக்கின்றதோ (அவ்விதம்) **ज्ञस्य**-ஞானிக்கு, **नास्त्येव**–கிடையாது. **यद्वत्**-எவ்விதம், **रज्जुसर्पं**–கயிற்றில் பாம்பை, **अजानतः**–அறியாதவனுக்கு, **भीः**–பயம் உண்டாகிறதோ (அவ்விதம்) **जानतः**–அறிந்தவனுக்கு, **भीः**-பயம், **नैव**–ஏற்படுவதில்லை.

கயிற்றை ஸர்ப்பமாக நினைத்துக் கயிறு என்று அறியாதவனுக்கு பயம் உண்டாவதுபோல் கயிற்றைக் கயிறு என்று தெரிந்தவனுக்கு பயம் உண்டாவதில்லை. அதுபோன்று ஆத்மாவை அறியாது கர்மமார்க்கத்தில் இருப்பவனுக்கு ஸம்ஸாரம் இருப்பதுபோன்று, ஆத்மாவை அறிந்தவனுக்கு ஸம்ஸாரம் இருப்பதில்லை. (50)

सैन्धवस्य घनो यद्वज्जलयोगाज्जलं भवेत् ।
स्वात्मयोगात्तथा बुद्धिरात्मैव ब्रह्मवेदिनः ॥ ५१ ॥

ஸைந்தவஸ்ய கனோ யத்வத் ஜலயோகாத் ஜலம் பவேத் ।
ஸ்வாத்மயோகாத் ததா புத்திராத்மைவ ப்ரஹ்மவேதிந: ॥

यद्वत् - எவ்விதம், सैन्धवस्य घनः - உப்புக்கட்டியானது, जलयोगात् - ஜலத்தின் சேர்க்கையினால், जलं-ஜலமாக, भवेत् ஆகுமோ, तथा-அவ்விதமே, ब्रह्मवेदिनः-பிரம்மத்தை அறிந்தவனுடைய, बुद्धिः-புத்தியானது, स्वात्मयोगात्-தன் ஆத்ம ஸம்பந்தத்தினால், आत्मैव - ஆத்மஸ்வரூபமாகவே (ஆகின்றது.)

ஜலத்தில் போடப்பட்ட உப்புக்கட்டி ஜலமாக ஆவது போல் ப்ரஹ்மஞ்ஞானியின் புத்தியும் ஆத்மஞானத்தால் ஆத்மாவாகவே ஆகிவிடுகின்றது. (51)

तोयाश्रयेषु सर्वेषु भानुरेकोऽप्यनेकवत् ।
एकोऽप्यात्मा तथा भाति सर्वक्षेत्रेष्वनेकवत् ॥ ५२ ॥

தோயாச்ரயேஷு ஸர்வேஷு பாநுரேகோப்யநேகவத் ।
ஏகோப்யாத்மா ததா பாதி ஸர்வக்ஷேத்ரேஷ்வநேகவத் ॥

(यथा-எவ்விதம்), भानुः-சூரியன், एकोऽपि-ஒருவனாயினும் सर्वेषु-எல்லா, तोयाश्रयेषु-நீர் நிலைகளிலும், अनेकवत्-அநேகம் போல், भाति-தோன்றுகின்றதோ, तथा-அவ்விதம், आत्मा-ஆத்மா, एकोऽपि-ஒன்றானபோதிலும், सर्वक्षेत्रेषु-எல்லா சரீரங்களிலும், अनेकवत्-அநேகம்போல தோன்றுகின்றது.

ஜலமுள்ள பற்பல இடங்களில் ஒரே சூரியன் பல சூரியன்களாகத் தோன்றுவதுபோல் ஆத்மா ஒன்ருனலும் பல சரீரங்களில் அநேகமாகத் தோன்றுகின்றது. (52)

भानोरन्य इवाभाति जलभानुर्जले यथा ।
आत्मनोऽन्य इवाभासो भाति बुद्धौ तथात्मनः ॥ ५३ ॥

பாநோரன்ய இவாபாதி ஜலபானுர்ஜலே யதா ।
ஆத்மநோன்ய இவாபாஸோ பாதி புத்தௌ ததாத்மந: ॥

**यथा**-எவ்விதம், **जले**-ஜலத்தில், **जलभानुः**-பிரதிபிம்ப சூரியன், **भानोः**-(ஆகாச) சூரியனைக்காட்டிலும், **अन्य इव**-வேருனதுபோல், **आभाति**-தோன்றுகின்றதோ, **तथा**-அவ்விதம், **बुद्धौ**-புத்தியில், **आत्मनः**-ஆத்மாவினுடைய, **आभासः**-பிரதிபிம்பமானது, **आत्मनः**-ஆத்மாவைக் காட்டிலும், **अन्य इव**-வேருனது போன்று, **भाति**-தோன்றுகின்றது.

ஜலத்திலுள்ள சூரியனின் ப்ரதிபிம்பம் ஆகாசத்திலுள்ள சூரியனைக்காட்டிலும் வேறு சூரியனுகத் தோன்றுவதுபோல் புத்தியில் உள்ள ஆத்மாவின் பிரதிபிம்பம் வேறு ஆத்மாவைப்போல் தோன்றுகின்றது. (53)

विम्बं विना यथा नीरे प्रतिविम्बो भवेत्कथम् ।
विनात्मानं तथा बुद्धौ चिदाभासो भवेत्कथम् ॥ ५४ ॥

பிம்பம் விநா யதா நீரே ப்ரதிபிம்போ பவேத் கதம் ।
விநாத்மானம் ததா புத்தௌ சிதாபாஸோ பவேத் கதம் ॥

**विम्बं विना**-பிம்பம் (உருவம்) இல்லாமல், **नीरे**-ஜலத்தில் **प्रतिविम्बः**-பிரதிபிம்பமானது, **कथं भवेत्**-எப்படி உண்டாகும்? **यथा**-இது எவ்விதமோ, **तथा** - அவ்விதம், **आत्मानं विना**-ஆத்மா இல்லாமல், **बुद्धौ**-புத்தியில், **चिदाभासः**-சைதன்யத்தின் (ஞானத்தின்) பிரதிபிம்பம், **कथं भवेत्**-எவ்விதம் உண்டாகும்?

பிம்பமான ஆகாசத்திலுள்ள சூரியன் இல்லாவிட்டால் ஜலத்தில் எவ்வாறு ப்ரதிபிம்பம் ஏற்படும்? இதுபோல பிம்பமான ஆத்மா இல்லாவிட்டால் புத்தியில் ஆத்மாவின் ப்ரதிபிம்பம் எப்படி ஏற்படும்? (பிம்பரூபமான ஆத்மாவே ஸாக்ஷி எனப்படும்.) (54)

(அ) புத்தியின் தோஷங்கள் ஸாக்ஷி அல்லது கூடஸ்தனான ஆத்மாவிற்கு இல்லை :—

**प्रतिबिम्बचलत्वाद्या यथा बिम्बस्य कर्हिचित् ।**
**न भवेयुस्तथाभासकर्तृत्वाद्यास्तु नात्मनः ॥ ५५ ॥**

ப்ரதிபிம்பசலத்வாத்யா யதா பிம்பஸ்ய கர்ஹிசித் ।
ந பவேயுஸ்ததாபாஸகர்த்ருத்வாத்யாஸ்து நாத்மன: ॥

**यथा**-எவ்விதம், **प्रतिबिम्बचलत्वाद्याः** – பிரதிபிம்பத்தில் உள்ள அசைவு முதலியவை, **बिम्बस्य**-பிம்பத்திற்கு, **कर्हिचित्** ஒரு பொழுதும், **न भवेयुः**-உண்டாகாதோ, **तथा**-அவ்விதம், **आभासकर्तृत्वाद्यास्तु** – அந்தக்கரணப் பிரதிபிம்பத்தில் உள்ள கர்த்ருத்வம் முதலியன, **आत्मनः**-ஆத்மாவிற்கு, **न भवेयुः**-ஏற்படுவதில்லை.

பிரதிபிம்பத்தில் ஏற்படும் சலனம் முதலியவை பிம்பத்தில் ஒருகாலும் ஏற்படாததுபோல் சிதாபாஸனான ஜீவனுடைய கர்த்ருத்வம் முதலானவை ஆத்மாவிற்குக் கிடையாது. (55)

(அ) சிதாபாஸனுக்கு புத்தி தர்மங்கள் கிடையாது:-

**जले शैत्यादिकं यद्वज्जलभानुं न संस्पृशेत् ।**
**बुद्धेः कर्मादिकं तद्वच्चिदाभासं न संस्पृशेत् ॥ ५६ ॥**

ஜலே ஶைத்யாதிகம் யத்வத் ஜலபாநும் ந ஸம்ஸ்ப்ருஶேத் ।
புத்தே: கர்மாதிகம் தத்வத் சிதாபாஸம் ந ஸம்ஸ்ப்ருஶேத் ॥

**यद्वत्**-எவ்வாறு, **जले**-தண்ணீரில் உள்ள, **शैत्यादिकं**-குளிர்ச்சி முதலியன, **जलभानुं**-தண்ணீரில் பிரதிபலிக்கும்

சூரியனை, न संस्पृशेत्-தொடாதோ, तद्वत्-அவ்வாறே, बुद्धेः அந்தக்கரணத்தின் कर्मादिकं-கிரியை முதலியன, चिदाभासं-சைதன்ய ப்ரதிபிம்பத்தை (ஜீவனை) न संस्पृशेत्-தொடாது.

ஜலத்தில் உள்ள குளிர்ச்சி முதலியன ஜலத்தில் தோன்றும் சூரிய ப்ரதிபிம்பத்தைச் சாராததுபோன்று புத்தியில் உள்ள செயல் முதலியன புத்தி பிரதிபிம்பமான சிதாபாஸனை (ஜீவனை)ச் சாருவதில்லை. (56)

(அ) ஜீவனிடத்தில் கர்த்ருத்வம் முதலியன ப்ரமத்தால் தோற்றமே:—

बुद्धेः कर्तृत्वभोक्तृत्वदुःखित्वाद्यैस्तु संयुतः ।
चिदाभासो विकारीव शरावस्थाम्बुभानुवत् ॥ ५७ ॥

புத்தே: கர்த்ருத்வ போக்த்ருத்வ துக்கித்வாத்யைஸ்து ஸம்யுத: ।
சிதாபாஸோ விகாரீவ ஶராவஸ்தாம்புபாநுவத் ॥

बुद्धेः-அந்தக்கரணத்தினுடைய, कर्तृत्वभोक्तृत्वदुःखित्वाद्यैः-கர்த்ருத்வம், போக்த்ருத்வம், துக்கித்வம் முதலியவைகளுடன், संयुतः-கூடிய, चिदाभासस्तु-ஜீவனோவெனில், शरावस्थांबुभानुवत् - சட்டியில் உள்ள ஜலத்தில் தோன்றும் சூரிய பிரதிபிம்பம்போன்று, विकारीव-விகாரமுடையவன் (மாறுதல் உடையவன்) போல தோன்றுகிறான்.

சட்டியில் உள்ள ஜலத்தில் தோன்றும் சூரியப்ரதிபிம்பம் ஜலத்தின் சலனத்தினால் சலிப்பதுபோல் தோன்றுகின்றது. அதேபோன்று புத்தியின் கர்த்ருத்வம், போக்த்ருத்வம்,சுகம், துக்கம் இவைகளுடன் கூடிய சிதாபாஸனும் விகாரமுள்ளவன்போல் (அந்த தர்மங்களுடன் கூடியவன்போல்) தோன்றுகின்றான். (57)

शरावस्थोदके नष्टे तत्स्थो भानुर्विनष्टवत् ।
बुद्धेर्लये तथा सुप्तौ नष्टवत्प्रतिभात्ययम् ॥ ५८ ॥

ஶராவஸ்தோதகே நஷ்டே தத்ஸ்தோ பானுர் விநஷ்டவத் ।
புத்தேர்லயே ததா ஸுஷுப்தௌ நஷ்டவத் ப்ரதிபாத்யயம் ॥

(यथा-எவ்விதம்) शरावस्थोदके-சட்டியில் உள்ள தண்ணீரானது, नष्टे-நாசமடைந்ததும், तत्स्थः-அதிலுள்ள, भानुः-சூரியன், विनष्टवत्-நாசமடைந்தது போன்று (தோன்றுகின்றதோ) तथा-அவ்விதம், सुप्तौ-ஸுஷுப்தியில், बुद्धेः-புத்தியினுடைய, लये - ஒடுக்கம் ஏற்பட்டபொழுது, अयं - இந்த ஆத்மாவும், नष्टवत्-இல்லாததுபோன்று, प्रतिभाति-தோன்றுகின்றது.

சட்டியில் உள்ள தண்ணீர் நஷ்டமானதும் அதில் பிரதிபிம்பித்ததாயிருந்த சூரியனும் நாசமடைந்ததுபோல் தோன்றுகின்றான். அதே போன்று ஸுஷுப்தியில் புத்தியானது லயமானபொழுது (ஒடுங்கியபொழுது) ஆத்மாவும் நாசமடைந்ததுபோன்று தோன்றுகின்றது. (58)

(அ) புத்தி ஸாக்ஷியே ஆத்மா :—

जलस्थार्कं जलं चोर्मिं भासयन्भाति भास्करः ।
आत्माभासं धियं बुद्धेः कर्तृत्वादीनयं तथा ॥ ५९ ॥

ஜலஸ்தார்கம் ஜலம் சோர்மிம் பாஸயன் பாதி பாஸ்கர: ।
ஆத்மாபாஸம் தியம் புத்தே: கர்த்ருத்வாதீனயம் ததா ॥

(यथा-எவ்விதம்) भास्करः-சூரியன், जलस्थार्कं-ஜலத்திலுள்ள பிரதிபிம்ப சூரியனையும், जलं-ஜலத்தையும், ऊर्मिं च-அலையையும், भासयन्-பிரகாசிக்கச் செய்துகொண்டு, भाति-தானும் பிரகாசிக்கிறானோ, तथा-அவ்விதம், अयं-இந்த ஆத்மாவும், आत्माभासं-தன் பிரதிபிம்பத்தையும், धियं-புத்தியையும், बुद्धेः-புத்தியினுடைய, कर्तृत्वादीन्-கர்த்ருத்வம் முதலியவைகளையும் (பிரகாசிக்கச் செய்து கொண்டு தானும் பிரகாசிக்கிறான்.)

சூரியன் ஜலத்திலுள்ள பிரதிபிம்ப சூரியனையும், ஜலத்தையும், அலையையும், பிரகாசிக்கச் செய்துகொண்டு

தானும் பிரகாசிப்பதுபோன்று, ஆத்மாவும், சிதாபாஸனை யும் (ஜீவனையும்) புத்தியையும், அதன் தர்மமான கர்த் ருத்வம் முதலியவற்றையும் பிரகாசிக்கச் செய்துகொண்டு தானும் பிரகாசிக்கின்றது. (கர்த்ருத்வம் – செயல்களைச் செய்தல்.) (59)

(அ) ஆத்மாவிற்கு ஒருகாலும் மறைவு கிடையாது :—

मेघावभासको भानुर्मेघच्छन्नोऽवभासते ।
मोहावभासकस्तद्वन्मोहच्छन्नो विभात्ययम् ॥ ६० ॥

மேகாவபாஸகோ பானுர் மேகச்சந்நோவபாஸதே ।
மோஹாவபாஸகஸ் தத்வன் மோஹச்சந்நோ விபாத்யயம் ॥

(यद्वत्-எவ்விதம்), **मेघावभासकः**-மேகத்தைப் பிரகாசிக்க செய்யும், **भानुः**-சூரியன், **मेघच्छन्नः**-மேகத்திஞல் மறைக்கப் பட்டு, **अवभासते**-விளங்குகிருனே, **तद्वत्**-அது போன்று, **मोहावभासकः**-அக்ஞானத்தைப் பிரகாசிக்கச் செய்கின்ற, **अयं**-இந்த ஆத்மா, **मोहच्छन्नः**-அக்ஞானத்திஞல் மறைக்கப் பட்டவஞக, **विभाति**-விளங்குகிருன்.

மேகத்தைப் பிரகாசிக்கச் செய்யும் சூரியன் அதே மேகத்திஞல் மறைக்கப்பட்டவஞக விளங்குவதுபோல் அக்ஞானத்தைப் பிரகாசிக்கச் செய்யும் ஆத்மா அதே அக்ஞானத்திஞல் மறைக்கப்பட்டவஞக விளங்குகிருன். சூரியனை மேகம் மறைத்திருக்கிறது என்று அறிவதே சூரியனது பிரகாசத்திஞல்தான். அந்த சூரியனை மேகம் எவ்வாறு மறைக்க முடியும்? மறைத்திருக்கின்றது என்று கூறுவது அறியாமையே. அதுபோல் நான் அக்ஞானி என்று அக்ஞானத்தைப் பிரகாசிக்கச் செய்யும் ஆத்மாவை எவ்வாறு அக்ஞானம் மறைக்க முடியும்? அக்ஞானம் மறைக்கின்றது என்பது ப்ரமமே. (60)

भास्यं मेघादिकं भानुर्भासयन्प्रतिभासते ।
तथा स्थूलादिकं भास्यं भासयन्प्रतिभात्ययम् ॥ ६१ ॥

பாஸ்யம் மேகாதிகம் பாநுர் பாஸயன் ப்ரதிபாஸதே |
ததா ஸ்தூலாதிகம் பாஸ்யம் பாஸயன் ப்ரதிபாத்யயம் ||

(यथा–எவ்விதம்) भास्यं–பிரகாசப்படுத்தவேண்டிய, मेघादिकं–மேகம் முதலியதை, भानुः–சூரியன், भासयन्–பிரகாசிக்கச் செய்துகொண்டு, प्रतिभासते–பிரகாசிக்கிறதோ, तथा–அவ்விதம், भास्यं–பிரகாசப்படுத்தவேண்டிய, स्थूलादिकं–ஸ்தூலம் ஸூக்ஷ்மம் முதலிய சரீரங்களை, भासयन्–பிரகாசிக்கச்செய்துகொண்டு, अयं–இந்த ஆத்மா, प्रतिभाति–பிரகாசிக்கின்றது.

சூரியன், பிரகாசமற்றதும், பிரகாசப்படுத்தவேண்டியதுமான மேகம் முதலியவற்றைப் பிரகாசிக்கும்படி செய்துகொண்டு தானும் பிரகாசிப்பதுபோல் ஆத்மாவும் ஜடமான ஸ்தூல ஸூக்ஷ்மங்களை பிரகாசிக்கும்படி செய்துகொண்டு தானும் பிரகாசிக்கின்றது. (61)

(அ) ஆத்மா அஸங்கன் என்பது:—

**सर्वप्रकाशको भानुः प्रकाश्यैर्नैव दूष्यते ।**
**सर्वप्रकाशको ह्यात्मा सर्वैस्तद्वन्न दूष्यते ॥ ६२ ॥**

ஸர்வப்ரகாஶகோ பாநுः ப்ரகாச்யைர் நைவ தூஷ்யதே |
ஸர்வப்ரகாஶகோ ஹ்யாத்மா ஸர்வைஸ்தத்வந் ந
தூஷ்யதே ||

(यद्वत्–எவ்விதம்) सर्वप्रकाशकः–எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும், भानुः–சூரியன், प्रकाश्यैः–பிரகாச விஷயமான பொருள்களால், नैव दूष्यते–கெடுக்கப்படுவதில்லையோ, तद्वत् அதுபோல, सर्वप्रकाशकः – எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும், आत्मा–ஆத்மாவானது, सर्वैः–எப்பொருள்களாலும், न हि दूष्यते–கெடுக்கப்படுவதில்லை.

எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் சூரியன் தன்னால் பிரகாசிக்கும்படி செய்யப்பட்ட வஸ்துக்களின் குண தோஷங்களை அடையாததுபோல் எல்லாவற்றையும்

பிரகாசிக்கச் செய்யும் ஆத்மா எந்த வஸ்துக்களுடைய குண தோஷங்களையும் அடைவதில்லை. (62)

(அ) ஆத்மஸ்வரூபத்தைத் தெளிவாகக் கூறுகிறார்:-

**मुकुरस्थं मुखं यद्वन्मुखवत्प्रथते मृषा ।**
**बुद्धिस्थाभासकस्तद्वदात्मवत्प्रथते मृषा ॥ ६३ ॥**

**मुकुरस्थस्य नाशेन मुखनाशो भवेत्कथम् ।**
**बुद्धिस्थाभासनाशेन नाशो नैवात्मनः क्वचित् ॥ ६४ ॥**

முகுரஸ்தம் முகம் யத்வத் முகவத் ப்ரததே ம்ருஷா ।
புத்திஸ்தாபாஸகஸ் தத்வதாத்மவத் ப்ரததே ம்ருஷா ॥

முகுரஸ்தஸ்ய நாஶேன முகநாஶோ பவேத் கதம் ।
புத்திஸ்தாபாஸநாஶேன நாஶோ நைவாத்மந: க்வசித் ॥

**यद्वत्**-எவ்விதம், **मुकुरस्थं**-கண்ணாடியில் பிரதிபலித்த, **मुखं**-முகமானது, **मृषा**-பொய்யாக, **मुखवत्**-முகம்போல், **प्रथते**-தோன்றுகின்றதோ, **तद्वत्**-அதுபோல, **बुद्धिस्थाभासकः**-புத்தியில் பிரதிபிம்பமாகிற ஜீவன், **आत्मवत्**-ஆத்மாவைப் போன்று, **मृषा**-பொய்யாக, **प्रथते**-தோன்றுகின்றது.

**मुकुरस्थस्य**-கண்ணாடியிலுள்ள பிரதிபிம்பத்தின், **नाशेन**-நாசத்தினால், **मुखनाशः**-முகத்தின் நாசமானது, **कथं भवेत्**-எவ்விதம் உண்டாகும்? உண்டாகாது (அதுபோல்) **बुद्धिस्थाभासनाशेन**-அந்தக்கரண பிரதிபிம்ப நாசத்தினால், **क्वचित्**-ஒருகாலும், **आत्मनः**-ஆத்மாவினுடைய, **नाशः**-நாசமானது, **नैव भवेत्**-உண்டாகாது.

கண்ணாடியில் பிரதிபிம்பத்தை அடைந்த முகம், முகம் போல் பொய்யாகத்தோற்றமளிப்பதுபோல் புத்தியில் பிரதி பிம்பமான சிதாபாஸனும், ஆத்மாவைப்போல் பொய்யாகத் தோற்றுகின்றது. (சிதாபாஸன், புத்தியிலுள்ள ஆத்மா வின் பிரதிபிம்பம்)

கண்ணாடியிலுள்ள பிரதிபிம்ப நாசத்தினால் முகத்திற்கு நாசமில்லாததுபோல் புத்தியிலுள்ள சிதாபாஸ நாசத்தினால் ஆத்மாவிற்கு ஒருபொழுதும் நாசம் கிடையாது. (63-64)

(அ) ஸர்வ ஜகத்தும் ஆத்மாவைத்தவிற வேறு இல்லை:—

ताम्रकल्पितदेवादिस्ताम्रादन्य इव स्फुरेत् ।
प्रतिभास्यादिरूपेण तथात्मोत्थमिदं जगत् ॥ ६५ ॥

தாம்ர கல்பித தேவாதிஸ் தாம்ராதன்ய இவ ஸ்புரேத்।
ப்ரதிபாஸ்யாதிரூபேண ததாத்மோத்தமிதம் ஜகத் ॥

(यथा–எவ்வாறு) ताम्रकल्पितदेवादिः–செம்பில் செய்யப்பட்ட தேவதை முதலியவை, ताम्रात्–செம்பைக்காட்டிலும், अन्य इव–வேறானதுபோல், स्फुरेत्–தோன்றுமோ, तथा–அவ்வாறே, प्रतिभास्यादिरूपेण–ப்ரமேயம் முதலான ரூபமாக, आत्मोत्थं–ஆத்மாவிலிருந்து உண்டான, इदं जगत्–இந்த பிரபஞ்சமும் (வேறானதுபோல் தோன்றுகிறது.)

செம்பினால் தேவதா மூர்த்திகளையும் மற்றும் பல உருவங்களையும் சில்பி செய்கிறான். அவைகளை நாம் பார்க்கும்பொழுது செம்பைக்காட்டிலும் வேறானவைபோல் தோன்றுகின்றன. இதுபோல ஆத்மாவினிடம் உண்டான ப்ரமேயம், ப்ரமாணம், ப்ரமாதா என்ற இந்த பிரபஞ்சமும் ஆத்மாவைக்காட்டிலும் வேறானவைபோல் தோன்றுகின்றது. (65)

(அ) ஜீவ ஈச்வராதிகளின் பேதமும் தோற்றமே:—

ईशजीवात्मवद्भाति यथैकमपि ताम्रकम् ।
एकोऽप्यात्मा तथैवायमीशजीवादिवन्मृषा ॥ ६६ ॥

यथेश्वरादिनाशेन ताम्रनाशो न विद्यते ।
तथेश्वरादिनाशेन नाशो नैवात्मनः सदा ॥ ६७ ॥

ஈஶ ஜீவாத்மவத் பாதி யதைகமபி தாம்ரகம் ।
ஏகோப்யாத்மா ததைவாயமீஶஜீவாதிவன் ம்ருஷா ॥

யதேச்வராதிநாஶேன தாம்ரநாஶோ ந வித்யதே ।
ததேச்வராதிநாஶேன நாஶோ நைவாத்மந: ஸதா ॥

**यथा**-எவ்விதம், **ताम्रकं**-செம்பு, **एकमपि**-ஒன்ருன போதிலும், **ईशजीवात्मवत्**-ஈச்வரன் போன்றும், ஜீவன் போன்றும் (பலவாக) **भाति**-தோன்றுகின்றதோ, **तथैव**-அவ்விதமே, **अयं**-இந்த, **आत्मा**-ஆத்மாவானது, **एकोऽपि**-ஒன்ருனபோதிலும், **ईशजीवादिवत्**-ஈச்வரன், ஜீவன் முதலியவைபோன்று, **मृषा**-பொய்யாக, **भाति**-விளங்குகின்றது.

**यथा**-எவ்வாறு, **ईश्वरादिनाशेन**-ஈச்வரன் முதலிய உருவங்களின் நாசத்திஞல், **ताम्रनाशः**-செம்பின் நாசம், **न विद्यते** உண்டாவதில்லையோ, **तथा**-அவ்விதம், **ईश्वरादिनाशेन**-ஈச்வரன் முதலியவர்களின் நாசத்திஞல், **आत्मनः**-ஆத்மாவிற்கு **सदा**-எப்பொழுதும், **नाशः**-அழிவு, **नैव**-உண்டாவதில்லை.

செம்பு ஒன்ருஞலும் அதஞல் செய்யப்பட்ட ஈச்வரன், ஜீவன் முதலானவை வேருகப் பொய்யாகத் தோற்றுகின்றது. அதேபோன்று இந்த ஆத்மாவும், ஜீவன், ஈச்வரன், ஜகத்ரூபமாகப் பொய்யாகத் தோன்றுகின்றது.

செம்பிஞல் செய்யப்பட்ட ஈச்வரன் முதலானவைகளின் நாசத்திஞல் செம்பிற்கு நாசம் ஏற்படாததுபோல் ஜீவன், ஈச்வரன், ஜகத் இவைகளின் நாசத்திஞல் ஆத்மாவிற்கு ஒருக்காலும் நாசமில்லை. (66–67)

(அ) ஆத்மாவின் ஸத்தையால் ஜகத் ஸத்தாக (உண்மையாக)த் தோன்றுகின்றது:—

**अध्यस्तो रज्जुसर्पोऽयं सत्यवद्रज्जुसत्तया ।**
**तथा जगदिदं भाति सत्यवत्स्वात्मसत्तया ॥ ६८ ॥**

அத்யஸ்தோ ரஜ்ஜுஸர்போயம் ஸத்யவத் ரஜ்ஜுஸத்தயா ।
ததா ஜகதிதம் பாதி ஸத்யவத் ஸ்வாத்ம ஸத்தயா ॥

(**यथा**-எவ்விதம்) **अध्यस्तः**-ஆரோபம் செய்யப்பட்ட, **अयं**-இந்த, **रज्जुसर्पः**-கயிற்றில் பாம்பானது, **रज्जुसत्तया**-கயிற்றிலுள்ள ஸத்தையால் (இருப்பால்) **सत्यवत्**-உண்மையானது போன்று **भाति**-தோன்றுகின்றதோ, **तथा**-அவ்விதம், **इदं**-இந்த, **जगत्**-பிரபஞ்சம், **स्वात्मसत्तया**-தன் ஆத்மாவின் ஸத்தையினுல், **सत्यवत्**-உண்மையானது போல், **भाति**-தோன்றுகின்றது.

ப்ரமத்தினுல் கயிற்றில் தோன்றும் ஸர்ப்பமானது கயிற்றின் ஸத்தையால் உண்மையானதுபோல் தோன்றுகிறது. இதுபோல இந்தப் பிரபஞ்சமும் ஆத்மாவின் ஸத்தையினுல் உண்மையானது போல் தோன்றுகின்றது.

(அ) ஆத்மாவே ஸத்யம்:—

**अध्यस्ताहेरभावेन रज्जुरेवावशिष्यते ।**
**तथा जगदभावेन सदात्मैवावशिष्यते ॥ ६९ ॥**

அத்யஸ்தாஹேரபாவேந ரஜ்ஜுரேவாவஶிஷ்யதே ।
ததா ஜகதபாவேன ஸதாத்மைவாவஶிஷ்யதே ॥

(**यथा**-எவ்வாறு) **अध्यस्ताहेः**-ஆரோபிக்கப்பட்ட பாம்பினுடைய, **अभावेन**-இல்லாமையால், **रज्जुरेव**-கயிறுதான், **अवशिष्यते**-மிஞ்சுகின்றதோ, **तथा** - அவ்விதம், **जगदभावेन**-ஜகத்தின் நாசத்தினுல் (இன்மையால்) **सदात्मैव**-உண்மையான ஆத்மாதான், **अवशिष्यते**-மிஞ்சுகின்றது.

கயிற்றில் ஆரோபம் செய்யப்பட்ட ஸர்ப்பம் மறைந்தபின் கயிறு ஒன்றே மிஞ்சுவதுபோல் பிரபஞ்சம் நாசமானபொழுது (இல்லாமல் போனபொழுது) ஸத்யமான ஆத்மாவே மிஞ்சுகின்றது. '**अधिष्ठानावशेषो हि नाशः कल्पितवस्तुनः**' (அதிஷ்டாநாவஶேஷோ ஹி நாஶ: கல்பிதவஸ்துந:) "ஆரோபம் செய்யப்பட்ட வஸ்துவின் நாசமானது அதிஷ்டான மாத்திரமே" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (69)

स्फटिके रक्तता यद्वदुपाधेर्नीलताम्बरे ।
यथा जगदिदं भाति तथा सत्यमिवाद्वये ॥ ७० ॥

स्फटिके रक्तता मिथ्या मृषा खे नीलता यथा ।
तथा जगदिदं मिथ्या एकस्मिन्नद्वये मयि ॥ ७१ ॥

ஸ்படிகே ரக்ததா யத்வதுபாதேர் நீலதாம்பரே । —
யதா ஜகதிதம் பாதி ததா ஸத்யமிவாத்வயே ॥

ஸ்படிகே ரக்ததா மித்யா ம்ருஷா கே நீலதா யதா ।
ததா ஜகதிதம் மித்யா ஏகஸ்மிந்நத்வயே மயி ॥

**यद्वत्**-எவ்விதம், **उपाधेः**-உபாதியின் ஸம்பந்தத்தினால், **स्फटिके**-ஸ்படிகமணியில், **रक्तता**-சிவப்பும், **यथा**-எவ்விதம், **अम्बरे**-ஆகாயத்தில், **नीलता**-கருப்பும், **भाति**-தோன்றுகின்றதோ, **तथा**-அவ்விதம், **अद्वये**-இரண்டற்ற ஆத்மாவில், **इदं जगत्**-இந்த பிரபஞ்சம், **सत्यमिव**-உண்மையானதுபோல், **भाति**-தோன்றுகின்றது.

**स्फटिके**-ஸ்படிகமணியில், **रक्तता**-சிவப்பு, **यथा**-எவ்விதம் **मिथ्या**-தோற்றமோ, **खे**-ஆகாயத்தில், **नीलता**-நீலநிறம், **यथा** -எவ்விதம், **मृषा**-தோற்றமோ, **तथा**-அவ்விதம், **एकस्मिन्**-ஒன்றுனதும், **अद्वये**-இரண்டற்றதுமான, **मयि**-என்னிடத்தில் (ஆத்மாவில்) **इदं**-இந்த, **जगत्** - பிரபஞ்சம், **मिथ्या**-தோற்றமே.

சிவந்த புஷ்பம் முதலியவற்றின் ஸம்பந்தத்தினால் ஸ்படிகத்தில் சிவப்பும், மேக ஸம்பந்தத்தினால் ஆகாசத்தில் நீலநிறமும் தோற்றுவதுபோல் இரண்டற்ற ஆத்மாவினிடத்தில் இவ்வுலகம் உண்மையானதுபோல் தோன்றுகின்றது.

ஸ்படிகத்தில் சிவப்பும், ஆகாசத்தில் நீலமும் பொய்யானது போல் இரண்டற்ற ஒரே ஆத்மாவான என்னிடத்தில் இந்த உலகமும் பொய்யான தோற்றமே. (70–71)

जीवेश्वरादिभावेन भेदं पश्यति मूढधीः ।
निर्भेदे निर्विशेषेऽस्मिन्कथं भेदो भवेद्ध्रुवम् ॥ ७२ ॥

ஜீவேச்வராதி பாவேன பேதம் பச்யதி மூடதீ: ।
நிர்பேதே நிர்விஶேஷேऽஸ்மின் கதம் பேதோ பவேத் த்ருவம்॥

**मूढधीः** - அக்ஞானி, **जीवेश्वरादिभावेन** - ஜீவன் ஈச்வரன் முதலானரூபமாக, **भेदं**-வேற்றுமையை, **पश्यति**-பார்க்கிறான் **निर्भेदे**-பேதமற்றதும், **निर्विशेषे**-ஒருவித தர்மமும் அற்றதுமான **अस्मिन्**-இந்த ஆத்மாவில், **कथं**-எவ்விதம், **भेदः**-பேதம், **भवेत्**-இருக்கும் (இருக்காது) **ध्रुवम्**-நிச்சயம்.

அக்ஞானி ஜீவன் ஈசுவரன் ஜகத் என்று வெவ்வேறாக அறிகின்றான். பேதமற்றதும், தர்மம் இல்லாததுமான ஆத்மாவினிடம் எவ்விதம் பேதம் ஸம்பவிக்கும். ஸம்பவிக்காது. (72)

(அ) ஜீவபேதமும் இல்லை:—

लिङ्गस्य धारणादेव शिवोऽयं जीवतां व्रजेत् ।
लिङ्गनाशे शिवस्यास्य जीवतावेशता कुतः ॥ ७३ ॥

லிங்கஸ்ய தாரணாதேவ ஶிவோயம் ஜீவதாம் வ்ரஜேத் ।
லிங்க நாஶே ஶிவஸ்யாஸ்ய ஜீவதாவேஶதா குத: ॥

**अयं**-இந்த, **शिवः**-பரமாத்மா, **लिङ्गस्य**-லிங்கசரீரத்தை, **धारणादेव**-தரிப்பதினாலேயே, **जीवतां**-ஜீவத்தன்மையை, **व्रजेत्**-அடைகிறான். **लिङ्गनाशे**-லிங்கசரீரம் நாசம் அடைந்த பொழுது, **अस्य**-இந்த, **शिवस्य**-பரமாத்மாவிற்கு, **जीवतावेशता**-ஜீவரூபமான ஆவேசமானது **कुतः**-எவ்விதம் ஸம்பவிக்கும் (ஸம்பவிக்காது)

ஆனந்த ரூபமான பரமாத்மா லிங்க சரீர ஸம்பந்தத்தினால் ஜீவபாவத்தை அடைகிறார். லிங்க சரீரம் அழிந்தபொழுது பரமாத்மாவிற்கு ஜீவத்தன்மை கிடையாது. லிங்க

சரீரத்தில் பிரதானமானது அந்தக்கரணம். அதில் சைதன்யத்தின் பிரதிபிம்பமே சிதாபாஸன் என்றும், ஜீவன் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. பிரம்ம ஞானத்தினால் அந்தக்கரணத்தோடு கூடிய லிங்க சரீரம் அழிந்தபொழுது ஆபாஸரூபமான ஜீவத்தன்மை போய்விடுகின்றது என்பது கருத்து. (73)

(அ) ஜீவனும் பிரம்மமும் ஒன்றே :—

शिव एव सदा जीवो जीव एव सदा शिवः ।
वेत्त्यैक्यमनयोर्यस्तु स आत्मज्ञो न चेतरः ॥ ७४ ॥

ஶிவ ஏவ ஸதா ஜீவோ ஜீவ ஏவ ஸதா ஶிவ: ।
வேத்யைக்யமநயோர் யஸ்து ஸ ஆத்மக்ஞோ ந சேதர:॥

**जीवः**-ஜீவன், **सदा** - எப்பொழுதும், **शिव एव**-பரமாத்மாவே. **शिवः**-பரமாத்மா, **सदा**-எப்பொழுதும், **जीव एव**-ஜீவனே. **यस्तु**-எவன், **अनयोः**-இந்த ஜீவாத்மா, பரமாத்மா இருவர்களுக்கும், **ऐक्यं**-அபேதத்தை, **वेत्ति** - அறிகிறானோ, **सः**-அவன், **आत्मज्ञः**-ஆத்மாவை அறிந்தவன். **इतरः**-மற்றவன், **न च**-ஆத்மஞானியாகமாட்டான்.

(இவ்விதம்) ஜீவன் முக்காலத்திலும் பரமாத்மாவைத் தவிர வேறு இல்லை. பரமாத்மா முக்காலத்திலும் ஜீவாத்மாவைத்தவிர வேறு இல்லை என்று ஜீவாத்ம பரமாத்மாக்களுடைய ஐக்யத்தை (ஒன்று என்பதை) அறிபவனே ஆத்மக்ஞானி ஆவான். மற்றவன் ஆத்மஞானி ஆகமாட்டான். (74)

क्षीरयोगाद्यथा नीरं क्षीरवद्दृश्यते मृषा ।
आत्मयोगादनात्मायमात्मवद्दृश्यते तथा ॥ ७५ ॥

க்ஷீர யோகாத் யதா நீரம் க்ஷீரவத் த்ருச்யதே ம்ருஷா ।
ஆத்ம யோகாதநாத்மாऽயமாத்மவத் த்ருச்யதே ததா ॥

**क्षीरयोगात्**-பாலின் சேர்க்கையினுல், **नीरं**-ஜலமானது, **क्षीरवत्**-பால்போன்று, **मृषा**-பொய்யாக, **यथा** – எவ்விதம், **दृश्यते**-தோன்றுகின்றதோ, **तथा**-அவ்விதம், **आत्मयोगात्**-ஆத்மாவின் ஸம்பந்தத்தினுல், **अयम्**-இந்த, **अनात्मा**-ஆத்மாவிற்கு வேருன சரீரம் முதலியவை, **आत्मवत्**-ஆத்மாவைப் போன்று, **दृश्यते**-காணப்படுகின்றது.

பாலின் சேர்க்கையினுல் ஜலம் பொய்யாகப் பாலாகத் தோற்றுவதுபோல் ஆத்ம ஸம்பந்தத்தினுல், ஆத்மாவல்லாத சரீரம், இந்திரியம் முதலியவை ஆத்மாவைப்போல் பொய்யாகத் தோன்றுகின்றது. (75)

**नीरात्क्षीरं पृथक्कृत्य हंसो भवति नान्यथा ।**
**स्थूलादेः स्वं पृथक्कृत्य मुक्तो भवति नान्यथा ॥ ७६ ॥**

*நீராத் க்ஷீரம் ப்ருதக்க்ருத்ய ஹம்ஸோ பவதி நாந்யதா ।*
*ஸ்தூலாதே: ஸ்வம் ப்ருதக்க்ருத்ய முக்தோ பவதி நாந்யதா ॥*

**नीरात्**-ஜலத்திலிருந்து, **क्षीरं**-பாலை, **पृथक्कृत्य**-வேறுபடுத்துவதால், **हंसो भवति** – ஹம்ஸபக்ஷியாக ஆகின்றது. **अन्यथा** – அவ்விதமில்லாவிடில், **न**-ஹம்ஸ பக்ஷியாக ஆவதில்லை. (இதுபோன்று) **स्थूलादेः**-ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களிலிருந்து, **स्वं**-ஆத்மாவை, **पृथक्कृत्य**-வேறுபடுத்தித் தெரிந்து கொள்ளுவதால், **मुक्तः** – மோக்ஷமடைந்தவனுக, **भवति**-ஆகிருன். **अन्यथा**-அவ்விதமில்லாவிடில், **न**-முக்தனுகி ஆகமாட்டான்.

பால்கலந்த ஜலத்திலிருந்து பாலைத் தனியாகப் பிரித்தெடுக்கிறது ஹம்ஸபக்ஷி. அவ்விதம் செய்ய இயலாதது ஹம்ஸம் ஆகமாட்டாது அது போன்று ஆத்மாவல்லாத ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களிலிருந்து ஆத்ம ஸ்வரூபத்தைப் பிரித்து வேருக அறிபவனே முக்தன் ஆவன். மற்றவன் முக்தனுக ஆகமாட்டான். (76)

**क्षीरनीरविवेकज्ञो हंस एव न चेतरः ।**
**आत्मानात्मविवेकज्ञो यतिरेव न चेतरः ॥ ७७ ॥**

க்ஷீர நீர விவேகக்ஞோ ஹம்ஸ ஏவ ந சேதர: ।
ஆத்மாநாத்ம விவேகக்ஞோ யதிரேவ ந சேதர: ॥

**हंस एव**-ஹம்ஸம்தான், **क्षीरनीरविवेकज्ञः**-பாலையும் நீரையும் பிரித்துத் தெரிந்துகொள்ளும். **इतरः च**-வேறு ஒன்றும், **न**-அறிந்து கொள்ளாது. (அதுபோல) **यतिरेव**-யதிதான், **आत्मानात्मविवेकज्ञः**-ஆத்மாவையும் அநாத்மாவையும் பிரித்துத் தெரிந்துகொள்வான். **इतरः**-மற்றவன், **न**-அறிந்து கொள்ளமாட்டான்.

ஹம்ஸம்தான் பாலையும் ஜலத்தையும் பிரித்து அறியும். மற்றவை அறியமாட்டா. அதே போன்று யதிதான் ஆத்மாவையும், ஜடத்தையும் பிரித்து அறிபவன். மற்றவன் பிரித்து அறியமாட்டான். (77)

**अध्यस्तचोरजः स्थाणोर्विकारः स्यान्नहि क्वचित् ।**
**नात्मनो निर्विकारस्य विकारो विश्वजस्तथा ॥ ७८ ॥**

அத்யஸ்த சோரஜ: ஸ்தாணோர் விகார: ஸ்யாத் நஹி க்வசித் ।
நாத்மநோ நிர்விகாரஸ்ய விகாரோ விச்வஜஸ்ததா ॥

**अध्यस्तचोरजः**-கட்டையில் ஆரோபம் செய்யப்பட்ட திருடனிடம் உண்டான, **विकारः**-மாறுதல் (குணதோஷங்கள்), **स्थाणोः**-கட்டைக்கு, **क्वचित्**-ஒருபொழுதும், **नहि स्यात्**-உண்டாகாது. **तथा**-அவ்விதமே, **निर्विकारस्य**-மாறுதலற்ற (ஏகரூபமான) **आत्मनः**-ஆத்மாவிற்கு, **विश्वजः**-பிரபஞ்சத்தில் உண்டான, **विकारः**-மாறுதல், **न**-இல்லை.

அறியாமையால் ஸ்தம்பத்தில் தோன்றிய திருடனுடைய விகாரங்கள் (குணதோஷங்கள் அல்லது மாறுதல்கள்) ஒரு பொழுதும் ஸ்தம்பத்தைச் சாராததுபோல்

ஆத்மாவில் தோற்றமான பிரபஞ்சத்தின் குணதோஷ விகாரங்கள் விகாரமற்ற ஆத்மாவினிடம் வராது. (78)

(அ) ஆத்மஞானம் துக்கத்தைப் போக்குகின்றது:—

ज्ञाते स्थाणौ कुतश्चोरश्चोराभावे भयं कुतः ।
ज्ञाते स्वस्मिन्कुतो विश्वं विश्वाभावे कुतोऽखिलम् ॥ ७९ ॥

ஞாதே ஸ்தாணௌ குதச்சோரச்சோராபாவே பயம் குத: ।
ஞாதே ஸ்வஸ்மின் குதோ விச்வம் விச்வாபாவே குதோகிலம் ॥

स्थाणौ-கட்டையை, ज्ञाते - (கட்டையென்று) அறிந்த பிறகு, चोरः-(அதில் தோன்றிய) திருடன், कुतः-ஏது? चोराभावे-திருடன் இல்லாதபொழுது, भयं-பயம், कुतः-எவ்விதம் (இவ்வாறு) स्वस्मिन्-ஆத்ம ஸ்வரூபமானது, ज्ञाते-அறியப் பட்டபொழுது, विश्वं-பிரபஞ்சம், कुतः-எவ்விதம் ? विश्वाभावे -பிரபஞ்சம் இல்லாதபொழுது, अखिलं-மற்றவை எல்லாம், कुतः-ஏது ?

ஸ்தம்பத்தை அறிந்தபொழுது திருடன் இல்லை. திருடன் இல்லாதபொழுது பயமுமில்லை. அதேபோன்று ஆத்மாவான தன்னை அறிந்தபொழுது தன்னில் தோற்றமான ப்ரபஞ்சம் இல்லை. பிரபஞ்சமில்லை எனில் மற்றவை ஒன்றுமில்லை. (79)

गुणवृत्तित्रयं भाति परस्परविलक्षणम् ।
सत्यात्मलक्षणे यस्मिन्स एवाहं निरंशकः ॥ ८० ॥

குண வ்ருத்தி த்ரயம் பாதி பரஸ்பர விலக்ஷணம்
ஸத்யாத்ம லக்ஷணே யஸ்மின் ஸ ஏவாஹம் நிரம்ஶக: ॥

सत्यात्मलक्षणे-ஸத்ய ஸ்வரூபமாகிய, यस्मिन्-எந்த ஆத்மாவினிடத்தில், परस्परविलक्षणं-ஒன்றுக்கொன்று மாறுதல் உள்ள, गुणवृत्तित्रयं-ஸத்வம், ரஜஸ் தமஸ் என்ற குணங்

களிஞல் உண்டான மூன்று விருத்திகளும் (குணபரிணுமங்கள்) **भाति**-விளங்குகின்றதோ, **निरंशकः**-அவயவமற்ற, **स एव**-அந்த ஆத்மாவே, **अहम्**-நான்.

ஸத்யஸ்வரூபமாகிய எந்த ஆத்மாவினிடத்தில் ஒன்றுக்கொன்று மாறுதல் உள்ள ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்ற மூன்று வ்ருத்திகளும் (புத்தியின் குணபரிணுமங்கள்) பிரகாசிக்கின்றனவோ அந்த நிரவயவமான ஆத்மாவே நான். (80)

**देहत्रयमिदं भाति यस्मिन्ब्रह्मणि सत्यवत् ।**
**तदेवाहं परं ब्रह्म देहत्रयविलक्षणः ॥ ८१ ॥**

தேஹ த்ரயமிதம் பாதி யஸ்மின் ப்ரஹ்மணி ஸத்யவத் ।
ததேவாஹம் பரம் ப்ரஹ்ம தேஹத்ரய விலக்ஷண: ॥

**यस्मिन्**-எந்த, **ब्रह्मणि**-பரமாத்மாவினிடம், **इदं**-இந்த, **देहत्रयं**-ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று சரீரமும், **सत्यवत्** - உண்மையானதுபோன்று, **भाति** - தோன்றுகின்றதோ, **देहत्रयविलक्षणः**-மூன்று சரீரங்களுக்கும் வேருன **अहम्**-நான், **तदेव परं ब्रह्म**-அந்த பரப்ரம்மமே.

எந்த பரமாத்மாவிடம் இந்த ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்கள் உண்மையானவைபோல் தோன்றுகின்றனவோ அந்த ப்ரம்மமே நான். நான் மூன்று சரீரங்களைக் காட்டிலும் வேருனவன். (81)

**जाग्रदादित्रयं यस्मिन्प्रत्यगात्मनि सत्यवत् ।**
**स एवाहं परं ब्रह्म जाग्रदादिविलक्षणः ॥ ८२ ॥**

ஜாக்ரதாதி த்ரயம் யஸ்மின் ப்ரத்யகாத்மனி ஸத்யவத் ।
ஸ ஏவாஹம் பரம் ப்ரஹ்ம ஜாக்ரதாதி விலக்ஷண: ॥

**यस्मिन्**-எந்த, **प्रत्यगात्मनि**-ஆத்மஸ்வரூபத்தில், **जाग्रदादित्रयं**-ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று

அவஸ்தைகளும், **सत्यवत्**-உண்மைபோன்று (தோன்றுகின்றதோ) **जाग्रदादिविलक्षणः**-ஜாக்ரத் முதலான அவஸ்தைகளுக்கு வேறான, **सः अहं**-அந்த நான், **परं ब्रह्म एव**-பரப்ரம்மமே.

ஜாக்ரத், ஸ்வப்னம் ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளும் எந்த ஆத்மாவிடம் உண்மையானவை போல் தோன்றுகின்றனவோ அந்த மூன்று அவஸ்தைகளை காட்டிலும் வேறான நான் அந்தப் பரமாத்மாவே. (82)

**विश्वादिकत्रयं यस्मिन्परमात्मनि सत्यवत् ।**
**स एव परमात्माहं विश्वादिकविलक्षणः ॥ ८३ ॥**

விச்வாதிக த்ரயம் யஸ்மின் பரமாத்மனி ஸத்யவத் ।
ஸ ஏவ பரமாத்மாஹம் விச்வாதிக விலக்ஷண: ॥

**यस्मिन्**-எந்த, **परमात्मनि**-பரமாத்மாவினிடம், **विश्वादिकत्रयं**-விச்வன், தைஜஸன், ப்ராக்ஞன் என்ற அவஸ்தாபிமானிகள் மூவரும், **सत्यवत्**-உண்மையானவர்கள் போன்று தோன்றுகிறார்களோ, **विश्वादिकविलक्षणः**-விச்வன் முதலானவர்களுக்கு வேறான, **अहं**-நான். **स एव परमात्मा**-அந்த பரமாத்மாவே.

எந்த பரமாத்மாவிடம் மூன்று அவஸ்தைகளின் அபிமானிகளான, விச்வன், தைஜஸன், ப்ராக்ஞன் என்ற மூவரும் உண்மையானவர்கள் போல் தோற்றுகிறார்களோ அந்த மூவர்களைக் காட்டிலும் வேறான அந்த பரமாத்மாவே நான். (83)

**विराडादित्रयं भाति यस्मिन्साक्षिणि सत्यवत् ।**
**स एव सच्चिदानन्दलक्षणोऽहं स्वयंप्रभः ॥ ८४ ॥**

விராடாதி த்ரயம் பாதி யஸ்மின் ஸாக்ஷிணி ஸத்யவத் ।
ஸ ஏவ ஸச்சிதானந்த லக்ஷணோஹம் ஸ்வயம்ப்ரப: ॥

**साक्षिणि**-ஸாக்ஷியான, **यस्मिन्**-எந்த ஆத்மாவிடம், **विराडादित्रयं**-விராட், ஹிரண்யகர்ப்பன், ஈச்வரன் என்ற மூவரும், **सत्यवत्**-உண்மைபோன்று, **भाति**-தோன்றுகின்றனரோ **सच्चिदानन्दलक्षणः**-ஸத், சித், ஆனந்தங்களை ஸ்வரூபமாகக் கொண்டவரும், **स्वयंप्रभः**-ஸ்வயம்பிரகாசருமான, **स एव**-அந்த பரமாத்மாவே, **अहम्**-நான்.

ஸாக்ஷியான எந்த பரமாத்மாவிடம் ஸமஷ்டியான ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீராபிமானிகளான விராட் புருஷன், ஹிரண்யகர்ப்பன், அந்தர்யாமி என்ற மூவர்களும் தோற்றமோ, ஸச்சிதானந்த ரூபனும், ஸ்வயம் பிரகாசனுமான அந்த பரமாத்மாவே நான். (84)

அத்வைதாநுபூதி முற்றும்.



॥ श्रीः ॥

# ॥ तत्त्वोपदेशः ॥

# தத்வோபதேசம்.

[சாந்தோக்ய உபநிஷத்தில் 'தத்த்வமஸி' என்ற மஹா வாக்யம் காணப்படுகிறது. இது ஆசார்யன் சிஷ்யனைப் பார்த்து உபதேசிப்பதாக அமைந்திருக்கிறது. இதில் தத், த்வம், அஸி என்று மூன்று பதங்கள் இருக்கின்றன. த்வம் என்ற பதத்திற்கு நீ என்று பொருள். இது ஜீவனைக்குறிக்கிறது 'தத்' என்ற பதத்திற்கு அது என்றுபொருள். இது முன் கூறப்பட்ட ஸத்ரூபமான ப்ரஹ்மத்தைக்குறிக்கிறது. ஆகவே நீ அதுவாக இருக்கிறாய் அதாவது 'ஜீவனே ப்ரஹ்மம்' என்பது இந்த வாக்யத்தின் பொருள். ஆனால் ஜீவன் ஒருக்காலும் ப்ரஹ்மமாக ஆகமுடியாது. ஜீவஸ்வரூபத்தில் பல தர்மங்கள் இருக்கின்றன. இதற்கு விருத்தமான பல தர்மங்கள் ஸத் வஸ்துவில் இருக்கின்றன. ஒன்றுக்கொன்று விருத்தமான பல தர்மங்களை உடைய இரண்டு வஸ்துக்கள் ஒன்றாக இருக்க முடியாது. உபநிஷத்தோ ஒன்றுதான் என்று உபதேசிக்கிறது. இது அப்ரமாணம் இல்லை. ஆகையினால் 'தத்வோபதேசம்' என்ற இந்த ப்ரகரணத்தில் மஹா வாக்யத்திலுள்ள 'த்வம்' பதத்தின் பொருளையும் 'தத்' பதத்தின் பொருளையும் நன்கு சோதித்துக்காட்டுகிறார். அதாவது ஜீவனிடத்திலும் ஈசுவரனிடத்திலும் தோன்றும் பரஸ்பர விருத்தமான தர்மங்கள் எல்லாம் உண்மையில் ஜீவஸ்வரூபத்திலோ, ஈசுவர ஸ்வரூபத்திலோ சேர்ந்தவையல்ல. ப்ரமத்தால் அவ்வாறு தோன்றுகிறது என்று கூறி அந்த தர்மங்களை எல்லாம் விலக்கி சுத்தமான ஜீவஸ்வரூபத்தையும் ஈசுவரஸ்வரூபத்தையும் காட்டி விரோதமில்லாமையால் இரண்டும் ஒன்றுதான் என்று தீர்மானிக்கிறார். தத், த்வம் என்ற இரு பதங்களின் லக்ஷ்யார்த்தமான ப்ரஹ்ம தத்வத்தை உபதேசிப்பதால் இதற்குத் 'தத்வோபதேசம்' என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது. குருவின் உபதேசத்தால் தான் இந்த தத்வம் அநுபவத்திற்கு வரும் என்று கூறி ஸ்ரீ குருவின் பெருமையை நன்கு விளக்குகிறார். அத்வைத தத்வத்தை ஸ்தாபிக்க

பிரபஞ்சம் பொய் என்பதையும் காட்டுகிறார். பரமாத்மாவே தான் அக்ஞானத்தால் ஜீவனாகத்தோன்றுகின்றான். பந்தமும் பொய்தான். ஆசார்யரின் உபதேசத்தால் தன் ஸ்வரூபத்தை நன்கு அறிந்ததும் எல்லாத் துன்பங்களும் விலகி பரமானந்தத்தையடைகிறான் என்பதைக்காட்ட உபநிஷத்தில் கூறப்பட்ட காந்தாரதிருஷ்டாந்தத்தை நன்கு விளக்குகிறார். கடைசியில் குருவின் பெருமையைக்காட்டி முடிக்கிறார்]

तत्त्वंपदार्थशुद्ध्यर्थं गुरुः शिष्यं वचोऽब्रवीत् ।
वाक्ये तत्त्वमसीत्यत्र त्वंपदार्थं विवेचय ॥ १ ॥

தத்த்வம் பதார்த்த ஶுத்த்யர்த்தம் குரு: ஶிஷ்யம் வசோऽப்ரவீத் ।
வாக்யே தத்த்வமஸீத்யத்ர த்வம் பதார்த்தம் விவேசய ॥

गुरुः-ஆசார்யர், तत्त्वंपदार्थशुद्ध्यर्थं-தத், த்வம் என்ற இரு பதங்களின் பொருளை சுத்தமாக (கலப்பில்லாமல்) செய்ய शिष्यं-சிஷ்யனைப்பார்த்து, वचः-பின்வரும் வார்த்தையை, अब्रवीत्-சொன்னார். तत्त्वमसीति-“ தத்த்வமஸி ” என்ற, अत्र वाक्ये-இந்த வாக்யத்தில், त्वंपदार्थं-‘ த்வம் ’ என்ற பதத்தின் பொருளை, विवेचय-பிரித்துத்தெரிந்துகொள்.

சாந்தோக்யோபநிஷத்தில் ‘ தத்த்வமஸி ’ என்ற மஹாவாக்யத்திலுள்ள ‘ தத், த்வம் ’ என்ற இரு பதங்களின் பொருளையும் கலப்பில்லாமல் பரிசுத்தமாக, அதாவது ஜீவனுடைய உண்மை ஸ்வரூபத்தையும் ஈசுவரனுடைய உண்மை ஸ்வரூபத்தையும் சிஷ்யன் அறிந்து கொள்வதற்காக குரு சிஷ்யனுக்கு உபதேசிக்கிறார். தத்த்வமஸி என்ற மஹாவாக்கியத்தில் முதலாவதாக ‘ த்வம் ’ பதத்தின் பொருளை நன்கு பாகுபாடு செய்து தெரிந்து கொள். அதாவது உண்மையில் ஜீவனுடைய ஸ்வரூபத்தில் சேராத பொருள்களையெல்லாம் விலக்கிவிடு. (1)

(அ) தேஹம் ஆத்மாவல்ல என்பதை இரண்டு சுலோகங்களால் கூறுகிறார் :—

न त्वं देहोऽसि दृश्यत्वाद्रूपजात्यादिमत्त्वतः ।
भौतिकत्वादशुद्धत्वादनित्यत्वात्तथैव च ॥ २ ॥

अदृश्यो रूपहीनस्त्वं जातिहीनोऽप्यभौतिकः ।
शुद्धनित्योऽसि दृग्रूपो घटो यद्वन्न दृग्भवेत् ॥ ३ ॥

ந த்வம் தேஹோ ऽஸி த்ருச்யத்வாத் ரூப ஜாத்யாதிமத்வத: |
பௌதிகத்வாதஶுத்தத்வாதநித்யத்வாத் ததைவ ச ||

அத்ருச்யோ ரூப ஹீனஸ்த்வம் ஜாதி ஹீநோ ऽப்யபௌதிக:|
ஶுத்த நித்யோ ऽஸி த்ருக்ரூபோ கடோ யத்வத் ந த்ருக்
பவேத் ||

**दृश्यत्वात्**—அறியப்படுவதாலும், **रूपजात्यादिमत्त्वतः**—ரூபம், ஜாதி முதலியவைகளுடன் கூடியிருப்பதாலும், **भौतिकत्वात्**—பூதங்களிலிருந்து உண்டாகியிருப்பதாலும், **अशुद्धत्वात्**—அசுத்தமாயிருப்பதாலும், **तथैव**-அவ்விதமே, **अनित्यत्वाच्च**—அழிந்து போவதாலும், **त्वं**—நீ, **न देहोऽसि**—தேஹமாயிருக்கவில்லை.

**त्वं**—நீ, **अदृश्यः**-அறியப்படாதவனாயும், **रूपहीनः**-ரூபமற்றவனாயும், **जातिहीनोपि** – ஜாதியில்லாதவனாயும், **अभौतिकः**—பூதங்களிலிருந்து உண்டாகாதவனாயும், **शुद्धनित्यः**—சுத்தனாயும் அழிவில்லாதவனாயும், **दृग्रूपः**—ஞானரூபியாயும், **असि**-இருக்கிறாய், **घटः**-குடம், **यद्वत्**-எவ்விதம், **दृक्**-ஞானமாக **न भवेत्**—ஆகாதோ (அவ்விதம் தேஹமும் ஆத்மாவாக ஆகாது.)

நீ என்றும், நான் என்றும், சொல்லுமிடங்களிலெல்லாம் ஸ்தூலமான சரீரத்தையே குறிப்பிடுகின்றனர். ஆகவே சரீரத்தையே ஆத்மா என்று எல்லோரும் எண்ணிக் கொண்டிருக்கின்றனர். இதைக்கொண்டே சார்வாக தர்சனம் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் முதலில் தேஹம் ஆத்மா அல்ல என்பதைக் காட்டுகிறார். தேஹத்தில் நாம் காணும்

தர்மங்கள் எல்லாம் ஆத்மாவில் இல்லை என்று ச்ருதி கூறுகிறது. தேஹ தர்மங்கள் ஆத்மாவில் இல்லாததாலும் இதற்கு எதிரிடையான தர்மங்கள் ஆத்மாவில் இருப்பதாலும் தேஹம் ஆத்மாவன்று. அதாவது, தேஹம் இந்திரியங்களாலும் மனதாலும் அறியப்படும் வஸ்து. அதாவது ஜடம். ஆத்மாவோ ஒன்றினுலும் அறியப்படாதது. சைதன்ய ஸ்வரூபமானது. ஜடமான குடம் ஞானரூபமாக ஆகுமா? அதுபோல ஜடமான தேஹமும் சேதனமான ஆத்மாவாக இருக்கமுடியாது. மேலும் தேஹத்தில் உருவமும், கருப்பு, சிவப்பு முதலான நிறங்களும் மனுஷ்யன் முதலான ஜாதியும் காணப்படுகின்றன. ஆத்மாவிற்கு உருவமோ, நிறமோ, ஜாதியோ ஒன்றும் கிடையாது. ஆத்மாவிற்குப் பிறப்பே கிடையாது. சரீரமோ ஐந்து பூதங்களிலிருந்து உண்டானது. எல்லாவித அசுத்திகளும் நிறைந்தது சரீரம். ஆத்மா ஒருவித அழுக்கும் இல்லாத பரிசுத்த வஸ்து. சரீரம் அழிந்துபோவதை நாம் பார்க்கிறோம். ஆத்மாவுக்கு அழிவே கிடையாது. ஆத்மா ஞான ஸ்வரூபம், தேஹம் ஜடம். இவ்வாறு எதிரிடையான தர்மங்கள் இருப்பதால் தேஹம் ஆத்மாவன்று. (2-3)

(அ) இந்திரியம் ஆத்மாவல்ல என்பதை ஐந்து சுலோகங்களால் கூறுகிறுர் :—

न भवानिन्द्रियाण्येषां करणत्वेन यत् श्रुतिः ।
प्रेरकस्त्वं पृथक् तेभ्यो न कर्ता करणं भवेत् ॥ ४ ॥

ந பவாநிந்த்ரியாண்யேஷாம் கரணத்வேந யத் ச்ருதி: |
ப்ரேரகஸ்த்வம் ப்ருதக் தேப்யோ ந கர்த்தா கரணம் பவேத் ||

**भवान्**-நீ, **न इन्द्रियाणि** - இந்திரியங்கள் அல்ல. **यत्**- ஏனெனில், **एषां**-இவைகள், **करणत्वेन**-கரணமாக, **श्रुतिः**- கேட்கப்படுகிறது. **प्रेरकः**-(அவைகளை) ஏவுகின்ற, **त्वं**-நீ, **तेभ्यः** - அவைகளைக்காட்டிலும், **पृथक्**-வேறுனவன். **कर्ता**- செய்கிறவன், **करणं**-கருவியாக, **न भवेत्**-ஆகமாட்டான்.

இந்த்ரியங்கள் கரணமானதால் ஆத்மாவல்ல. நான் கண்ணால் பார்க்கிறேன், நான் காதால் கேட்கிறேன் என்று கூறுகிறான். இங்கு தன்னைப்பார்க்கிறவனாகவும், கேட்கிறவனாகவும், கண், காது முதலிய இந்த்ரியங்களைக் கருவிகளாகவும் கூறுகிறான். ஆகவே பார்ப்பது, கேட்பது முதலான செய்கைகளில் ஆத்மா கர்த்தாவாகவும் இந்த்ரியம் கரணமாகவும் ஆகிறது. கர்த்தா தன் இஷ்டப்படி கருவிகளை ஏவுகிறான். கர்த்தா ஒருக்காலும் கரணமாகமுடியாது. ஆகையால் இந்த்ரியங்கள் ஆத்மாவல்ல. (4)

**नानैतान्येकरूपस्त्वं भिन्नस्तेभ्यः कुतः शृणु ।**
**न चैकेन्द्रियरूपस्त्वं सर्वत्राहंप्रतीतितः ॥ ५ ॥**

நாநைதாந்யேகரூபஸ்த்வம் பிந்நஸ்தேப்ய: குத: ச்ருணு ।
ந சைகேந்த்ரியரூபஸ்த்வம் ஸர்வத்ராஹம்ப்ரதீதித: ॥

**एतानि**-இந்த இந்திரியங்கள், **नाना**-பலவாக இருக்கின்றன. **एकरूपः**-ஒரே ஸ்வரூபமுள்ள, **त्वं**-நீ, **तेभ्यः**-அவைகளைக்காட்டிலும், **भिन्नः**-வேறானவன், **कुतः**-ஏனெனில் **शृणु**-கேள் (சொல்கிறேன்) **सर्वत्र**-எல்லா இந்திரியங்களிலும் **अहंप्रतीतितः**-நான் என்ற அறிவு ஏற்படுவதால், **त्वं**-நீ, **एकेन्द्रियरूपः**-ஏதாவது ஒரு இந்திரியமாக, **नच**-இருக்க முடியாது.

மேலும் கண், காது, மூக்கு, நாக்கு, த்வக் என்று இந்த்ரியங்கள் பலவாக இருக்கின்றன. ஆத்மாவோ ஒருவன். ஒன்று எப்படிப்பலவாக இருக்கமுடியும்? ஆகையால் பலவாக இருக்கும் இந்த்ரியங்களைக்காட்டிலும் ஒன்றாக உள்ள ஆத்மா வேறுதான். எவ்விதமெனில், இந்த்ரியக் கூட்டங்களில் ஏதோ ஒரு இந்த்ரியம் மட்டும்தான் ஆத்மாவா? அல்லது எல்லா இந்த்ரியங்களும் சேர்ந்து ஆத்மாவா? அல்லது ஒவ்வொரு இந்த்ரியமும் ஆத்மாவா? முதலில் சொன்னது சரியல்ல. நான் என்பது ஆத்மாவைக் குறிக்கும் சொல். ஒரு இந்திரியம் மட்டும்தான் ஆத்மாவென்றால் அந்த இந்திரியத்தில்தான் நான் என்ற எண்ணம் வரலாம். மற்ற இந்திரியங்களில் நான் என்ற நினைப்பு வரக்

கூடாது. உதாஹரணமாக கண்தான் ஆத்மா என்றால் 'நான் கேட்கிறேன்' என்று காதில் நான் என்ற எண்ணம் வரக்கூடாது. எல்லா இந்திரியங்களிலும் நான் என்று கூறுவதால் ஒரு இந்திரியம் ஆத்மா என்று கூறுவது சரியல்ல. பல இந்திரியங்களில் ஏதோ ஒன்றை மட்டும் ஆத்மா எனக்கூறுவதற்கு தனிப்பட்ட காரணமும் இல்லை.

(அ) இந்திரியக்கூட்டம் ஆத்மாவல்ல என்பதைக் கூறுகிறார்:—

न तेषां समुदायोऽसि तेषामन्यतमस्य च ।
विनाशेऽप्यात्मधीस्तावदस्ति स्यान्नैवमन्यथा ॥ ६ ॥

ந தேஷாம் ஸமுதாயோஸி தேஷாமந்யதமஸ்ய ச ।
விநாஶேऽப்யாத்மதீஸ் தாவதஸ்தி ஸ்யாத் நைவமந்யதா ॥

तेषां-அந்த இந்திரியங்களுடைய, समुदायः-கூட்டமாக, नासि-நீ இல்லை. तेषां - அவைகளில், अन्यतमस्य-ஏதாவது ஒன்றுக்கு, विनाशेपि-அழிவு ஏற்பட்டாலும், आत्मधीस्तावत्-நான் என்ற ஞானம், अस्ति-(ப்ரஸித்தமாக) இருக்கிறது. अन्यथा-இவ்வாறு இல்லா விட்டால் (ஸமுதாயம் ஆத்மா வானால்), एवं-(ஒரு இந்திரியம்இல்லாதவனுக்கு) இவ்வாறு நான் என்ற ஞானம், न स्यात्-உண்டாகாது.

எல்லா இந்திரியங்களும் சேர்ந்த கூட்டத்தையும் ஆத்மாவென்று கூறமுடியாது. குருடனுக்குக் கண் இல்லை. ஒரு இந்திரியம் இல்லாததால் எல்லா இந்திரியங்களும் சேர்ந்த கூட்டம் அவனிடம் இல்லை. ஆகவே அவனுக்கு ஆத்மா இல்லை என்பதாக ஆகிவிடும். ஆனால் அவனும் தனக்கு ஆத்மா இருப்பதாக எண்ணித்தான் நான் என்று சொல்கிறான். இதுபோலவேதான் செவிடன் முதலியவர் களும். ஆதலால் இந்த்ரிய ஸமுதாயமும் ஆத்மாவல்ல. (6)

(அ) ஒவ்வொரு இந்த்ரியமும் தனித்தனியாக ஆத்மா என்ற வாதத்தைக் கண்டிக்கிறார்:—

प्रत्येकमपि तान्यात्मा नैव तत्र नयं शृणु ।
नानास्वामिकदेहोयं नश्येद्भिन्नमताश्रयः ॥ ७ ॥

नानात्माभिमतं नैव विरुद्धविषयत्वतः ।
स्वाम्यैक्ये तु व्यवस्था स्यादेकपार्थिवदेशवत् ॥ ८ ॥

ப்ரத்யேகமபி தாங்யாத்மா நைவ தத்ர நயம் ச்ருணு ।
நாநா ஸ்வாமிக தேஹோzயம் நச்யேத் பிந்ந மதாச்ரய: ॥

நாநாத்மாபிமதம் நைவ விருத்த விஷயத்வத: ।
ஸ்வாம்யைக்யே து வ்யவஸ்தா ஸ்யாதேகபார்த்திவ
தேமூவத்: ॥

तानि-அந்த இந்திரியங்கள், प्रत्येकमपि-ஒவ்வொன்றும், नैव आत्मा-ஆத்மாவல்ல. तत्र-அந்த விஷயத்தில், नयं-யுக்தியை, शृणु-கேள், भिन्नमताश्रयः-வெவ்வேறு அபிப்ராயங்களுக்கு இடமான, अयं-இந்த, नानास्वामिकदेहः-பலபேர்களை யஜமானர்களாக உடைய தேஹமானது, नश्येत्,-அழிந்து விடும்.

विरुद्धविषयत्वतः-ஒன்றுக்கொன்று எதிரிடையான விஷயங்களுள்ளதால், नानात्मा - பலர் ஆத்மா என்பது, नैवाभिमतं-ஒருவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதல்ல. स्वाम्यैक्ये तु-ஒரே யஜமானன் இருந்தால் தான், एकपार्थिवदेशवत्-ஒரே அரசனுள்ள தேசம் போல, व्यवस्था-கட்டுப்பாடு, स्यात्-இருக்கும்.

கண், காது முதலான இந்திரியங்களில் ஒவ்வொன்றும் ஆத்மா என்ற வாதமும் சரியல்ல. ஏனெனில் இந்த சரீரத்தில் ஆத்மாதான் யஜமானன். அவன் இஷ்டப்படிதான் சரீரத்தில் காரியம் நடைபெறவேண்டும். ஒவ்வொரு இந்திரியமும் ஆத்மாவானால் ஒவ்வொரு இந்திரியமும் இந்த சரீரத்திற்குப் பூர்ண அதிகாரமுள்ள யஜமானன் ஆகும். பல யஜமானர்களுக்குக் கொள்கை ஒன்ருக இருக்குமானுல் ஒத்துப்போகமுடியும். இதில்லாமல் வெவ்வேறு எதிரிடை

யான கொள்கைகள் கொண்ட பலர் ஒரு தேசத்திற்கு அரசர்களாக இருப்பார்களேயானால் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொள்வதன் மூலம் தேசம் அழிந்துவிடும். இதுபோல கண்ணுக்கு ரூபம் விஷயம், காதுக்கு சப்தம் விஷயம். இவ்விதமே ஒவ்வொரு இந்திரியத்திற்கும் வெவ்வேறான விஷயங்கள். எல்லோருக்கும் ஸமமான அதிகாரம் இருக்கிறது. இந்த நிலைமையில் கண் என்ற யஜமானன் ரூபத்தைப் பார்க்கவேண்டும் என்று சொல்லும். அதே சமயத்தில் காது என்ற யஜமானன் சப்தத்தைக்கேட்க வேண்டும் என்று சொல்லும். ஒரே சமயத்தில் இரண்டும் நடைபெற முடியாது. ஆகவே ஒன்றுக்கொன்று சண்டையிட்டுக்கொண்டு தேஹத்தையே அழித்துவிடும். ஆதலால் சரீரத்தில் பலர் யஜமானர்களாக இருக்கக்கூடாது. ஒரு தேசத்தில் ஒருவனே எல்லா அதிகாரங்களும் கொண்ட மஹாராஜனாக இருந்தால் அவனுக்குக் கட்டுப்பட்டு எல்லோரும் நடப்பதால் ராஜ்ய பரிபாலனம் நன்கு நடைபெறும். இதுபோல் சரீரத்திலும் செவ்வனே காரியங்கள் நடைபெறுவதற்காக ஒரே ஆத்மாவை (யஜமானனை)த் தான் ஒப்புக்கொள்ளவேண்டும். (7–8)

(அ) பிராணனும் மனமும் ஆத்மாவல்ல என்பதை இரு சுலோகங்களால் கூறுகிறார் :—

न मनस्त्वं न वा प्राणो जडत्वादेव चैतयोः ।
गतमन्यत्र मे चित्तमित्यन्यत्वानुभूतितः ॥ ९ ॥

क्षुत्तृड्भ्यां पीडितः प्राणो ममायं चेति भेदतः ।
तयोर्द्रष्टा पृथक् ताभ्यां घटद्रष्टा घटाद्यथा ॥ १० ॥

ந மநஸ்த்வம் ந வா ப்ராணோ ஜடத்வாதேவ சைதயோ : ।
கதமந்யத்ர மே சித்தமித்யந்யத்வானுபூதித: ॥

க்ஷுத் த்ருட்ப்யாம் பீடித: ப்ராணோ மமாயம் சேதி பேதத: ।
தயோர் த்ரஷ்டா ப்ருதக் தாப்யாம் கட த்ரஷ்டா கடாத் யதா ॥

**एतयोः**-இவ்விரண்டும், **जडत्वादेव**-ஜடமாயிருப்பதாலேயே **त्वं**-நீ, **न मनः**-மனம் அல்ல. **न वा प्राणश्च**-பிராணனுமல்ல. **मे**-என்னுடைய, **चित्तं**-மனது, **अन्यत्र**-வேறிடத்தில், **गतम्**-சென்றிருந்தது, **इति**-என்று, **अन्यत्वानुभूतितः**-தன்னைக் காட்டிலும் வேறு பொருளாக அனுபவம் ஏற்படுவதால், (மனம் ஆத்மாவல்ல). **मम** – என்னுடைய, **अयं** – இந்த பிராணன், **इति**-என்று, **भेदतश्च**-வேற்றுமை தோன்றுவதாலும், **क्षुत्तृड्भ्यां**-பசிதாகங்களால், **पीडितः**-துன்பப்பட்ட, **प्राणः**-பிராணன் (ஆத்மாவல்ல). **यथा**-எவ்விதம், **घटद्रष्टा**-குடத்தைப்பார்க்கிறவன், **घटात्**-குடத்தைக்காட்டிலும், **पृथक्**-வேறானவனோ (அவ்வாறு), **तयोः**-அந்த மனத்தையும் பிராணனையும், **द्रष्टा**-அறிகிறவன், **ताभ्यां**-அவைகளைக்காட்டிலும், **पृथक्**-வேறானவன்.

மனமும், பிராணனும் ஜட வஸ்துக்கள். ஆத்மாவோ சேதனம். ஆகையால் ஜடமான மனமும் ப்ராணனும் ஆத்மாவாக முடியாது. மேலும் ஒருவன் முக்யமான ஒரு விஷயத்தைப்பற்றி தீவ்ரமாக சிந்தித்துக் கொண்டிருக்கிறான். அச்சமயம் நாம் அவன் எதிரில் போய் நின்றாலும், கண் பார்த்தாலும்கூட நாம் வந்திருப்பதை அவன் அறிந்து கொள்வதில்லை. சிறிது நேரம் சென்ற பிறகு "என் மனம் வேறு எங்கேயோ சென்றிருந்தது. அதனால் நீ வந்ததை கவனிக்கவில்லை" என்று கூறுகிறான். இங்கு தன்னை விட்டு மனம் வெளியில் சென்றதாகக் கூறுவதால் மனம் தான் இல்லை, ஆத்மாவல்ல, மனத்தைக்காட்டிலும் ஆத்மா வேறு என்று தெரிகிறது. இதுபோல 'என்னுடைய பிராணன்' என்று கூறுவதால் பிராணனைக் காட்டிலும் ஆத்மா வேறாகத்தானிருக்கவேண்டும். 'என்னுடைய வீடு' என்று சொல்லும்பொழுது உடமையான வீட்டைக் காட்டிலும் உடையவன் வேறாகத்தானே இருக்கிறான். இந்த யுக்தியை மனதிற்கும் கொள்ளலாம். மேலும் ஆஹாரம் இல்லாதபொழுது பசியாலும், தண்ணீர் இல்லாதபொழுது தாகத்தாலும் பிராணன் துன்புறுகிறது. இவ்விரண்டும் பிராணனின் தர்மங்கள். ஆத்மாவோ துன்பமற்ற ஆனந்த

ரூபமான வஸ்து. ஆகையினாலும் பிராணன் ஆத்மாவல்ல. மேலும் 'நான் குடத்தைப் பார்க்கிறேன்' என்று சொல்கிறான். இங்கு பார்க்கப்படும் குடத்தைக் காட்டிலும் பார்க்கிறவன் வேறாகத்தானிருக்கிறான். இதுபோல பிராணனும், மனமும் அறியப்படும் பொருள்களாகையால் இவைகளை அறிகின்ற ஆத்மா இவைகளைக் காட்டிலும் வேறுதான். ஆகவே பிராணனும் ஆத்மாவல்ல மனமும் ஆத்மாவல்ல.

(அ) புத்தி ஆத்மாவல்ல என்பதை இரு சுலோகங்களால் கூறுகிறார் :—

सुप्तौ लीनाऽस्ति या बोधे सर्वं व्याप्नोति देहकम् ।
चिच्छायया च संबद्धा न सा बुद्धिर्भवान् द्विज ॥ ११ ॥

नानारूपवती बोधे सुप्तौ लीनाऽतिचञ्चला ।
यतो दृगेकरूपस्त्वं पृथक् तस्य प्रकाशकः ॥ १२ ॥

ஸுப்தௌ லீநாऽஸ்தி யா போதே ஸர்வம் வ்யாப்நோதி தேஹகம் ।
சிச்சாயயா ச ஸம்பத்தா ந ஸா புத்திர் பவான் த்விஜ ॥

நாநா ரூபவதீ போதே ஸுப்தௌ லீநாऽதிசஞ்சலா ।
யதோ த்ருகேகரூபஸ்த்வம் ப்ருதக் தஸ்ய ப்ரகாஶக: ॥

**द्विज**-ஹே த்விஜரே! **या**-எது, **सुप्तौ**-தூக்கத்தில், **लीना अस्ति**-அடங்கியிருக்கிறதோ, **बोधे**-விழித்திருக்கும்பொழுது, **चिच्छायया** - சைதன்யபிரதிபிம்பத்துடன், **संबद्धा** - சேர்ந்து கொண்டு, **देहकं सर्वं**-சரீரம் முழுவதிலும், **व्याप्नोति**-பரவியிருக்கிறதோ, **सा बुद्धिश्च**-அந்த புத்தியும், **न भवान्**-நீ இல்லை.

(புத்தியானது) **बोधे**-விழித்துக்கொண்டிருக்கும் பொழுது, **नानारूपवती**-பலவித உருவ (ஆகார)த்துடன் கூடியதாகவும், **अतिचञ्चला**-மிகவும் சஞ்சலமானதாகவும், **सुप्तौ**-தூக்கத்தில், **लीना**-மறைந்ததாகவும் இருக்கிறது **यतः**-எந்தக்காரணத்தினால், **त्वं**-நீ, **दृगेकरूपः**-ஞானம் ஒன்றையே

ஸ்வரூபமாகக்கொண்டவன் (ஆனதால்), तस्य-அந்த புத்தியை, प्रकाशकः-பிரகாசப்படுத்துகிற (நீ), पृथक्-(அந்த புத்தியைக் காட்டிலும்) வேருனவன்.

நாம் விழித்துக்கொண்டிருக்கும் பொழுது பல விஷயங்களைத் தெரிந்துகொள்கிருேம். இதற்கு புத்தி தான் காரணம். வெளியில் உள்ள விஷயங்களை கண், காது முதலான இந்திரியங்கள் மூலம் புத்தியால் அறிந்து கொள்கிருேம். உள்ளே ஏற்படும் ஸுகம், துக்கம் முதலியவைகளை புத்தியால் மட்டும் அறிந்துகொள்கிருேம். புத்தியானது சரீரம் முழுவதும் பரவியிருக்கிறது. சரீரத்தில் எந்த இடத்தில் வலி ஏற்பட்டாலும் புத்திக்குத் தெரிந்துவிடுகிறது. கண்ணுல் கோவிலில் உள்ள தேவதா மூர்த்தியைப் பார்க்கும்பொழுது புத்தியும் அந்த உருவமாக ஆகிவிடுகிறது. இதற்கு புத்தி விருத்தி என்று பெயர். இதில் சைதன்யம் பிரதிபிம்பிக்கிறது. உடனே நமக்கு அந்த விஷயத்தின் அறிவு ஏற்படுகிறது. புத்தி ஜடமாயிருந்தாலும் ப்ரகாசமான சைதன்ய பிரதிபிம்பத்துடன் கூடியிருப்பதால் அறியும் சக்தி அதற்கு ஏற்படுகிறது. தூக்கத்திலோ நமக்கு ஒன்றும் தெரிவதில்லை. அப்பொழுது புத்தி மறைந்துவிடுகிறது. இவ்வாறு தான் ஜடமாயும் வேருெரு பிரகாச வஸ்துவின் உதவியைக்கொண்டு பிரகாசிக்கிறதாயும், பலவித மாறுபாடுகளை அடைகிறதாயும், ஒரு சமயத்தில் மறைந்தே போவதாயும் உள்ள புத்தி எவ்வாறு ஆத்மாவாக இருக்கமுடியும்? மேலும் மற்றவைகளைப் பிரகாசப்படுத்தும் புத்தியை பிரகாசப்படுத்துபவன் ஆத்மா. அவன் ஸ்வரூபமே ஞானம்தான். ஆதலால் புத்தி பிரகாசகனை ஆத்மா புத்தியைக்காட்டிலும் வேறு. (11-12)

(அ) ஆத்மா ஞானஸ்வரூபி என்பதை விவரிக்கிருர்:-

सुप्तौ देहाद्यभावेऽपि साक्षी तेषां भवान् यतः ।
स्वानुभूतिस्वरूपत्वात् नान्यस्तस्यास्ति भासकः ॥ १३ ॥

ஸுப்தௌ தேஹாத்யபாவேபி ஸாக்ஷீ தேஷாம் பவான் யத: ।
ஸ்வானுபூதிஸ்வரூபத்வாத் நாந்யஸ்தஸ்யாஸ்தி பாஸக: ॥

**सुप्तौ** - தூக்கத்தில், **देहाद्यभावेऽपि** - தேஹம் முதலிய வைகள் இல்லாமல் போனாலும், **यतः** - எந்தக்காரணத்தால் **तेषां**-அவைகளை, **साक्षी**-அறிகிறவனாக, **भवान्**-நீ (இருக்கிறாயோ, அதனால்) **स्वानुभूतिस्वरूपत्वात्** -ஸ்வானுபவ ரூபமாக இருப்பதால், **तस्य**-அந்த ஆத்மாவை, **भासकः** விளங்கச் செய்கிற, **अन्यः**-வேறுவஸ்து, **नास्ति**-இல்லை

எப்பொழுதும் இருக்கும் வஸ்துதான் ஆத்மா தூக்கத்தில் தேஹமோ, இந்திரியமோ ஒன்றும் தெரியவில்லை. ஒரு ஸமயம் விளங்கி, மற்றோர் சமயம் மறைந்துபோகும் தேஹம் முதலியவை ஆத்மாவல்ல. அந்தத் தூக்கத்திலும் ஓர் அனுபவம் நமக்கு ஏற்படுகிறது. அதுதான் ஆத்மா. அது ஞானஸ்வரூபமானதால் ஸூரியன்போல் தானேதான் பிரகாசிக்கிறது. அது வேறு ஒன்றாலும் பிரகாசிக்கப்படுவதில்லை. அதை பிரகாசப்படுத்தும் பொருள் வேறு ஒன்றும் உலகில் இல்லை. விழிப்பில் தேஹம் முதலியவற்றை அது தான் விளங்கச் செய்கிறது. ஆகையால் அது தேஹம் முதலியவற்றைக்காட்டிலும் வேறானது. (13)

**प्रमाणं बोधयन्तं तं बोधं मानेन ये जनाः ।**
**बुभुत्सन्ते त एधोभिर्दग्धुं वाञ्छन्ति पावकम् ॥ १४ ॥**

ப்ரமாணம் போதயந்தம் தம் போதம் மானேந யே ஜநா: ।
புபுத்ஸந்தே த ஏதோபிர் தக்தும் வாஞ்ச்சந்தி பாவகம் ॥

**प्रमाणं**-அறிவிற்கு ஸாதனமான இந்திரியம் முதலியவற்றை, **बोधयन्तं**-அறிவுறுத்துகின்ற, **तं बोधं**-அந்த அறிவை **मानेन**-பிரமாணத்தால், **ये जनाः**-எந்த மனிதர்கள், **बुभुत्सन्ते**-அறிய விரும்புகிறார்களோ, **ते**-அவர்கள், **एधोभिः**-விறகுகளால், **पावकं** - நெருப்பை, **दग्धुं** - எரிப்பதற்கு, **वाञ्छन्ति**-விரும்புகிறார்கள்.

உலகிலுள்ள விஷயங்களை இந்திரியம், மனம் முதலான பிரமாணங்களால் அறிந்துகொள்கிறோம், இந்த பிரமாணங்களை அறியப்படுத்துகிறது ஞானரூபமான ஆத்மா. இவ்வித

மிருக்க இந்த பிரமாணங்களைக்கொண்டு ஆத்மாவை எவ்வாறு அறிந்துகொள்ள முடியும்? அக்னியால் விறகை எரிக்கலாம். விறகால் நெருப்பை எரிக்கமுடியுமா? இந்திரியம், மனம் முதலியவற்ருல் ஆத்மாவை அறிவது என்பது விறகால் நெருப்பை எரிப்பது போலத்தான். ஆகையால் இந்திரியம் முதலியவற்றைக்காட்டிலும் ஆத்மா வேறு வஸ்து. (14)

**विश्वमात्मानुभवति तेनासौ नानुभूयते ।**
**विश्वं प्रकाशयत्यात्मा तेनासौ न प्रकाश्यते ॥ १५ ॥**

விச்வமாத்மானுபவதி தேநாஸௌ நாநுபூயதே ।
விச்வம் ப்ரகாசயத்யாத்மா தேநாஸௌ ந ப்ரகாச்யதே॥

**आत्मा**– ஆத்மாவானது, **विश्वं**– உலகத்தை, **अनुभवति**– அனுபவிக்கிறது. **तेन**– அந்த பிரபஞ்சத்தால், **असौ**– அந்த ஆத்மா, **नानुभूयते**–அனுபவிக்கப்படுகிறதில்லை. **आत्मा**–ஆத்மாவானது, **विश्वं**– பிரபஞ்சத்தை, **प्रकाशयति**–விளங்கவைக்கிறது. **तेन**–அந்த பிரபஞ்சத்தால், **असौ**–அந்த ஆத்மா, **न प्रकाश्यते**–பிரகாசிக்கப்படுவதில்லை.

உலகம் முழுவதையும் விளங்கச்செய்கிறது ஆத்மா தான். எல்லாவற்றையும் அனுபவிக்கிறதும் ஆத்மாதான். இந்த ஆத்மாவை உலகிலுள்ள பொருள்களால் அனுபவிக்கவோ பிரகாசப்படுத்தவோ முடியாது. ஆகவே உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும்விட ஆத்மா வேறு. (15)

(அ) இவ்வாறு பல சுலோகங்களால் ஆத்மாவை தேஹம் முதலியவற்றைக் காட்டிலும் பிரித்து வேருகக் காட்டி நீயே ப்ரஹ்மம் என்று உபதேசிக்கிருர் :—

**ईदृशं तादृशं नैतन्न परोक्षं सदेव यत् ।**
**तद्ब्रह्म त्वं न देहादिदृश्यरूपोऽसि सर्वदृक् ॥ १६ ॥**

ஈத்ருசம் தாத்ருசம் நைதந்ந பரோக்ஷம் ஸதேவ யத் ।
தத் ப்ரஹ்ம த்வம் ந தேஹாதி த்ருச்யரூபோऽஸி ஸர்வத்ருக்॥

**यत्**-எது, **ईदृशं**-இப்பேற்பட்டதாகவும், **तादृशं** அப்பேற்பட்டதாகவும், **एतत्**-இதுவாகவும், **न**-இல்லையோ, **न परोक्षं**-பரோக்ஷமாகவும் இல்லையோ, **सदेव**-முக்காலத்திலும் அழியாததாகவே இருக்கிறதோ, **तत्**-அந்த, **ब्रह्म**-ப்ரஹ்மம்தான், **त्वं**-நீ. **सर्वदृक्**-எல்லாவற்றையும் அறியும் நீ, **देहादिदृश्यरूपः**-சரீரம் முதலிய அறியப்படும் பொருளாக, **नासि**- இருக்கவில்லை.

ப்ரஹ்மம் ஸத்வஸ்து. அதாவது முக்காலத்திலும் அழியாதது. அதில் தர்மங்கள் ஒன்றும் இல்லாததால் அதை இவ்விதமானது என்றோ அவ்விதமானதென்றோ சப்தங்களால் கூறமுடியாது. ஜாதி, குணம், க்ரியை ஏதாவது தர்மம் இருந்தால்தான் இப்பேற்பட்டது என்றோ அப்பேற்பட்டது என்றோ கூறமுடியும். எல்லாவற்றையும் அறியும் நீ அந்த ப்ரஹ்மஸ்வரூபம்தான். நீயே பரப்ரஹ்மம். நீ எல்லாவற்றையும் அறிகின்றபடியால் உன்னால் அறியப்படும் தேஹாதிகள் நீ அல்ல. அறிகிறவன் அறியப்படும் பொருளாக ஆகமுடியாது. நீ அறிபவன், தேஹாதிகள் அறியப்படும் வஸ்து. ப்ரஹ்மம் ஆத்மஸ்வரூபமாக ப்ரகாசிப்பதால் அதை இது என்றும் கூறமுடியாது. அது நேரில் காணமுடியாததும் அல்ல. தன்னைக்காட்டிலும் வேறான பொருளைத்தான் இது என்று கூறலாம். அதுதான் பரோக்ஷமாகவும் இருக்கும். ப்ரஹ்மம் பரோக்ஷம் அல்ல. (16)

(அ) ப்ரஹ்மம் ஆத்மா என்பதற்கு யுக்தியைக் காட்டுகிறார் :—

इदंत्वेनैव यद्भाति सर्वं तच्च निषिध्यते ।
अवाच्यतत्वमनिदं न वेद्यं स्वप्रकाशतः ॥ १७ ॥

இதம்த்வேனைவ யத் பாதி ஸர்வம் தச்ச நிஷித்யதே।
அவாச்ய தத்வமநிதம் ந வேத்யம் ஸ்வப்ரகாசதः॥

**यत्**-எது, **इदंत्वेनैव**-இது என்றே, **भाति**-தோன்றுகிறதோ, **तच्च सर्वं**-அது எல்லாம், **निषिध्यते**-(ப்ரஹ்மம் அல்ல

என்று) மறுக்கப்படுகிறது. अनिदं-இதுவல்லாத ஆத்மா अवाच्यतत्त्वं-சப்தத்தால் சொல்லமுடியாத உண்மைப்பொருள் स्वप्रकाशतः-(அது)தானுகவே ப்ரகாசிப்பதால் न वेद्यं-அறியப் படும் பொருள் அல்ல.

உபநிஷத்துக்களில் ( अशब्दं अस्पर्शं, नेति नेति ) அசப்தம் அஸ்பர்சம், நேதி, நேதி முதலான வாக்யங்கள் காணப்படு கின்றன. இது, இது என்று கூறப்படும் பொருள்கள் எல்லாம் ப்ரஹ்மம் அல்ல என்பது இந்த வாக்யங்களின் கருத்து. தன்னைத் தவிற வேருன எல்லாப் பொருள்களையும் இது என்றே கூறுகிறோம். அவைகள் ப்ரஹ்மம் அல்ல என்று கூறுவதால்தான் (ஆத்மா)தான் ப்ரஹ்மம் என்று கிடைக்கிறது. மேலும் அது ஸ்வப்ரகாசமானதால் அறியப் படும் பொருள் அல்ல. அதனுலும் அது ஆத்மாதான். ஆகவே சப்தத்தால் சொல்லமுடியாத உண்மைப் பொருளான ப்ரஹ்மம் ஆத்மாதான். (17)

(அ) இரண்டிலும் ஒரேமாதிரி லக்ஷணமிருப்பதாலும் தத்வம் ஒன்றுதானெனக் கூறுகிறர் :—

सत्यं ज्ञानमनन्तं च ब्रह्मलक्षणमुच्यते ।
सत्यत्वात् ज्ञानरूपत्वात् अनन्तत्वात्त्वमेव हि ॥ १८ ॥

ஸத்யம் ஞானமநந்தம் ச ப்ரஹ்ம லக்ஷணமுச்யதே ।
ஸத்யத்வாத் ஞாநரூபத்வாத் அநந்தத்வாத் த்வமேவ ஹி ॥

सत्यं-ஸத்யம், ज्ञानं-ஞானம், अनन्तं च-எல்லையில்லாதது (இம்மூன்றும்), ब्रह्मलक्षणं-ப்ரஹ்மத்தின் லக்ஷணமாக, उच्यते-சொல்லப்படுகிறது. सत्यत्वात्-ஸத்யமாயிருப்பதாலும் ज्ञानरूपत्वात्-ஞான ரூபமாயிருப்பதாலும், अनन्तत्वात्-எல்லை யற்று இருப்பதாலும், त्वमेव-நீ தான் (அந்த ப்ரஹ்மம்).

தைத்திரீய உபநிஷத்தில் 'सत्यं ज्ञानमनन्तं ब्रह्म' ('ஸத்யம் ஞானமநந்தம் ப்ரஹ்ம'—ஆனந்தவல்லி) என்ற வாக்யம் ப்ரஹ்மத்தின் லக்ஷணத்தைக் கூறுகிறது. இதில் 'ஸத்யம், ஞானம், அநந்தம்' இம் மூன்றும்

ப்ரஹ்ம லக்ஷணங்களாகக் கூறப்பட்டிருக்கின்றன. முக்காலத்திலும் நாசம் அடையாத வஸ்து ப்ரஹ்மம். சைதன்ய ஸ்வரூபமாயிருப்பது ப்ரஹ்மம். அந்தம் அதாவது பரிச்சேதம் (வரையறை) இல்லாதது ப்ரஹ்மம். உலகில் எல்லாப் பொருள்களும் ஏதாவது ஒரு ஸமயம் அழிந்து போகும் தன்மையுள்ளது. இது காலத்தால் பரிச்சேதம். அதாவது ஒரு காலத்தில் இருந்து மற்றோர் ஸமயம் இல்லாமல் போய்விடுகிறது. ஒரு இடத்தில் இருக்கும் பொருள் மற்றோர் இடத்தில் இல்லை. இது தேசபரிச்சேதம். ஒரு பொருள் வேறொரு பொருளாக இருப்பதில்லை. அதாவது குடம் வஸ்திரமாக இருப்பதில்லை. இது வஸ்து பரிச்சேதம். உலகில் எல்லாப் பொருள்களும் ஒரு காலத்தில் மட்டும் இருப்பதாலும், ஒரு இடத்தில் மட்டும் இருப்பதாலும் ஒரு பொருளாகமட்டும் இருப்பதாலும் மூன்று விதமான பரிச்சேதங்களும் எல்லாவற்றிற்கும் உண்டு. ப்ரஹ்மமோ எல்லாக் காலங்களிலும், எல்லா தேசங்களிலும், எல்லா வஸ்துவாகவும் இருப்பதால் மூன்று பரிச்சேதங்களும் அதற்குக் கிடையாது. ஆகையால் அது அனந்தம். இம் மூன்று லக்ஷணங்களும் உன்னிடமும் இருக்கின்றன. சரீரம் முதலியவைகளைக் காட்டிலும் வேறான உனக்கு நாசமே கிடையாது. ஆதலால் நீ ஸத்யவஸ்து. நீ ஜடம் அல்ல சைதன்ய ஸ்வரூபி. உனக்கு அந்தம் (தேச-கால-வஸ்து பரிச்சேதங்கள்) இல்லை. ஆகையால் நீ அனந்தம். வெவ்வேறான லக்ஷணங்களைக்கொண்டுதான் வஸ்துக்களின் வேற்றுமையைத் தீர்மானிக்கிறோம். ஜீவ ஸ்வரூபத்திலும் ப்ரஹ்ம ஸ்வரூபத்திலும் ஒரேமாதிரியான லக்ஷணங்கள் இருப்பதால் இரண்டும் ஒன்றுதான். (18)

(அ) ஜீவ-ஈச்வரர்களின் உபாதிகளைக் காட்டுகிறார்:—

**सति देहाद्युपाधौ स्यात् जीवस्तस्य नियामकः ।**
**ईश्वरः शक्त्युपाधित्वात् द्वयोर्बाधे स्वयंप्रभः ॥ १९ ॥**

ஸதி தேஹாத்யுபாதௌ ஸ்யாத் ஜீவஸ்தஸ்ய நியாமக: |
ஈச்வர: ஶக்த்யுபாதித்வாத் த்வயோர் பாதே ஸ்வயம் ப்ரப: ||

देहाद्युपाधौ सति–சரீரம் முதலிய உபாதி இருக்கும் பொழுது, जीवः-ஜீவன் तस्य–அதற்கு, नियामकः–அடக்கி ஆள்பவனுக, स्यात्–ஆவான். शक्त्युपाधित्वात्–மாயா சக்தியை உபாதியாகக் கொண்டிருப்பதால், ईश्वरः–ஈசுவரன் (அதற்கு நியாமகன்). द्वयोर्बाधे–இரண்டு உபாதிகளையும் விலக்கிவிட்டால், स्वयंप्रभः–தானே பிரகாசிக்கும் சைதன்யம் ஒன்றுதான் மிஞ்சிநிற்கும்.

ஜீவனுக்கு தேஹம் முதலியவை உபாதி. ஈசுவரனுக்கு மாயை உபாதி. அகண்டமான வஸ்துவைத் தனியாகப் பிரித்துக்காட்டும் பொருளுக்கு உபாதி என்று பெயர். ஆகாசம் அகண்டமான ஒரே வஸ்து. ஆனாலும் குடத்திலுள்ள ஆகாசம் வேறுகவும், செம்பிலுள்ள ஆகாசம் வேறுகவும், தெரிகிறது. இங்கு ஆகாசத்தைப் பிரித்துக் காட்டும் குடம், செம்பு முதலியவை உபாதிகள். இதுபோல் சைதன்யம் ஒன்ருக இருந்தாலும் தேஹாதிகளும், மாயையும் பிரித்துக் காட்டுகின்றன தேஹாதிகளுடன் கலந்த சைதன்யத்துக்கு ஜீவன் என்று பெயர். மாயையுடன் சேர்ந்த சைதன்யத்திற்கு ஈசுவரன் என்று பெயர். இரண்டிலும் ஒரே சைதன்யம் இருந்தாலும் உபாதி வெவ்வேருக இருப்பதால் தன்னை ஈசுவரனைக் காட்டிலும் வேருக எண்ணுகிறோம். இது மட்டுமல்ல, தேஹமென்னும் உபாதி பலவாக இருப்பதால் ஜீவர்களும் அநேகர் என்று நினைக்கிறோம். இது ப்ராந்தி. உபாதிகளின் ஸம்பந்தம் இருக்கும் வரைதான் இந்த ப்ராந்தி இருக்கும். குடமும் சொம்பும் இருக்கும் வரை ஆகாசமும் தனித்துக் காணப்படும். இவ்விரண்டும் மறைந்துவிட்டால் அங்கு ஆகாசம் இருந்தாலும் வேற்றுமை தெரியாது. இதுபோல தத்வஞானத்தால் தேஹாதிகள், மாயை என்னும் உபாதிகள் மறைந்து விட்டால் பிறகு ஜீவன், ஈசுவரன் என்ற வேற்றுமை தெரியாது. ஸ்வயம் ப்ரகாசமான சைதன்யம் ஒன்றுதான் தெரியும். (19)

(அ) உபாதிகளை விலக்கும் தத்வஞானத்தைக் கொடுக்கும் ப்ரமாணத்தைக் காட்டுகிருர் :—

अपेक्ष्यतेऽखिलैर्मानैर्न यन्मानमपेक्षते ।
वेदवाक्यं प्रमाणं तद्ब्रह्मात्मावगतौ मतम् ॥ २० ॥

அபேக்ஷ்யதே ऽகிலைர் மானைர் ந யன் மானமபேக்ஷதே ।
வேதவாக்யம் ப்ரமாணம் தத் ப்ரஹ்மாத்மாவகதௌ மதம் ॥

**अखिलैः मानैः**-எல்லா பிரமாணங்களாலும், **यत्**-எது, **अपेक्ष्यते**-எதிர்பார்க்கப்படுகிறதோ, **यत्**-எது, **मानं**-வேறு ப்ரமாணத்தை, **न अपेक्षते**-எதிர்பார்க்கிறதில்லையோ, **तत्**-அந்த, **वेदवाक्यं**-உபநிஷத் வாக்யம் **ब्रह्मात्मावगतौ**-ப்ரஹ்மத்தை ஆத்மாவாக நேரில் தெரிந்து கொள்வதில், **प्रमाणं**-ப்ரமாணமாக, **मतम्**-ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது.

ப்ரத்யக்ஷம், அநுமானம், முதலிய ப்ரமாணங்கள் எல்லாம் வேதத்தை அனுஸரித்துத்தான் ப்ரமாணமாகும். வேதத்திற்கு விருத்தமாயிருந்தால் அவை ப்ரமாணம் அல்ல. புருஷர்களின் இந்திரியங்களிலும் புத்தியிலும் பலவித தோஷம் ஸம்பவிக்கக்கூடுமாதலால் ப்ரத்யக்ஷம் முதலியவை தாமாக ப்ரமாணமாகாது. அபௌருஷேயமான வேதத்தில் ஒரு தோஷமும் ஏற்பட இடமில்லாததால் அது தானுகவே ப்ரமாணமாகிறது. இந்த வேதத்தை ஒட்டித்தான் மற்றவை ப்ரமாணமாகின்றன. இவ்வாறு ஸ்வத: ப்ரமாணமான சிறந்த வேத வாக்யத்தால் ப்ரஹ்மாத்மைக்யாநுபவம் ஏற்படுகிறது. 'அவகதி' என்ற பதத்திற்கு ஸாக்ஷாத்காரம் என்று பொருள். உபநிஷத் வாக்யத்தால் ஜீவ ப்ரஹ்மைக்ய ஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது. (20)

अतो हि तत्त्वमस्यादिवेदवाक्यं प्रमाणतः ।
ब्रह्मणोऽस्ति यया युक्त्या साऽस्माभिः संप्रकीर्त्यते ॥ २१ ॥

அதோ ஹி தத்த்வமஸ்யாதி வேதவாக்யம் ப்ரமாணத: ।
ப்ரஹ்மணோஸ்தி யயா யுக்த்யா ஸாऽஸ்மாபி:
ஸம்ப்ரகீர்த்யதே ॥

**अतः**-ஆகையால், **यया**-எந்த **युक्त्या**-யுக்தியினுல், **तत्त्वमस्यादिवेदवाक्यं**-'தத்வமஸி' முதலானவேதவாக்யம், **ब्रह्मणः**-ப்ரஹ்மத்திற்கு, **प्रमाणतः**-ப்ரமாணமாக, **अस्ति**-இருக்கிறதோ **सा**-அந்த யுக்தி, **अस्माभिः**-எங்களால், **संप्रकीर्त्यते**-நன்கு சொல்லப்படுகிறது.

'தத்த்வமஸி' முதலான உபநிஷத் வாக்யத்திஞல் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படுவதாகக் கூறப்பட்டது. ஆனுல் இந்த வாக்யத்தைக் கேட்பதால் மட்டும் ஒருவருக்கும் இந்த அனுபவம் ஏற்படுவதில்லே. அதனுல் இந்த வாக்யத்தி லிருந்து ஆத்மானுபவம் ஏற்படுவதற்கு வேண்டிய உபாயத்தை மேல் சுலோகங்களில் காட்டுகிருர். (21)

**शोधिते त्वंपदार्थे हि तत्त्वमस्यादि चिन्तितम् ।**
**संभवेन्नान्यथा तस्माच्छोधनं कृतमादितः ॥ २२ ॥**

ஶோதிதே த்வம்பதார்த்தே ஹி தத்த்வமஸ்யாதி சிந்திதம் ।
ஸம்பவேத் நாந்யதா தஸ்மாத் ஶோதநம் க்ருதமாதித: ॥

**त्वंपदार्थे**-'த்வம்' என்ற சொல்லின் பொருள், **शोधितेहि**-சோதனம் செய்யப்பட்ட பொழுதல்லவா, **तत्वमस्यादि**-'தத்வமஸி' முதலான வாக்யம், **चिन्तितं**-ஆராயப்பட்டதாக **संभवेत्**-ஆகும். **अन्यथा**-அப்படியில்லாவிடில், **न**-ஆகாது. **तस्मात्**-ஆகையால், **आदितः**-முதலில், **शोधनं कृतम्**-சோதனம் செய்யப்பட்டது.

'தத்த்வமஸி' என்ற வாக்யத்தின் கருத்தை நன்கு ஆராய்ந்து பார்ப்பதுதான் அந்த வாக்யத்திலிருந்து ஆத்மானுபவம் ஏற்படுவதற்கு உபாயம். வாக்யத்தின் கருத்தை ஆராய்வதற்கு, முதலில் அதிலுள்ள பதங்களின் பொருளேச் சோதித்துத் தெரிந்துகொள்ளவேண்டும். ஆகையால் முதலில் பதார்த்தசோதனம் செய்யப்படுகிறது. உண்மையில் அந்த ஸ்வரூபத்தில் சேராத அம்சங்களே விலக்கி சுத்தமாகத் தெரிந்துகொள்வதுதான் சோதனம்.

(அ) த்வம்பதத்தின் வாச்யார்த்தத்தை காட்டுகிறார் :-

देहेन्द्रियादिधर्मान् यः स्वात्मन्यारोपयन् मृषा ।
कर्तृत्वाद्यभिमानी च वाच्यार्थस्त्वंपदस्य सः ॥ २३ ॥

தேஹேந்த்ரியாதி தர்மான் ய: ஸ்வாத்மந்யாரோபயன் ம்ருஷா ।
கர்த்ருத்வாத்யபிமாநீ ச வாச்யார்த்தஸ் த்வம்பதஸ்ய ஸ: ॥

यः-எவன், स्वात्मनि-தன்ஸ்வரூபத்தில், देहेन्द्रियादिधर्मान्-தேஹம், இந்திரியம் முதலியவற்றின் தர்மங்களை मृषा-பொய்யாக, आरोपयन्-ஆரோபணம் செய்துகொண்டு, कर्तृत्वाद्यभिमानी च-கர்த்ருத்வம் முதலியவை இருப்பதாக அபிமானம் கொள்கிறானோ, सः-அவன், त्वंपदस्य-த்வம்பதத்திற்கு, वाच्यार्थः-வாச்யமான பொருள்.

'தத்த்வமஸி' என்ற வாக்யம் சாந்தோக்ய உபநிஷத்தில் ஆறுவது அத்யாயத்தில் காணப்படுகிறது. ஆருணி என்ற முனிவர் தம் குமாரனான ச்வேதகேதுவுக்கு உபதேசிக்கும் வாக்யம் இது. இந்த வாக்யத்தில் त्वं (த்வம்) என்ற பதத்திற்கு நீ என்று பொருள். ச்வேதகேதுவைப் பார்த்துக் கூறுவதால் त्वं (த்வம்) என்பது ச்வேதகேதுவைக் குறிக்கும். மற்ற ஆசார்யர்களும் இந்த மஹா வாக்யத்தை உபதேசிக்கக் கூடுமாதலால் பொதுவாக த்வம் என்பது அக்ஞானியான ஜீவனைக் குறிக்கும். அந்த சரீரத்தில் இருந்து கொண்டு தேஹம், இந்திரியம் முதலியவற்றின் தர்மங்களை எல்லாம் ப்ரமத்தால் தன்னிடம் இருப்பதாக எண்ணி நான் கருப்பு, சிவப்பு, பார்க்கிறேன் கேட்கிறேன் என்றெல்லாம் வியவஹாரம் செய்துகொண்டு தன்னைக் கர்த்தாவாகவும் ஸுகதுக்கங்களை அநுபவிப்பவனாகவும் நினைத்து சரீராதிகளில் அபிமானம் கொண்டுள்ள ஜீவாத்மாதான் 'த்வம்' பதத்தின் பொருள். 'த்வம்' என்ற சொல்லைக்கேட்டவுடன் இந்தப் பொருள் எல்லோருக்கும் விளங்குவதால் இதற்கு வாச்யார்த்தம் என்று பெயர். அதாவது உபாதிகளுடன் கலந்த சைதன்யம்தான் த்வம்பதவாச்யார்த்தம். (23)

(அ) த்வம்பத லக்ஷ்யார்த்தத்தைக் காட்டுகிறுர்:—

देहेन्द्रियादिसाक्षी यस्तेभ्यो भाति विलक्षणः ।
स्वयंबोधस्वरूपत्वात् लक्ष्यार्थस्त्वंपदस्य सः ॥ २४ ॥

தேஹேந்த்ரியாதி ஸாக்ஷீ ய: தேப்யோ பாதி விலக்ஷண: |
ஸ்வயம் போத ஸ்வரூபத்வாத் லக்ஷ்யார்த்தஸ்
த்வம்பதஸ்ய ஸ: ||

यः-எவன், स्वयंबोधस्वरूपत्वात्-தான் ஞானஸ்வரூபமாக இருப்பதால், देहेन्द्रियादिसाक्षी-தேஹம், இந்திரியம் முதலிய வைகளை நேரில் அறிபவனுகவும், तेभ्यः - அவைகளைக்காட்டி லும், विलक्षणः - வேறுபட்ட தன்மை உள்ளவனுகவும் भाति- விளங்குகிறுனே, सः - அவன், त्वंपदस्य - த்வம் என்ற சொல்லுக்கு लक्ष्यार्थः-லக்ஷணையிஞல் கிடைக்கும் பொருள்.

தேஹம், இந்திரியம் முதலியவற்றைக் காட்டிலும் வேருன ஞான ஸ்வரூபியான ஆத்மா த்வம்பதத்திலிருந்து லக்ஷணையிஞல் கிடைக்கும் பொருள். தேஹாதிகளின் ஸ்வ பாவம் வேறு. இவனுடைய ஸ்வபாவம் வேறு. அவை களுக்கும் இவனுக்கும் கொஞ்சமும் ஸம்பந்தம் கிடையாது. ஆனுலும் இவன் ஞான ஸ்வரூபனுக இருப்பதால் அவை களுக்கு ஸாக்ஷியாக இருக்கிறுன். வாதி ப்ரதிவாதிகளின் காரியங்களிலோ அதனுல் ஏற்படும் லாப நஷ்டங்களிலோ கொஞ்சமும் ஸம்பந்தப்படாமல் அவர்கள் செய்த காரியங் களைத் தெரிந்துகொண்டவனைத் தான் உலகில் ஸாக்ஷி என்கிறேம். இதுபோலவே தேஹாதிகள் செய்யும் காரியங்களிலோ, அதனுல் ஏற்படும் ஸுக துக்கங்களிலோ ஆத்மாவுக்கு ஸம்பந்தம் கிடையாது. ஆனுலும் தேஹாதி களையும் அவை செய்யும் காரியங்களையும் இவன் அறிந்து கொள்கிறுன். இந்த ஸாக்ஷிதான் த்வம் பத லக்ஷ்யார்த்தம் லக்ஷணையைப் பற்றிய விபரம் பின்னுல் காணலாம். (24)

(அ) [1]தத்பத லக்ஷ்யார்த்தத்தைக் கூறுகிறுர்:—

(1) மஹாவாக்யத்தில் 'த்வம்' பதத்தின் வாச்யார்த் தத்தையும் லக்ஷ்யார்த்தத்தையும் கூறிவிட்டு 'தத்' பதத்தின்

वेदान्तवाक्यसंवेद्यविश्वातीताक्षराद्वयम् ।
विशुद्धं यत् स्वसंवेद्यं लक्ष्यार्थस्तत्पदस्य सः ॥ २५ ॥

வேதாந்த வாக்ய ஸம்வேத்ய விச்வாதீதாக்ஷராத்வயம் ।
விஶுத்தம் யத் ஸ்வஸம்வேத்யம் லக்ஷ்யார்த்தஸ்
தத்பதஸ்ய ஸ: ॥

यत्–எது, वेदान्तवाक्यसंवेद्य –உபநிஷத்வாக்யங்களால் அறியத்தக்கதும், विश्वातीत-பிரபஞ்சத்திற்கு அப்பால் பட்டதும், अक्षर–அழிவற்றதும், अद्वयं-இரண்டற்றதும், विशुद्धं–பரிசுத்தமானதும், स्वसंवेद्यं–ஸ்வயம்ப்ரகாசமாகவும் உள்ளதோ, सः-அது, तत्पदस्य-'தத்'என்ற பதத்திற்கு, लक्ष्यार्थः–லக்ஷணையால் கிடைக்கக்கூடிய பொருள்.

சுத்த ப்ரஹ்மம்தான் தத்பத லக்ஷ்யார்த்தம். இது உபநிஷத்தில் 'ஸத்யம் ஞானம் அநந்தம் ப்ரஹ்ம' இது முதலான வாக்யங்களால் காட்டப்படுகிறது. இது அழிவற்றது. ஒரே தத்வம். இதில் மாயை, அதன் குணங்கள், பிரபஞ்சம் முதலானவற்றின் ஸம்பந்தம் கொஞ்சமும் கிடை

---

லக்ஷ்யார்த்தத்தைக் கூறுகிறார். க்ரமமாக இதற்கு முன்னால் 'தத்' பதத்தின் வாச்யார்த்தத்தைக் கூறவேண்டியது அவசியம். இதே ரீதியில் மஹாவாக்யார்த்த விசாரம் வாக்யவ்ருத்தி, ஸ்வாத்ம நிருபணம், ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்கிரஹம் முதலான ப்ரகரணங்களிலும் காணப்படுகிறது. அங்கு தத்பதவாச்யார்த்தம் கூறப்பட்டிருக்கிறது.

मायोपाधिर्जगद्योनिः सर्वज्ञत्वादिलक्षणः ।
पारोक्ष्यशबलः सत्याद्यात्मकस्तत्पदाभिधः ॥

(வாக்யவ்ருத்தி சு. 45)

वेदावसानवाचा संवेद्यं सकलजगदुपादानम् ।
सर्वज्ञताद्युपेतं चैतन्यं तत्पदस्य वाच्योर्थः ॥

(ஸ்வாத்மநிருபணம் சு. 27)

மாயையுடன் சேர்ந்து பிரபஞ்சத்தை ஸிருஷ்டி செய்யும் ஸர்வக்ஞரான, பரோக்ஷமான ஈசுவர சைதன்யம் தத்பதத்தின் வாச்யார்த்தம். இதையே இங்கும் எடுத்துக்கொள்ளலாம்.

யாது. தானே பிரகாசிக்கும் வஸ்து. வேறு ஒன்றினாலும் பிரகாசிக்கப்படுவதில்லை. (25)

(அ) பதார்த்தங்களைக் கூறிவிட்டு வாக்யார்த்தத்தைக் கூறுகிறார்:—

सामानाधिकरण्यं हि पदयोस्तत्त्वमोर्द्वयोः ।
संबन्धस्तेन वेदान्तैर्ब्रह्मैक्यं प्रतिपाद्यते ॥ २६ ॥

ஸாமாநாதிகரண்யம் ஹி பதயோஸ் தத்வமோர் த்வயோ: ।
ஸம்பந்தஸ் தேந வேதாந்தைர் ப்ரஹ்மைக்யம்
ப்ரதிபாத்யதே ॥

तत्त्वमोः-'தத்' 'த்வம்' என்ற, द्वयोः पदयोः-இரண்டு பதங்களுக்கும், सामानाधिकरण्यं हि-ஸாமாநாதிகரண்யம் அல்லவா, संबन्धः-ஸம்பந்தம். तेन-அதனால், वेदान्तैः உபநிஷத் வாக்யங்களால், ब्रह्मैक्यं-ப்ரஹ்மாபேதம், प्रतिपाद्यते-விளக்கப் படுகிறது.

தத், த்வம், இவ்விருபதங்களும் 'தத்வமஸி' என்ற ஒரே வாக்யத்தில் இருப்பதால் ஒன்றுக்கொன்று சேர்ந்து கொண்டு தான் வாக்யார்த்தத்தை உண்டுபண்ணுகிறது. இவ்விருபதங்களின் ஸம்பந்தத்திற்கு ஸாமாநாதிகரண்யம் என்றுபெயர். ஒரே பொருளைக் குறிப்பதுதான் ஸாமாநாதிகரண்யம் என்பது. ஆகவே இந்த மஹாவாக்யத்திலிருந்து ப்ரஹ்மாபேத ஞானம் உண்டாகிறது. (26)

(அ) ஸாமாநாதிகரண்யம் என்பதை விவரிக்கிறார்:—

भिन्नप्रवृत्तिहेतुत्वे पदयोरेकवस्तुनि ।
वृत्तित्वं यत्तथैवैकविभक्त्यन्तकयोस्तयोः ॥ २७ ॥

सामानाधिकरण्यं तत्संप्रदायिभिरीरितम् ।
तथा पदार्थयोरेव विशेषणविशेष्यता ॥ २८ ॥

பின்ன ப்ரவிருத்தி ஹேதுத்வே பதயோரேக வஸ்துநி |
வ்ருத்தித்வம் யத் ததைவைக விபக்த்யந்தகயோ ஸ்தயோ: ||

ஸாமாநாதிகரண்யம் தத் ஸம்ப்ரதாயிபிரீரிதம் |
ததா பதார்த்தயோரேவ விஶேஷண விஶேஷ்யதா ||

**पदयोः**-இருபதங்களுக்கு, **भिन्नप्रवृत्तिहेतुत्वे** - ப்ரவ்ருத்தி நிமித்தம் வெவ்வேருகஇருக்கும்பொழுது, **एकविभक्त्यन्तकयोः** -ஒரே விபக்தியை கடைசியில் கொண்ட, **तयोः**-அவ்விரு பதங்களுக்கும், **तथैव**-அப்படியே, **एकवस्तुनि**-ஒரே பொருளில் **वृत्तित्वं यत्** இருப்பது என்பது எதுவோ, **तत्**-அது, **सामानाधिकरण्यं**-ஸாமாநாதிகரண்யம் என்று **संप्रदायिभिः** சாஸ்திர ஸம்ப்ரதாயம் அறிந்தவர்களால் **ईरितं**- சொல்லப்பட்டிருக்கிறது. **तथा**-அவ்விதமே, **पदार्थयोरेव**-இரு பதங்களின் அர்த்தங்களுக்கும், **विशेषणविशेष्यता** - விசேஷண விசேஷ்ய பாவம் (சொல்லப்பட்டிருக்கிறது.)

ஒரு சொல் ஒரு பொருளைக் குறிக்கிறதென்ருல் அதற்குத் தனிப்பட்ட காரணம் இருக்கிறது. இதற்கு 'ப்ரவ்ருத்தி நிமித்தம்' என்று பெயர். ப்ரவ்ருத்திக்கு- சொல் பொருளைக் குறிப்பதற்கு, நிமித்தம்-காரணம். ஒவ்வொரு சப்தத்திற்கும் ஒவ்வொன்று ப்ரவிருத்தி நிமித்தமாக இருக்கும். ஒரேமாதிரி விபக்தியுடன் கூடிய இரு பதங்களுக்கு ப்ரவ்ருத்தி நிமித்தம் வெவ்வேருக இருந்தாலும் இரண்டும் ஒரே பொருளைக் குறிக்குமாளுல் அங்கு ஸாமாநாதிகரண்யம் இருப்பதாக சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது. அதாவது **शुक्ला गौः** (சுக்லா கௌ:) வெளுப்பு நிறமுள்ள பசு என்று சொல்கிறோம். இங்கு சுக்லபதமும் கோபதமும் ப்ரதமாவிபக்த்யந்தம். சுக்ல பதத்திற்கு ப்ரவ்ருத்தி நிமித்தம் வெளுப்பு நிறம். கோபதத்திற்கு ப்ரவ்ருத்தி நிமித்தம் கோத்வம் என்ற ஜாதி. ப்ரவ்ருத்தி நிமித்தம் வெவ்வேருக இருந்தாலும் இரண்டு பதங்களும் சேர்ந்து ஒரே பசுவைக் குறிக்கிறது. ஆனல் இங்கு

கோபதம் விசேஷ்யம், சுக்லபதம் விசேஷணம். விசேஷ்ய விசேஷணபாவம் உள்ள இடங்களில் ஸாமாநாதிகர்ண்யம் இருக்கும். (27–28)

(அ) மஹாவாக்யத்தில் வாச்யார்த்தத்தை விட்டு லக்ஷ்யார்த்தத்தை ஏற்றுக் கொள்வதன் காரணத்தைக் கூறுகிறார்:—

अयं सः सोऽयमितिवत् संबन्धो भवति द्वयोः ।
प्रत्यक्त्वं सद्वितीयत्वं परोक्षत्वं च पूर्णता ॥ २९ ॥

परस्परविरुद्धं स्यात् ततो भवति लक्षणा ।
लक्ष्यलक्षणसंबन्धः पदार्थप्रत्यगात्मनोः ॥ ३० ॥

அயம் ஸ: ஸோயமிதிவத் ஸம்பந்தோ பவதி த்வயோ: ।
ப்ரத்யக்த்வம் ஸத்விதீயத்வம் பரோக்ஷத்வம் ச பூர்ணதா ॥

பரஸ்பர விருத்தம் ஸ்யாத் ததோ பவதி லக்ஷணா ।
லக்ஷ்ய லக்ஷண ஸம்பந்த: பதார்த்த ப்ரத்யகாத்மனோ: ॥

**अयं सः**-இவன் அவன், **सोऽयं**-அவன் இவன், **इतिवत्**-என்பதுபோல், **द्वयोः**-இரண்டு பதங்களுக்கும், **संबन्धः**-ஸம்பந்தம், **भवति**-ஏற்படுகிறது. **प्रत्यक्त्वं**-அபரோக்ஷமாயிருக்கும் தன்மையும், **परोक्षत्वं**—பரோக்ஷமாயிருக்கும் தன்மையும், **सद्वितीयत्वं**-இரண்டாவது பொருளுடன் கூடியிருக்கும் தன்மையும், **पूर्णता च**-எங்கும் நிறைந்து ஒரே வஸ்துவாயிருக்கும் தன்மையும், **परस्परविरुद्धं**—ஒன்றுக்கொன்று எதிரிடையானதாக, **स्यात्**-ஆகும், **ततः**-ஆகையால், **लक्षणा**-லக்ஷணையானது, **भवति**-இருக்கிறது. **पदार्थप्रत्यगात्मनोः**-பதத்திற்கும் அதன் அர்த்தமான ப்ரத்யகாத்மாவுக்கும், **लक्ष्यलक्षणसंबन्धः**-லக்ஷ்யலக்ஷணஸம்பந்தம்.

'சுக்லா கௌ:' என்ற வாக்யத்தில் போல தத்த்வமஸி வாக்யத்தில் விசேஷ்ய விசேஷண பாவத்தைக் கொண்ட

ஸாமாநாதிகரண்யம் கூறமுடியாது. அவனே இவன், இவனே அவன் என்ற வாக்யத்தில் போல அபேதத்தைத் தான் வாக்யார்த்தமாகக் கூறவேண்டும். ஏனெனில் வெளுப்பான பசுவை நாம் நேரில் காண்பதால் அந்த வாக்யார்த்தத்தில் விரோதம் ஒன்றுமில்லை. இங்கு நீ (ஜீவன்) அவனாக (ஈசுவரனாக) இருக்கிறாய் என்று வாச்யார்த்தத்தைக் கொண்டு பொருள் கூறினோமானால் இது ஒன்றுக்கொன்று விருத்தமாயிருக்கிறது. த்வம்பதத்தின் பொருளான ஜீவன் ப்ரத்யக்ஷமாக இருக்கிறது. பல வேற்றுமைகளுடன் கூடியது. தத்பதத்தின் பொருளான ஈசுவரனோ பரோக்ஷம், எங்கும் நிறைந்த ஒரேவஸ்து. ஜீவன் ஈசுவரனாக இருக்க முடியாது. ஈசுவரன் ஜீவனாக இருக்க முடியாது. இவ்வாறு வாச்யார்த்தத்தில் விரோதம் ஏற்படுவதால் அதைவிட்டு லக்ஷணையால் வேறு அர்த்தத்தைக் கொள்ளவேண்டும். (29-30)

(அ) லக்ஷணையை விவரிக்கிறார்:—

**मानान्तरोपरोधाच्च मुख्यार्थस्यापरिग्रहे ।**
**मुख्यार्थस्याविनाभूते प्रवृत्तिर्लक्षणोच्यते ॥ ३१ ॥**

மாநாந்தரோபரோதாச்ச முக்யார்த்தஸ்யாபரிக்ரஹே ।
முக்யார்த்தஸ்யாவிநாபூதே ப்ரவ்ருத்திர்லக்ஷணோச்யதே ॥

**मानान्तरोपरोधाच्च**-வேறு ப்ரமாணத்திற்கு விரோதம் ஏற்படுவதால், **मुख्यार्थस्य अपरिग्रहे**-முக்யமான அர்த்தத்தை ஏற்றுக்கொள்ள முடியாமல்இருக்கும்பொழுது, **मुख्यार्थस्य अविनाभूते**-முக்யார்த்தத்தில் சேர்ந்துள்ள பொருளில், **प्रवृत्तिः**-செல்வது, **लक्षणा उच्यते**-லக்ஷணை என்று கூறப்படுகிறது.

ஒரு வாக்யத்திலுள்ள பதங்களிலிருந்து கிடைக்கும் முக்யார்த்தத்தைச் சேர்த்துப்பார்த்ததில் அந்த வாக்யார்த்தம் ப்ரமாண விருத்தமாக இருக்குமானால் முக்யார்த்தத்துடன் சேர்ந்த வேறு பொருளை அந்த பதத்திற்கு அர்த்தமாகச் சொல்வது லக்ஷணை எனப்படும். (31)

(அ) லக்ஷணையின் பல விதங்களைக் கூறுகிறார்:—

**त्रिविधा लक्षणा ज्ञेया जहत्यजहती तथा ।**
**अन्योभयात्मिका ज्ञेया तत्राद्या नैव संभवेत् ॥ ३२ ॥**

த்ரிவிதா லக்ஷணா ஜ்ஞேயா ஜஹத்யஜஹதீ ததா ।
அந்யோபயாத்மிகா ஜ்ஞேயா தத்ராத்யா நைவ ஸம்பவேத் ॥

**लक्षणा** – லக்ஷணையானது, **त्रिविधा**–மூன்று விதமாக, **ज्ञेया**—அறியத்தக்கது. **जहती**-விட்டது, **तथा**—அவ்விதம், **अजहती**-விடாதது, **अन्या**-மற்றது (மூன்றாவது) **उभयात्मिका**- இரண்டுமாக இருப்பதாக (விட்டும் விடாதது), **ज्ञेया**- அறியத்தகுந்தது. **तत्र**-அதில், **आद्या**-முதலாவது, **नैव संभवेत्**-பொருந்தாது.

ஜஹத்லக்ஷணை (விட்டலக்ஷணை), அஜஹத்லக்ஷணை (விடாதலக்ஷணை), ஜஹதஜஹத்லக்ஷணை (விட்டும் விடாத லக்ஷணை) என்று லக்ஷணை மூன்றுவிதம். இவற்றில் முதலாவதான ஜஹத்லக்ஷணை தத்த்வமஸி வாக்யத்தில் பொருந்தாது. (32)

(அ) முதலாவதான ஜஹத்லக்ஷணையை விளக்குகிறார் :—

**वाच्यार्थमखिलं त्यक्त्वा वृत्तिः स्याद्या तदन्विते ।**
**गङ्गायां घोष इतिवत् जहती लक्षणा हि सा ॥ ३३ ॥**

வாச்யார்த்தமகிலம் த்யக்த்வா வ்ருத்தி: ஸ்யாத் யா ததன்விதே ।
கங்காயாம் கோஷ இதிவத் ஜஹதீ லக்ஷணா ஹி ஸா ॥

**वाच्यार्थमखिलं**-வாச்யார்த்தம் முழுவதையும், **त्यक्त्वा**- விட்டு, **तदन्विते**-அதனுடன் சேர்ந்த வேறு பொருளில், **वृत्तिः या स्यात्**-இருப்பது யாதொன்று உண்டோ, **सा**-அது, **गङ्गायां घोषः इतिवत्**-கங்கையில் இடைச்சேரி என்பதில்போல, **जहती लक्षणा हि**-ஜஹத்லக்ஷணையல்லவா.

சப்தத்திலிருந்து கிடைக்கக்கூடிய வாச்யார்த்தத்தை விட்டுவிட்டு அதனுடன் ஸம்பந்தமுள்ள வேருெரு. வஸ்துவை இந்தப் பதத்திற்குப் பொருளாகக்கூறுவது ஜஹத்லக்ஷணை எனப்படும். உதாஹரணம் :- கங்காயாம் கோஷ: (गङ्गायां घोषः) இந்த வாக்யத்திற்கு கங்கையில் இடைச்சேரி இருக்கிறது என்பது பொருள். கங்கை என்னும் சொல் இருகரைகளுக்குள் ஓடுகிற பிரவாஹத்தைக் குறிக்கும். அதுதான் வாச்யார்த்தம். ஜலப்ரவாஹத்தில் இடைச்சேரி இருக்கமுடியாது. வாச்யார்த்தமான ப்ரவாஹத்தைக் கொண்டால் விரோதம் ஏற்படுகிறது அதனுல் இங்கு வாச்யார்த்தமான ப்ரவாஹத்தை விட்டுவிட்டு பிரவாஹத்தை ஒட்டியுள்ள கரையை கங்காபதத்தின் பொருளாக லக்ஷணையால் சொல்கிருேம். கங்கைக் கரையில் இடைச்சேரி இருக்கலாம். இப்பொழுது விரோதம் இல்லை. இங்கு வாச்யார்த்தம் முழுவதையும் விட்டுவிடுவதால் இதற்கு ஜஹத்லக்ஷணை (விட்டலக்ஷணை) என்று பெயர்.

(அ) மஹாவாக்யத்தில் ஜஹத்லக்ஷணை பொருந்தாது என்பதைக் காட்டுகிருர் :—

वाच्यार्थस्यैकदेशस्य प्रकृते त्याग इष्यते ।
जहती संभवेत् नैव संप्रदायविरोधतः ॥ ३४ ॥

வாச்யார்த்தஸ்யைகதேஶஸ்ய ப்ரக்ருதே த்யாக இஷ்யதே।
ஜஹதீ ஸம்பவேத் நைவ ஸம்ப்ரதாய விரோதத: ॥

**प्रकृते**-இங்கு கூறப்படும் தத்த்வமஸி வாக்யத்தில், **वाच्यार्थस्य**-வாச்யார்த்தத்தினுடைய, **एकदेशस्य**-ஒரு அம்சத்திற்கு, **त्यागः**-விடுதல், **इष्यते**-விரும்பப்படுகிறது. (ஆகையால்), **संप्रदायविरोधतः**-சாஸ்திர ஸம்ப்ரதாயத்திற்கு விரோதமாயிருப்பதால், **जहती**-ஜஹத்லக்ஷணை, **नैव संभवेत्**-இங்கு ஸம்பவிக்காது.

'தத்த்வமஸி' மஹாவாக்யத்தில் தத்பதத்திற்கு மாயை என்ற உபாதியுடன் கூடிய சைதன்யம்தான் வாச்யார்த்தம்.

இதில் ஒரு அம்சமான உபாதியை விட்டு மற்ருேர் அம்சமான சைதன்யத்தை மட்டும் தத்பதத்தின் பொருளாகக் கொள்கிறேம். இவ்விதமே தேஹாதிகள் என்ற உபாதியுடன் கூடிய சைதன்யம் என்ற த்வம்பதவாச்யார்த்தத்திலும் ஏகதேசமான உபாதியைவிட்டு மற்ருேர் அம்சமான சைதன்யத்தை த்வம்பதத்தின் பொருளாகச் சொல்கிறேம். 'கங்காயாம்' என்பதில் ப்ரவாஹம் என்ற வாச்யார்த்தம் முழுவதையும் விட்டு கரை என்ற வேறு அர்த்தத்தைக் கொள்வதால் அங்கு ஜஹத்லக்ஷணை (விட்டலக்ஷணை) பொருந்தும். மஹாவாக்யத்தில் வாச்யார்த்தம் முழுவதையும் விடாதபடியாலும் ஏகதேசத்தை வைத்துக்கொள்வதாலும் இங்கு ஜஹத்லக்ஷணை (விட்டலக்ஷணை) பொருந்தாது. (34)

(அ) அஜஹத்லக்ஷணையை விவரிக்கிருர் :—

**वाच्यार्थमपरित्यज्य वृत्तिरन्यार्थके तु या ।**
**कथितेयमजहती शोणोऽयं धावतीतिवत् ॥ ३५ ॥**

வாச்யார்த்தமபரித்யஜ்ய வ்ருத்திரங்யார்த்தகே து யா ।
கதிதேயமஜஹதீ ேஸாணேயம் தாவதீதிவத் ॥

**वाच्यार्थं**-வாச்யமான பொருளை, **अपरित्यज्य**-விடாமல், **अन्यार्थके तु**-வேறு பொருளில், **वृत्तिः या**-இருப்பது எதுவோ, **इयं** - இது, **शोणोयं धावतीतिवत्** - சிகப்பு நிறமுள்ள இது (குதிரை) ஓடுகிறது என்பதில்போல, **अजहती** — அஜஹத்லக்ஷணையாக, **कथिता**-கூறப்பட்டுள்ளது.

வாச்யமான பொருளையும் விடாமல் வாச்யமல்லாத வேறு பொருளையும் குறிக்குமானல் அங்கு அஜஹத்லக்ஷணையாகும் **शोणो धावति** (ேஸாணே தாவதி) என்ற வாக்யத்தில் சோணபதத்திற்கு சிகப்புநிறம் என்று பொருள். நிறம் என்பது குணமானதால் அது திரவ்யத்தை விட்டுத் தனியாக இருக்காது. சிகப்புநிறம் மட்டும் தனியாக ஓடாது. ஆகவே 'சிவப்புநிறம் ஓடுகிறது' என்ற வாக்யார்த்

தத்தில் ப்ரத்யக்ஷ விரோதம் ஏற்படுவதால் சோணபதத்திற்கு சிகப்பு நிறமுள்ள குதிரை என்று லக்ஷணையால் பொருள் சொல்கிறோம் இங்கு வாச்யார்த்தமான சிகப்பு நிறத்தை விடாமல் அதையும் சேர்த்து சிகப்புக் குதிரை என்று பொருள் கூறுவதால் இங்கு அஜஹத்லக்ஷணையாகும்.

(அ) மஹாவாக்யத்தில் அஜஹத்லக்ஷணை பொருந்தாது என்பதைக் காட்டுகிறார் :—

न संभवति साऽप्यत्र वाच्यार्थेऽतिविरोधतः ।
विरोधांशपरित्यागो दृश्यते प्रकृते यतः ॥ ३६ ॥

ந ஸம்பவதி ஸாப்யத்ர வாச்யார்த்தேऽதிவிரோதத: ।
விரோதாம்ஶ பரித்யாகோ த்ருச்யதே ப்ரக்ருதே யத: ॥

यतः-எந்தக் காரணத்தால், प्रकृते-ப்ரக்ருதமான தத்வமஸி வாக்யத்தில், वाच्यार्थे-வாச்யமான பொருளில், अतिविरोधतः - மிகுந்த விரோதமிருப்பதால், विरोधांशपरित्यागः-விருத்தமான பாகத்தைக் கைவிடுவது, दृश्यते-காணப்படுகிறதோ (ஆகையால்), अत्र-இங்கு, साऽपि-அந்த அஜஹத்லக்ஷணையும், न संभवति- பொருந்தாது.

'தத்த்வமஸி' மஹாவாக்யத்தில் அஜஹத்லக்ஷணையும் பொருந்தாது. வாச்யார்த்தத்தை விடாமல் முழுவதும் சேர்த்துக்கொண்டால்தான் அஜஹத்லக்ஷணை சொல்லலாம். மஹா வாக்யத்திலோ வாச்யார்த்தமான உபாதிகளைச் சேர்த்துக்கொண்டால் விரோதம் ஏற்படுகிறது. அதற்காக விருத்தமான அம்சத்தை விட்டுவிடுகிறோம். ஆகையால் அஜஹத்லக்ஷணையும் இல்லை. (36)

(அ) மூன்றாவதான ஜஹதஜஹத் லக்ஷணையைக் கூறுகிறார் :—

वाच्यार्थस्यैकदेशं च परित्यज्यैकदेशकम् ।
या बोधयति सा ज्ञेया तृतीया भागलक्षणा ॥ ३७ ॥

வாச்யார்த்தஸ்யைகதேஶம் ச பரித்யஜ்யைகதேஶகம் ।
யா போதயதி ஸா ஜ்ஞேயா த்ருதீயா பாகலக்ஷணா ॥

**वाच्यार्थस्य**—வாச்யமான அர்த்தத்தின், **एकदेशं**—ஒரு அம்சத்தை, **परित्यज्य**—விட்டுவிட்டு, **एकदेशकं** — மற்றோர் அம்சத்தை, **या**—எது, **बोधयति**—அறிவிக்கிறதோ, **सा**—அது, **तृतीया**—மூன்றாவதான, **भागलक्षणा**—பாகலக்ஷணையாக, **ज्ञेया**—அறியத்தகுந்தது.

வாச்யமான அர்த்தத்தில் ஒரு அம்சத்தை விட்டுவிட்டு மற்றோர் அம்சத்தை மட்டும் பதத்திற்குப் பொருளாகக் கூறுவதானால் அது மூன்றாவதான ஜஹதஜஹல்லக்ஷணை எனப்படும். வாச்யார்த்தத்தில் ஒரு பாகத்தை விட்டு ஒரு பாகத்தை எடுத்துக்கொள்வதால் இதற்கு பாகலக்ஷணை என்றும் பெயர் உண்டு. (37)

(அ) பாகலக்ஷணைக்கு திருஷ்டாந்தம் கூறுகிறார் :—

सोऽयं विप्र इदं वाक्यं बोधयत्यादितस्तथा ।
तत्कालत्वविशिष्टं च तथैतत्कालसंयुतम् ॥ ३८ ॥

अतस्तयोर्विरुद्धं तत्तत्कालत्वादिधर्मकम् ।
त्यक्त्वा वाक्यं यथा विप्रपिण्डं बोधयतीरितम् ॥ ३९ ॥

तथैव प्रकृते तत्त्वमसीत्यत्र श्रुतौ शृणु ।

ஸோऽயம் விப்ர இதம் வாக்யம் போதயத்யாதிதஸ்ததா ।
தத்காலத்வ விஶிஷ்டம் ச ததைதத் கால ஸம்யுதம் ॥

அதஸ்தயோர் விருத்தம் தத் தத்காலத்வாதிதர்மகம் ।
த்யக்த்வா வாக்யம் யதா விப்ர பிண்டம் போதயதீரிதம் ॥

ததைவ ப்ரக்ருதே தத்த்வமஸீத்யத்ர ச்ருதௌ ச்ருணு ।

**सोऽयं विप्रः**—அந்த இந்த ப்ராஹ்மணன், **इदं वाक्यं**—இந்த வாக்கியம், **आदितः**—முதலில், **तथा**—அப்படியே, **तत्कालत्वविशिष्टं**—அந்த காலத்துடன் கூடினவரும், **तथा**—

அவ்விதமே, एतत्कालसंयुतं च-இந்தக் காலத்துடன் கூடின வருமான் பிராமணனை, बोधयति-அறிவிக்கிறது.

अतः-ஆகையால், तयोः-அவைகளில், विरुद्धं-விருத்தமான; तत्—அந்த, तत्कालत्वादिधर्मकं —அந்தக்காலம் முதலான தர்மத்தை, त्यक्त्वा-விட்டுவிட்டு, वाक्यं-வாக்யமானது, यथा-எப்படி, विप्रपिण्डं-பிராமணவ்யக்தியை, बोधयति-அறிவிக்கிறது (என்று), ईरितम्-சொல்லப்பட்டு உள்ளதோ, तथैव-அவ்விதமே-प्रकृते -ப்ரக்ருதமான तत्वमसीत्यत्र- தத்வமஸி என்ற இந்த श्रुतौ-வேத வாக்யத்தில், शृणु-கேள்.

காசியில் புதிதாக ஒரு பிராமணரைக் கண்டு பேசினான். சிறிதுகாலம் கழித்து அதே பிராமணரை ராமேசுவரத்தில் கண்டான். பார்த்தவுடன் "எங்கேயோ பார்த்த ஞாபகம் வருகிறதே" என்று ஆலோசித்துப் பார்க்கிறான். உடன் ஞாபகம் வந்துவிடுகிறது. सोयं विप्रः (ஸோயம் விப்ர:) "அவன்தான் இந்த பிராமணன்" என்று சொல்கிறான். காசியில் அன்று பார்த்தோமே அந்த பிராமணன்தான் இவன் என்பது இந்த வாக்யத்தின் பொருள். இந்த வாக்யத்தில் सः (ஸ:) என்ற பதத்திற்கு அந்த காசிதேசம், அந்த காலம் இவைகளுடன் சேர்ந்த பிராமணன் என்று அர்த்தம். अयं (அயம்) என்ற பதத்திற்கு இந்த ராமேசுவர தேசம், இந்தக் காலம் இவைகளுடன் சேர்ந்த பிராமணன் என்று அர்த்தம். இரண்டும் ஒன்று என்பதை வாக்யம் காட்டுகிறது. இது விருத்தம். காசியும் ராமேசுவரமும், அந்தக் காலமும் இந்தக் காலமும் ஒன்றாக முடியாது. அதற்காக सः (ஸ:) अयं (அயம்) என்ற பதங்களின் வாச்யார்த்தத்தில் ஏகதேசமான காலதேசங்களை விட்டு மற்றோர் பாகமான பிராமண வியக்தியை மட்டும் இரு பதங்களும் லக்ஷணையால் கூறுவதாக ஒப்புக்கொண்டு இந்த வாக்யம் அபேதத்தை போதிக்கிறதாகச் சொல்கிறோம். இதுதான் பாகலக்ஷணை. இதேபோல் தத்த்வமஸி மஹா வாக்யத்திலும் ஐக்யம்தான் அர்த்தம். (39½)

(அ) தார்ஷ்டாந்திகத்தில் ஸமந்வயப்படுத்துகிறார் :—

प्रत्यक्त्वादीन् परित्यज्य जीवधर्मांस्त्वमः पदात् ॥ ४० ॥

सर्वज्ञत्वपरोक्षादीन् परित्यज्य तदः पदात् ।
शुद्धं कूटस्थमद्वैतं बोधयत्यादरात्परम् ॥ ४१ ॥

तत्त्वमोः पदयोरैक्यमेव तत्त्वमसीत्यलम् ।

ப்ரத்யக்த்வாதீன் பரித்யஜ்ய ஜீவ தர்மாம்ஸ்த்வம: பதாத் ॥

ஸர்வஜ்ஞத்வ பரோக்ஷாதீன் பரித்யஜ்ய தத: பதாத் ।
ஶுத்தம் கூடஸ்தமத்வைதம் போதயத்யாதராத் பரம் ॥

தத்த்வமோ: பதயோரைக்யமேவ தத்த்வமஸீத்யலம் ।

त्वमः पदात्—த்வம்பதத்திலிருந்து கிடைக்கும், प्रत्यक्त्वादीन् - ப்ரத்யக்த்வம் முதலான, जीवधर्मान्– ஜீவனுடைய தர்மங்களை, परित्यज्य–விட்டு, तदः पदात्– தத்பதத்திலிருந்து கிடைக்கும், सर्वज्ञत्वपरोक्षादीन्– ஸர்வஜ்ஞத்வம், பரோக்ஷம் முதலான தர்மங்களை, परित्यज्य– விட்டு, तत्त्वमसि इति–தத்த்வமஸி என்ற வாக்யம், तत्त्वमोः पदयोः–தத்த்வம் பதார்த்தங்களின், ऐक्यमेव–அபேதத்தைத் தான் (அதாவது) शुद्धं–சுத்தமாயும், कूटस्थं–விகாரமற்றதாயும், अद्वैतं–இரண்டற்றதாயுமுள்ள, परं–பரப்ரஹ்மத்தை, आदरात्–கருத்துடன், अलं–நன்கு, बोधयति–அறியப்படுத்துகிறது.

தத்த்வமஸி மஹாவாக்யத்தில் த்வம்பதத்திற்கு அபரோக்ஷத்வம், பேதம் முதலிய தர்மங்களுடன் கூடிய சைதன்யம் வாச்யார்த்தம். இதில் முதலில் கூறப்பட்ட தர்மங்களை விட்டுவிட வேண்டும். தத்பதத்திற்கு ஸர்வஜ்ஞத்வம், பரோக்ஷத்வம் முதலிய தர்மங்களுடன் கூடிய சைதன்யம் வாச்யார்த்தம். இதிலும் முதலில் கூறப்பட்ட தர்மங்களை விட்டுவிடவேண்டும். வாச்யார்த்தத்தில் மிஞ்சியுள்ள சைதன்யம்தான் லக்ஷணையால் இரண்டு பதங்களுக்

கும் பொருள் ஆகிறது. அது ஒன்றுதான் என்பதை வாக்யம் காட்டுகிறது. இந்த சைதன்யம் சுத்தமானது. ஒருவித தர்மங்களும் அற்றது. விகாரமில்லாதது. இது ஒன்றுதான். இதில் பேதம் கிடையாது. சுத்த சைதன்யம் ஒன்று என்பதுதான் மஹா வாக்யத்தின் அர்த்தம். இதில் விரோதம் இல்லை. (41½)

(அ) தத்வஞான பலனைக் கூறுகிறார் :—

इत्थमैक्यावबोधेन सम्यग्ज्ञानं दृढं नयैः ॥ ४२ ॥
अहं ब्रह्मेति विज्ञानं यस्य शोकं तरत्यसौ ।

இத்தமைக்யாவபோதேந ஸம்யக்ஞானம் த்ருடம் நயை: ॥
அஹம் ப்ரஹ்மேதி விஜ்ஞானம் யஸ்ய ஶோகம் தரத்யஸௌ ।

इत्थं-இவ்வாறு, नयैः-யுக்திகளால்(உண்டாகும்) ऐक्यावबोधेन-அபேத ஞானத்தால், सम्यग्ज्ञानं-தத்வஞானம், दृढं—உறுதியாகி, यस्य-எவனுக்கு, अहं ब्रह्म इति—நான் ப்ரஹ்மம், என்ற विज्ञानं – ஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறதோ, असौ-அவன், शोकं-பிறவித் துன்பத்தை, तरति = தாண்டுகிறான்.

இவ்வாறு பல யுக்திகளைக்கொண்டு மஹாவாக்யார்த்தத்தை நன்கு ஆராய்ந்து பார்த்தோமானால், ஜீவஸ்வரூபமும் ஈச்வரஸ்வரூபமும் ஒன்று என்ற அபேத ஞானம் ஏற்பட்டு இதை அப்யாஸம் செய்வதால் தத்வஞானம் உறுதிப்பட்டு 'நானே ப்ரஹ்மம்' என்ற ஸாக்ஷாத்காரம் ஏற்படும். அவனுக்கு ஸம்ஸாரத்தாலுண்டாகும் துன்பம் நீங்கிவிடும்.

(அ) ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு குருவின் உபதேசத்தை முக்ய ஸாதனமாகக் கூறுகிறார் :—

आत्मा प्रकाशमानोऽपि महावाक्यैस्तथैकता ॥ ४३ ॥
तत्त्वमोर्बोध्यतेऽथापि पौर्वापर्यानुसारतः ।
तथापि शक्यते नैव श्रीगुरोः करुणां विना ॥ ४४ ॥
अपरोक्षयितुं लोके मूढैः पण्डितमानिभिः ।

ஆத்மா ப்ரகாஶமானோऽபி மஹாவாக்யைஸ் ததைகதா ॥

தத்த்வமோர் போத்யதேऽதாபி பௌர்வாபர்யானுஸாரத: ।
ததாபி ஶக்யதே நைவ ஸ்ரீகுரோ: கருணாம் விநா ॥

அபரோக்ஷயிதும் லோகே மூடை: பண்டிதமானிபி: ।

**आत्मा** - ஆத்மா, **प्रकाशमानोऽपि** - விளங்கியபோதிலும், **तथा**–அப்படியே, **महावाक्यैः**–மஹா வாக்யங்களால், **पौर्वापर्यानुसारतः** - முன்னும் பின்னும் சொல்லியிருக்கும் விஷயத்தை அனுஸரித்து, **तत्त्वमोः** — தத்பதார்த்தமான ஈசுவரனுக்கும் த்வம்பதார்த்தமான ஜீவனுக்கும், **एकता**–அபேதம், **बोध्यते** **अथापि** — அறிவிக்கப்படுகிறதாயிருந்த போதிலும், **तथापि**-அவ்விதமிருந்தபோதிலும், **लोके**-உலகில், **पण्डितमानिभिः**–பண்டிதர் என்ற கர்வம்கொண்ட, **मूढैः**-மூடர்களால், **श्रीगुरोः**-ஸத்குருவின், **करुणां** **विना**-கருணை இல்லாமல், **अपरोक्षयितुं**-நேரில் அறிந்துகொள்வதற்கு, **नैव** **शक्यते**-முடியாது.

ஸ்வயம்ப்ரகாசமான ஆத்மவஸ்து எல்லோருக்கும் விளங்கிக்கொண்டுதான் இருக்கிறது. மஹாவாக்யங்களை முன் பின் நன்கு ஆராய்ந்து பார்த்தோமானால் தத்பதார்த்த மான ஈசுவர ஸ்வரூபமும் த்வம்பதார்த்தமான ஜீவஸ்வரூப மும் ஒன்றுதான் என்பதும் தெரிகிறது. ஆனாலும் எல்லாம் பரோக்ஷமாக இருக்கிறதே தவிற ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படுவதில்லை. எவர் ஸத்குருவைத் தேடியடைந்து சரணம் அடைகின்றனரோ, எவரிடம் கருணைபுரிந்து குரு உபதேசம் செய்கிருரோ அவருக்குத்தான் ஆத்மாநுபவம் ஏற்படும். இது ஏற்படாதவரை எத்தனை சாஸ்திரங்கள் வாசித்தபோதிலும், உலகம் இவனைப் பண்டிதர் என்று சொன்னபோதிலும், நான் மஹாபண்டிதன் என்று எண்ணி கர்வம் அடைந்தபோதிலும் அவன் மூடன்தான். (44½)

**अन्तःकरणसंशुद्धौ स्वयं ज्ञानं प्रकाशते ॥ ४५ ॥**

**वेदवाक्यैरतः किं स्यात् गुरुणेति न सांप्रतम् ।**

அந்தக்கரண ஸம்ஶுத்தௌ ஸ்வயம் ஞானம் ப்ரகாஶதே ||
வேதவாக்யைரத: கிம் ஸ்யாத் குருணேதி ந ஸாம்ப்ரதம் |

**अन्तःकरणसंशुद्धौ**-மனமானது பரிசுத்தமாக ஆனதும், **वेदवाक्यैः**-உபநிஷத் வாக்யங்களால், **ज्ञानं**-ஞானமானது, **स्वयं**-தானகவே, **प्रकाशते**-ப்ரகாசிக்கிறது. **अतः**-ஆகையால், **गुरुणा**-குருவினுல், **किं स्यात्**-என்ன பிரயோஜனம் ஏற்படும், **इति**-என்பது, **न सांप्रतम्**-உசிதம் இல்லை.

வேதாத்யயனம் செய்து சாஸ்திரங்களையும் நன்கு அப்யஸித்து கர்மானுஷ்டானமும் செய்துவந்தால் மனது பரிசுத்தமாகும். அவன் உபநிஷத் வாக்யங்களின் அர்த்தத்தை நன்கு பரிசீலனம் செய்தால் தனது புத்தித் திறமையாலும் சாஸ்திர ஞானத்தாலும் தானகவே ஆத்ம ஞானம் ஏற்பட்டுவிடும். ஆகையால் குரு தேவையில்லையே! அவரால் என்ன பிரயோஜனம் என்று சிலர் கூறுகிறுர்கள். இவர்கள் சொல்வது யுக்தமல்ல. (45½)

(அ) குரு அவச்யம் என்பதற்கு உபநிஷத் ப்ரமாணத்தைக் காட்டுகிறுர்:—

**आचार्यवान् पुरुषो हि वेदेत्येवं श्रुतिर्जगौ ॥ ४६ ॥**
**अनादाविह संसारे बोधको गुरुरेव हि ।**

ஆசார்யவான் புருஷோ ஹி வேதேத்யேவம் ச்ருதிர் ஜகௌ ||
அநாதாவிஹ ஸம்ஸாரே போதகோ குருரேவ ஹி |

**आचार्यवान्**—ஆசார்யனுடன்கூடிய, **पुरुषः**—மனிதன், **वेद**—அறிந்துகொள்கிறுன், **इत्येवं**—என்று இவ்விதமாக, **श्रुतिः**-வேதம், **जगौ हि**-சொல்லியுள்ளது அல்லவா! (ஆகையால்), **अनादौ**-ஆரம்பமில்லாத, **इह संसारे** - இந்த ஸம்ஸாரத்தில், **बोधकः**-ஞானத்தைத்தருபவர், **गुरुरेव हि**-குருநாதன் அல்லவா.

சாந்தோக்ய உபநிஷத்தில் ஆருவது அத்யாயத்தில் (14-2) ச்வேதகேதுவுக்கு ஆருணி 'தத்த்வமஸி' மஹா

வாக்யத்தை உபதேசம் செய்யும் இடத்தில் 'ஆசார்யவான் புருஷோ வேத' என்னும் வாக்யம் காணப்படுகிறது. ஆசார்யரோடு கூடிய, அதாவது ஆசார்யரிடமிருந்து உபதேசம் பெற்றவர்தான் ஆத்மாவை அறிகிருன், அவனுக்குத்தான் ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்பது இந்த வாக்யத்தின் கருத்து. இது மட்டும் அல்ல. உலகானுபவமும் இவ்விதமே தான் இருக்கிறது. அனுதியான இந்த பிரபஞ்சத்தில் குரு தான் தத்வஞானத்தை உண்டுபண்ணுகிருர். குருவின் உபதேசம் இல்லாவிடில் ஞானம் ஏற்படுவதில்லை என்பது இதுவரையில் கண்ட அனுபவம். (46½)

(அ) குருவின் உபதேசம் பெற்றவன் செய்ய வேண்டியதைக் கூறுகிருர் :—

अतो ब्रह्मात्मवस्त्वैक्यं ज्ञात्वा दृश्यमसत्तया ॥ ४७ ॥
अद्वैते ब्रह्मणि स्थेयं प्रत्यग्ब्रह्मात्मना सदा ।

அதோ ப்ரஹ்மாத்ம வஸ்த்வைக்யம் ஞாத்வா த்ருச்யமஸத்தயா ॥
அத்வைதே ப்ரஹ்மணி ஸ்தேயம் ப்ரத்யக்ப்ரஹ்மாத்மநா ஸதா ।

अतः-ஆகையால், ब्रह्मात्मवस्त्वैक्यं - ப்ரஹ்மம், ஆத்மா இந்த வஸ்துக்களின் அபேதத்தை, ज्ञात्वा-(குருவின் உபதேசத்தால்) அறிந்து, दृश्यं-காணப்படும் பிரபஞ்சத்தை, असत्तया—பொய்யானதாக, ज्ञात्वा—அறிந்து, सदा—எப்பொழுதும், प्रत्यग्ब्रह्मात्मना-ஜீவாபின்ன ப்ரஹ்மஸ்வரூபமாக, अद्वैते ब्रह्मणि-அத்வைதமான ப்ரஹ்மத்தில், स्थेयम्-இருக்க வேண்டும்.

ச்ருதி, அனுபவம் இரண்டினுலும், குருவின் உபதேசம் பெருதவனுக்கு ஞானம் வராது என்று நிச்சயமாகத் தெரிகிறபடியால் குருவைத்தேடி அடைந்து அவருடைய உபதேசத்தால், காணப்படும் பிரபஞ்சம் பொய் என்பதையும், ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்று என்பதையும் தெரிந்து

கொண்டு, நானே ப்ரஹ்மம் என்ற பாவனையுடன் அத்வைத ப்ரஹ்மத்திலேயே மனதை நிலைநிறுத்தவேண்டும் அதாவது சிரவணமனனங்களுக்குப்பின் நிதித்யாஸனம் செய்ய வேண்டும். (47½)

(அ) உபநிஷத்தின் தாத்பர்யத்தைக் கூறுகிறார்:—

तत्प्रत्यक्षात्परिज्ञातमद्वैतब्रह्म चिद्घनम् ॥ ४८ ॥
प्रतिपाद्यं तदेवात्र वेदान्तैर्न द्वयं जडम् ।

தத்ப்ரத்யக்ஷாத் பரிஞாதம் அத்வைத ப்ரஹ்ம சித்கநம் ॥
ப்ரதிபாத்யம் ததேவாத்ர வேதாந்தைர் ந த்வயம் ஜடம் ।

**चिद्घनं**-ஞானஸ்வரூபமான, **तत्**-அந்த, **अद्वैतब्रह्म**-ஒன்றான ப்ரஹ்மம், **प्रत्यक्षात्**-பிரத்யக்ஷமாக, **परिज्ञातं**-அறியப்பட்டதாக ஆகிறது. **तदेव**-அதுதான், **अत्र**-இங்கு, **वेदान्तैः**-உபநிஷத்துக்களால், **प्रतिपाद्यं**-கருத்துடன் விளக்கத் தக்கது. **जडं**-ஜடமான, **द्वयं**-த்வைதம், **न**-இல்லை.

குருவின் உபதேசத்தாலும் மனனநிதித்யாஸனங்களாலும் முடிவில் அத்வைத ப்ரஹ்ம சைதன்ய ஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது. எல்லா உபநிஷத்துக்களுக்கும் இந்த ப்ரஹ்ம ஸ்வரூபத்தைக் கூறுவதில்தான் தாத்பர்யம். ஜடமான த்வைத ப்ரபஞ்சத்தைக் கூறுவதில் தாத்பர்யமில்லை. (48½)

(அ) சித்தையும் ஜடத்தையும் பிரித்துக் காட்டுகிறார்:—

सुखरूपं चिदद्वैतं दुःखरूपमसज्जडम् ॥ ४९ ॥
वेदान्तैस्तद्द्वयं सम्यक् निर्णीतं वस्तुतो नयात् ।

ஸுகரூபம் சிதத்வைதம் துக்கரூபமஸத் ஜடம் ॥
வேதாந்தைஸ் தத் த்வயம் ஸம்யக் நிர்ணீதம் வஸ்துதோ நயாத் ।

अद्वैतं-ஒன்ருன, चित्-சைதன்யம், सुखरूपं-ஆனந்த ரூபம். असत्-பொய்யான, जडं-ஜடப்பொருள், दुःखरूपम्-துக்கரூபம். तत् द्वयं-அவ்விரண்டும், नयात्-யுக்தியினுல், वस्तुतः-வஸ்து ஸ்வபாவத்தால், वेदान्तैः-உபநிஷத்துக்களால், सम्यक्—நன்ருக, निर्णीतम्—தீர்மானிக்கப்பட்டு இருக்கிறது.

சைதன்யம் ஒன்று, அதுவே ஸத்யம் ஆனந்தரூபம். ஜடமான பிரபஞ்சம் பொய், துக்கரூபம். இவ்விஷயம் பல யுக்திகளைக்கொண்டும் வஸ்து ஸ்வபாவத்தைக்கொண்டும் உபநிஷத்துக்களில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (49½)

(அ) ஸத்யாஸத்ய விவேசனம் செய்கிருர் :—

अद्वैतमेव सत्यं त्वं विद्धि द्वैतमसत्सदा ॥ ५० ॥
शुद्धे कथमशुद्धः स्यात् दृश्यं मायामयं ततः ।

அத்வைதமேவ ஸத்யம் த்வம் வித்தி த்வைதமஸத் ஸதா ॥
ஶுத்தே கதமஶுத்த: ஸ்யாத் த்ருச்யம் மாயா மயம் தத: ।

अद्वैतमेव-அத்வைதத்தையே, सत्यं-உண்மையாகவும், द्वैतं-த்வைதத்தை, असत्-பொய்யாகவும், सदा-எப்பொழுதும் त्वं-நீ, विद्धि-அறிந்துகொள். शुद्धे-சுத்தமான வஸ்துவில், अशुद्धः-அசுத்தமான பதார்த்தம், कथं स्यात्-எப்படி இருக்கும்? ततः-ஆகையால், दृश्यं-காணப்படும் பிரபஞ்சம், मायामयं-மாயையால் ஏற்பட்டது (பொய்யானது.)

அத்வைதமே உண்மை, த்வைதம் பொய். இது எப்பொழுதும் உள்ள உண்மை. ப்ரஹ்மம்தான் எல்லாவற்றிற்கும் ஆதாரம். பிரபஞ்சமும் ப்ரஹ்மத்தில்தான் இருக்கவேண்டும் வேறு இடத்தில் இருக்கமுடியாது. ப்ரஹ்மமோ பரிசுத்த வஸ்து. அதில் அசுத்தமான பிரபஞ்சம் எப்படி இருக்கக்கூடும்? ஆகவே காணப்படும் பிரபஞ்சம் பொய்தான். (50½)

(அ) பிரபஞ்சம் பொய் என்பதற்கு திருஷ்டாந்தம் கூறுகிருர் :—

शुक्तौ रूप्यं मृषा यद्वत्तथा विश्वं परात्मनि ॥ ५१ ॥
विद्यते न स्वतः सत्वं नान्यतः सत्वमस्ति हि ।

ஶுக்தௌ ரூப்யம் ம்ருஷா யத்வத் ததா விச்வம் பராத்மனி ॥
வித்யதே ந ஸ்வத: ஸத்வம் நாந்யத: ஸத்வமஸ்தி ஹி ।

**यद्वत्**-எப்படி, **शुक्तौ**-கிளிஞ்சலில், **रूप्यं**-வெள்ளி, **मृषा**-பொய்யாக உள்ளதோ, **तथा**-அப்படி, **विश्वं**-பிரபஞ்சம், **परात्मनि**-ப்ரஹ்மத்தில், **विद्यते**-(பொய்யாக) இருக்கிறது. (அதற்கு), **सत्वं**-உண்மை, **स्वतः**-தானுகவும், **न**-இல்லை. **अन्यतः**-மற்றவை மூலமாகவும், **सत्वं** உண்மை, **नास्ति हि**-கிடையாதல்லவா.

கிளிஞ்சலைப் பார்த்து ப்ராந்தியால் வெள்ளிஎன நினைக்கிருன். அவன் கண்ணுக்கு கிளிஞ்சல் தெரிவதில்லை. வெள்ளி தெரிகிறது. இந்த வெள்ளி உண்மையல்ல. பொய்யானது. இதற்குத் தானுகவும் ஸத்வம் கிடையாது. காரணத்திலுள்ள தர்மங்களை கார்யத்தில் காண்பதுபோல் வேருென்றின் மூலமாகவும் இதற்கு ஸத்வம் சொல்ல முடியாது. (51½)

(அ) 'பொய்' என்பதை விளக்கிக் கூறுகிருர் :—

बाध्यत्वान्नैव सद्द्वैतं नासत्प्रत्यक्षभानतः ॥ ५२ ॥
सदसन्न विरुद्धत्वादतोऽनिर्वाच्यमेव तत् ।

பாத்யத்வாத் நைவ ஸத் த்வைதம் நாஸத் ப்ரத்யக்ஷ பாநத:॥
ஸதஸத் ந விருத்தத்வாத் அதோऽநிர்வாச்யமேவ தத் ।

**द्वैतं**-வேற்றுமைகொண்ட பிரபஞ்சம், **बाध्यत्वात्**-மறைந்துபோவதால், **नैव सत्**-ஸத்தான (உண்மையான) பொருள் அல்ல. **प्रत्यक्षभानतः**-நேரில் தோன்றுவதால், **नासत्**-இல்லாத பொருளும் அல்ல. **विरुद्धत्वात्**-ஒன்றுக்கொன்று விருத்தமாயிருப்பதால், **न सदसत्** — ஸத்தாயும் அஸத்தாயும் உள்ள பொருளும் அல்ல. **अतः**-ஆகையால்,

तत् - அது, अनिर्वाच्यमेव - இன்னவிதம் என்று சொல்ல முடியாததுதான்.

கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியைக் கடையில் உள்ள வெள்ளியைப்போல் ஸத்வஸ்து (உண்மைப் பொருள்) எனக் கூறமுடியாது. ஏனெனில் 'இது கிளிஞ்சல்' என்ற உண்மை அறிவு ஏற்பட்டவுடன் இந்த வெள்ளி மறைந்துவிடுகிறது. உண்மைப் பொருளாயிருந்தால் ஞானத்தால் மறைந்து போகாது. இதை அஸத் (இல்லவே இல்லை) என்றும் கூற முடியாது. ஏனெனில் நேரில் அதை பார்க்கிறோம். இல்லாததை எப்படிப் பார்க்கமுடியும்? ஸதஸத் (இருப்பும் இல்லாமையும் கலந்தது) என்றும் கூறமுடியாது. ஏனெனில் இரண்டும் ஒன்றுக்கொன்று விருத்தமானது. ஸத்தாயிருந்தால் அஸத்தாக இருக்காது. அஸத்தாயிருந்தால் ஸத்தாக இருக்காது. ஆகவே அது இன்னவிதம் என்று கூற முடியாத பொருள். இதுதான் பொய் என்பதற்கு அர்த்தம். இதேபோல பிரபஞ்சமும் ப்ரஹ்மஞானத்தால் மறைந்துபோவதாலும், நேரில் தோன்றுவதாலும் ஸத்தாகவோ அஸத்தாகவோ கூறமுடியாமலிருப்பதால் அநிர்வசனீயம். அதாவது பொய். அத்வைத ஸித்தாந்தத்தில் மித்யா (பொய்) என்பதற்கு 'இல்லை' என்று பொருள் அல்ல. உண்மையல்ல என்பதுதான் பொருள். அதனால் அது தோன்றலாம். அதனால் லோகவியவஹாரமும் நடக்கலாம். ஆனாலும் அது உண்மையல்ல. (52½)

(அ) இவ்வாறு பிரபஞ்சம் பொய் என்பதை யுக்திகளால் காட்டி நீ ப்ரஹ்மம் தான் என்று குரு உபதேசிக்கிறார்:—

यः पूर्वमेक एवासीत्सृष्ट्वा पश्चादिदं जगत् ॥ ५३ ॥
प्रविष्टो जीवरूपेण स एवात्मा भवान् परः ।

ய: பூர்வமேக ஏவாஸீத் ஸ்ருஷ்ட்வா பச்சாதிதம் ஜகத் ॥
ப்ரவிஷ்டோ ஜீவரூபேண ஸ ஏவாத்மா பவான் பர: ।

यः-எது, पूर्वं-ஸிருஷ்டிக்கு முன்னால், एक एव-ஒன்றாகவே, आसीत्-இருந்ததோ, पश्चात्-பின்னால், इदं जगत्-

இந்த பிரபஞ்சத்தை, **सृष्ट्वा**-ஸிருஷ்டி செய்து, **जीवरूपेण**-ஜீவஸ்வரூபமாக, **प्रविष्टः**-(சரீரத்திற்குள்) நுழைந்திருக்கிறதோ, **सः**-அந்த, **परः आत्मा एव**-பரமாத்மாதான், **भवान्**-நீ.

ஸ்ருஷ்டிக்குமுன் ஒரே வஸ்துதான் இருந்தது அதற்கு ஸத் என்று பெயர். அது மாயையால் பிரபஞ்சத்தை ஸிருஷ்டிசெய்தது. தான் ஸிருஷ்டித்த சரீரத்திற்குள் புகுந்து அது ஜீவனாக ஆகிவிட்டது. ஆகவே முதலில் தான் ஒன்றாக இருந்ததும் பிரபஞ்சத்தை ஸிருஷ்டித்ததும், ஜீவ ஸ்வரூபமாக சரீரத்திற்குள் நுழைந்ததுமான அந்த பரமாத்மாதான் நீ என்று குரு சிஷ்யனுக்கு உபதேசிக்கிறார். (53½)

**सच्चिदानन्द एव त्वं विस्मृत्यात्मतया परम् ॥ ५४ ॥**

**जीवभावमनुप्राप्तः स एवात्मासि बोधतः ।**
**अद्वयानन्दचिन्मात्रः शुद्धः साम्राज्यमागतः ॥ ५५ ॥**

ஸச்சிதானந்த ஏவ த்வம் விஸ்ம்ருத்யாத்மதயா பரம் ॥

ஜீவபாவமனுப்ராப்த: ஸ ஏவாத்மாஸி போதத: ।
அத்வயானந்த சின்மாத்ர: ஶுத்த: ஸாம்ராஜ்யமாகத: ॥

**त्वं**-நீ, **सच्चिदानन्द एव**-ஸச்சிதானந்தமான பரப்ரஹ்மம் தான். **आत्मतया**-உன் ஆத்மாவாக இருக்கும், **परं**-பரப்ரஹ்மத்தை, **विस्मृत्य**-மறந்து, **जीवभावं**-ஜீவத்தன்மையை, **अनुप्राप्तः**— அடைந்துவிட்டாய். (இப்பொழுது) **बोधतः**-ஞானத்தால், **अद्वयानन्दचिन्मात्रः**— இரண்டற்றதும் ஆனந்தத்தையும் ஞானத்தையுமே ஸ்வரூபமாகக் கொண்டதும் **शुद्धं**-பரிசுத்தமானதுமான, **स एव आत्मा**-அந்தப் பரமாத்மாவாகவே, **असि**-இருக்கிறாய். **साम्राज्यं**-மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை, **आगतः**-அடைந்துவிட்டாய்.

நீ உண்மையில் ஸச்சிதானந்தஸ்வரூபம்தான். பரமாத்மாதான் உன் ஸ்வரூபம். ஆனாலும் இதை மறந்து

தேஹாதிகளுடன் சேர்ந்து ஜீவனுக ஆய்விட்டாய். இப்பொழுது உண்மையை அறிந்து ஜீவபாவத்தை மறந்து பரமாத்மஸ்வரூபமாக இருக்கிருய். இது இரண்டற்றது. ஞானமும் ஆனந்தமுமே அதன் ஸ்வரூபம், பரிசுத்த வஸ்து. இப்பொழுது இந்த ஸ்வரூபமாக விளங்குவதால் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடைந்துவிட்டாய். (54-55)

(அ) ஸச்சிதானந்த வஸ்துவில் கர்த்ருத்வாதி தர்மங்கள் ஏற்பட்ட விதத்தை சாங்தோக்யத்தில் உள்ள கதையைக் கூறி விவரிக்கிருர் :—

**कर्तृत्वादीनि यान्यासंस्त्वयि ब्रह्माद्वये परे ।**
**तानीदानीं विचार्यन्ते किंस्वरूपाणि वस्तुतः ॥ ५६ ॥**

கர்த்ருத்வாதீனி யாங்யாஸம் ஸ்த்வயி ப்ரஹ்மாத்வயே பரே ।
தாநீதாநீம் விசார்யந்தே கிம்ஸ்வரூபாணி வஸ்துத: ॥

**ब्रह्माद्वये** — இரண்டற்ற ப்ரஹ்மமாயும், **परे** – எல்லாவற்றிற்கும் மேல்பட்டவனுயும் உள்ள, **त्वयि**-உன்னிடத்தில் **कर्तृत्वादीनि**–கர்த்ருத்வம் முதலிய, **यानि**–எந்த தர்மங்கள், **आसन्**-இருந்தனவோ, **तानि**-அவைகள், **वस्तुतः**–உண்மையில், **किंस्वरूपाणि**-எத்தகைய ஸ்வரூபமுள்ளவை என்று, **इदानीं**–இப்பொழுது, **विचार्यन्ते**-விசாரிக்கப்படுகின்றன.

உண்மையில் நீ அத்விதீயமான ப்ரஹ்ம வஸ்துவாயிருந்தாலும் இதுவரை உன்னிடம் கர்த்ருத்வாதி தர்மங்கள் இருந்தன. தன்னைக் கர்த்தாவாகவும், போக்தாவாகவும் எண்ணிக்கொண்டிருந்தாய். இவைகளின் உண்மை ஸ்வரூபத்தையும், இவை வந்தவிதத்தையும் விசாரிப்போம். (56)

**अत्रैव शृणु वृत्तान्तमपूर्वं श्रुतिभाषितम् ।**

அத்ரைவ ச்ருணு வ்ருத்தாந்த மபூர்வம் ச்ருதிபாஷிதம் ।

**अत्रैव** – இவ்விஷயத்திலேயே, **श्रुतिभाषितं**– உபநிஷத்தில் கூறப்பட்ட, **अपूर्वं** – புதியதான, **वृत्तान्तं**–கதையை, **शृणु**-கேள்.

இந்த விஷயத்தில் சாந்தோக்ய உபநிஷத்தில் ஆருவது அத்யாயத்தில் ஆருணி ச்வேதகேதுவுக்கு தத்வமஸி மஹா வாக்யத்தை உபதேசிக்கும்பொழுது சொன்ன கதையைச் சொல்கிறேன். கேள். (56¼)

कश्चिद्गान्धारदेशीयो महारत्नविभूषितः ॥ ५७ ॥
स्वगृहे स्वाङ्गणे सुप्तः प्रमत्तः सन् कदाचन ।

கச்சித் காந்தார தேஶீயோ மஹாரத்ந விபூஷித: ॥
ஸ்வக்ருஹே ஸ்வாங்கணே ஸுப்த: ப்ரமத்த: ஸன் கதாசந ।

**कदाचन**-ஒரு சமயம், **गान्धारदेशीयः**-காந்தார தேசத்தில் வஸிக்கும், **कश्चित्**-ஒருவன், **महारत्नविभूषितः**-சிறந்த ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டவனுக, **स्वगृहे**-தன் வீட்டில், **स्वाङ्गणे**-தன் அறையில், **प्रमत्तः सन्**-கவனக் குறைவுள்ளவனுய்க்கொண்டு, **सुप्तः**-தூங்கினுன்.

ஒரு சமயம் காந்தாரம் என்னும் தேசத்தில் பெரிய தனிகன் ஒருவன் விலையுயர்ந்த ரத்னுபரணங்களாலும் தங்க நகைகளாலும் தன்னை அலங்கரித்துக்கொண்டு தன் வீட்டில் தன் அறையில் இரவில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். அஜாக்ரதையால் வீட்டில் சரியாக பந்தோபஸ்து செய்து கொள்ளாமல் தூங்கினுன். (57½)

रात्रौ चोरैः समागत्य भूषणानां प्रलोभितैः ॥ ५८ ॥

बध्वा देशान्तरं चोरैर्नीतः सन् गहने वने ।
भूषणान्यपहृत्यापि बद्धाक्षकरपादकः ॥ ५९ ॥

निक्षिप्तो विपिनेऽतीव कुशकण्टकवृश्चिकैः ।
व्याळव्याघ्रादिभिश्चैव संकुले तरुसंकटे ॥ ६० ॥

ராத்ரௌ சோரை: ஸமாகத்ய பூஷணுனும் ப்ரலோபிதை: ॥

பத்த்வா தேசாந்தரம் சோரைர் நீத: ஸன் கஹனே வநே ।
பூஷணுந்யபஹ்ருத்யாபி பத்தாக்ஷ கர பாதக: ॥

நிக்ஷிப்தோ விபிநேऽதீவ குஶ கண்டக வ்ருச்சிகை: ।
வ்யாள வ்யாக்ராதிபிச்சைவ ஸங்குலே தருஸங்கடே ॥

**रात्रौ**-இரவில், **भूषणानां प्रलोभितैः**-நகைகளில் பேராசை கொண்ட, **चोरैः**-திருடர்களால், **समागत्य**-வந்து, **बध्वा**-கட்டி, **देशान्तरं नीतः सन्**-வேறு தேசத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டவனுய்க் கொண்டு, **गहने वने**-உட்புகமுடியாத அடர்ந்தகாட்டில், **भूषणानि**-நகைகளை, **अपहृत्यापि**-திருடியும் **चोरैः**— திருடர்களால், **बद्धाक्षकरपादकः** — கண்கள், கை, கால்கள் கட்டப்பட்டவனுய், **अतीव**-மிகவும், **कुशकण्टक-वृश्चिकैः**-தர்ப்பை, முள், தேள் இவைகளாலும், **व्याळव्याघ्रादि-भिश्चैव**-பாம்பு, புலி முதலியவைகளாலும், **संकुले**-நிறைந்ததும், **तरुसंकटे** மரங்கள் நிறைந்ததுமான, **विपिने**-காட்டில் **निक्षिप्तः**-தள்ளப்பட்டான்.

அன்று இரவில் அந்த வீட்டிற்குள் பல திருடர்கள் புகுந்து, நகைகளை உடம்பில் அணிந்துகொண்டு இவன் அயர்ந்து தூங்குவதைப் பார்த்து, அந்த நகைகளைத் தாம் அடையவேண்டும் என்ற பேராசையால் தூண்டப்பட்டு, கயிற்ருல் அவனைக்கட்டி, கை கால்களையும் கண்களையும் கட்டி, வேறு தேசத்திலுள்ள பயங்கரமான காட்டிற்கு எடுத்துச் சென்று, நகைகளையெல்லாம் அவனிடமிருந்து பறித்துக்கொண்டு புலி, பாம்பு, தேள், முள், தர்ப்பை முதலியவை நிறைந்ததும் மரங்களால் அடர்த்தியானதுமான அந்த நடுக் காட்டில் அவனை அப்படியே விட்டு விட்டுத்திருடர்கள் தம் இடம் சென்றனர். (58-60)

**व्यालादिदुष्टसत्वेभ्यो महारण्ये भयातुरः ।**
**शिलाकण्टकदर्भाद्यैर्देहस्य प्रतिकूलकैः ॥ ६१ ॥**
**क्रियमाणे विलुठने विशीर्णाङ्गोऽसमर्थकः ।**
**क्षुत्तृडातपवाय्वग्न्यादिभिस्तमोऽतितापकैः ॥ ६२ ॥**
**बन्धमुक्तौ तथा देशप्राप्तावेव सुदुःखधीः ।**
**ददृशे कंचिदाक्रोशन्नेकं तत्रैव तस्थिवान् ॥ ६३ ॥**

வ்யாளாதி துஷ்ட ஸத்வேப்யோ மஹாரண்யே பயாதுர: |
ஶிலா கண்டக தர்ப்பாத்யைர் தேஹஸ்ய ப்ரதிகூலகை: ||

க்ரியமாணே விலுடநே விஶீர்ணாங்கோऽஸமர்த்தக: |
க்ஷுத் த்ருடாதப வாய்வக்ந்யாதிபிஸ் தப்தோऽதிதாபகை: ||

பந்த முக்தௌ ததா தேஶ ப்ராப்தாவேவ ஸுதுக்கதீ: |
தத்ருஶே கஞ்சிதாக்ரோஶன் ஏகம் தத்ரைவ தஸ்திவான் ||

**महारण्ये**–பெரிய காட்டில், **व्यालादिदुष्टसत्वेभ्यः**–பாம்பு முதலான துஷ்ட பிராணிகளிடமிருந்து, **भयातुरः**–பயத்தால் துன்பமடைந்தவனாய், **विलुठने क्रियमाणे** – புரளும்பொழுது **देहस्य**–உடலுக்கு, **प्रतिकूलकैः**–தீங்கு விளைவிக்கின்ற, **शिला-कण्टकदर्भाद्यैः** — கல், முள், தர்ப்பை முதலியவைகளால், **विशीर्णाङ्गः** – சிதைந்த அவயவங்களை உடையவனாக, **असमर्थकः**-பலமில்லாதவனாய், **अतितापकैः**-மிகுந்த தாபத்தைக் கொடுக்கும், **क्षुत्तृडातपवाय्वग्न्यादिभिः**–பசி, தாகம், வெய்யில், காற்று, நெருப்பு முதலியவைகளால், **तप्तः** — துன்பம் அடைந்தவனாய், **सुदुःखधीः** — மனத்தில் மிகுந்த துக்கம் அடைந்தவனாக, **बन्धमुक्तौ**–கட்டிலிருந்துவிடுபடவும், **तथा**–அவ்விதமே, **देशप्राप्तावेव**—தன் தேசத்தை அடைவதற்காகவுமே, **कंचित् एकं**–யாராவது ஒருவரைக் குறித்து, **आक्रोशन्** – கத்திக்கொண்டு, **तत्रैव**–அங்கேயே, **तस्थिवान्**–இருந்தவனாக, **ददृशे**–காணப்பட்டான்.

நடுக்காட்டில் தனியாக விடப்பட்ட அந்த காந்தார தேச புருஷனுக்கு தேள், பாம்பு கடித்துவிடுமோ, அல்லது புலி, சிங்கம் முதலான கொடிய மிருகங்கள் கொன்று விடுமோ என்று மனதில் மிகுந்த பயமேற்பட்டுவிட்டது. கைகால்கள் கட்டப்பட்டிருப்பதால் படுத்தபடியே அங்கு மிங்கும் புரளும்பொழுது கல்களும், முள்களும், கூர்மையான தர்ப்பைகளும் உடலில்பட்டு சிராய்த்து ரக்தம்பெருகி, ஒவ்வொரு அவயவத்திலும் மிகுந்த வலியுடன் உடல் சோர்ந்து பலம் குன்றிவிட்டது. இத்துடன் பசி ஒரு பக்கம்

தாகம் ஒரு பக்கம் சேர்ந்துவிட்டது. மேலே வெய்யில், சூறுவளிக்காற்று, காட்டுத்தீ எல்லாம் சேர்ந்து பொறுக்க முடியாத துன்பங்களால் வாடி வதங்கிவிட்டான். கட்டு அவிழ்ந்து தன் ஊர் போய்ச்சேர்வதைத் தவிற வேறு ஒன்றிலும் அவன் மனம் செல்லவில்லை. யாராவது இரக்க முள்ள ஒரு மஹாத்மா தற்செயலாக அங்குவந்து தான்படும் துன்பங்களைக்கண்டு மனம் இரங்கி தன் கட்டுக்களை அவிழ்த்து தன் ஊருக்கு அழைத்துச்செல்லமாட்டாரா என்று எண்ணினுன். தான் நடுக்காட்டில் தனியாக இருப்பது பிறருக்குத் தெரிவதற்காக " திருடர்களால் கை, கால்கள், கண்கள் கட்டப்பட்டு நடுக்காட்டில் தனியாக விடப்பட்டுத் தவிக்கிறேன். என்னைக் காப்பாற்றுங்கள் " என்று இரைந்து கத்திக் கதறுகிருன். *(61–63)*

**तथा रागादिभिर्वर्गैः शत्रुभिर्दुःखदायिभिः ।**
**चोरैर्देहाभिमानाद्यैः स्वानन्दधनहारिभिः ॥ ६४ ॥**

**ब्रह्मानन्दे प्रमत्तः स्वाज्ञाननिद्रावशीकृतः ।**
**बद्धस्त्वं बन्धनैर्भोगतृष्णाज्वरादिभिर्दृढम् ॥ ६५ ॥**

ததா ராகாதிபிர் வர்கை: ஶத்ருபிர் து:க்கதாயிபி: ।
சோரைர் தேஹாபிமாநாத்யை: ஸ்வானந்த தநஹாரிபி: ॥

ப்ரஹ்மானந்தே ப்ரமத்த: ஸ்வாஞான நித்ரா வஶீக்ருத: ।
பத்தஸ்த்வம் பந்தனைர் போக த்ருஷ்ணு ஜ்வராதிபிர் த்ருடம் ॥

**तथा**-அவ்விதமே, **ब्रह्मानन्दे**-ப்ரஹ்மானந்தத்தில், **प्रमत्तः**-கவனக் குறைவுள்ளவனுகவும், **स्वाज्ञाननिद्रावशीकृतः**–தன் அக்ஞானம் என்னும் நித்ரைக்கு வசமாக்கப்பட்டவனுகவும் உள்ள, **त्वं**-நீ, **दुःखदायिभिः**–துன்பத்தைத் தருகின்ற **रागादिभिः**–ஆசை முதலிய, **शत्रुभिः वर्गैः**-எதிரிக் கூட்டங் களாலும், **स्वानन्दधनहारिभिः**–தன் ஆனந்தம் என்னும் பணத்தைப் பறிக்கின்ற, **देहाभिमानाद्यैः**-தேஹத்தில் அபிமானம் முதலிய, **चोरैः**-திருடர்களாலும், **भोगतृष्णा**-

ஜ்வராதிபி:-போகங்களில் ஆசை, தாபம் முதலிய, பந்தனை:-கட்டுகளால், த்ருடம்-உறுதியாக, பத்த:-கட்டப்பட்டிருக்கிறாய்.

காந்தார புருஷனின் நிலைமையை திருஷ்டாந்தமாகக் கூறி இந்த பிரபஞ்சத்தில் ஸம்ஸாரிகள் ஒவ்வொருவரும் அவனுடைய நிலையிலேயே இருப்பதாகக் காட்டுகிறார். அவன் விலையுயர்ந்த சிறந்த ரத்னங்களை அணிந்துகொண்டு அதில் கவனக் குறைவாக இருந்ததுபோல நாமும் நம்மிடமுள்ள உயர்ந்த ப்ரஹ்மானந்தத்தில் கவனக்குறைவாக இருக்கிறோம். அவனுக்குத் தூக்கத்தால் ரத்னத்தில் கவனமில்லாமல் இருந்தது. நாம் நம் ஸ்வரூபத்தை அறியாமலிருப்பது என்ற தூக்கத்திற்கு வசமாகிவிட்டபடியால் ப்ரஹ்மானந்தத்தில் நமக்கு ஞாபகமே இல்லை. நம்மிடம் ப்ரஹ்மானந்தம் இருந்தும் நம் ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாததால் ப்ரஹ்மானந்தம் நமக்குத் தெரியவில்லை. இந்த நிலையில் இந்த ஆனந்தம் என்னும் ரத்னத்தைத் திருடுவதற்காக தேஹாபிமானம் முதலிய திருடர்கள் நம்மிடம் வருகின்றனர். காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்ற ஆறு பேர்களும் நமக்கு எதிரிகள். இவர்களை அரிஷட்வர்க்கம் எனக்கூறுவார்கள். இவர்கள் எப்பொழுதும் நமக்குத் துன்பம் செய்கின்றனர். இவர்கள்தான் திருடர்களை அனுப்புகின்றனர். இந்தத் திருடர்கள் நம்மிடம் வந்து விஷயங்களை அனுபவிப்பதில் ஆசை, தாபம் முதலிய கயிறுகளால் உறுதியாக நம்மைக் கட்டி விட்டனர். அதாவது நாம் ஆத்ம வஸ்துவைத் தெரிந்துகொள்ளவில்லை. அக்ஞானத்தால் நம்மிடமுள்ள ப்ரஹ்மானந்தம் நமக்குத் தெரியவில்லை. அக்ஞானத்தால் உலகைப் பலவாறாகக் காண்பதால், விருப்பம், கோபம், பேராசை, மதிமயக்கம், கர்வம், அஸூயை, முதலான தோஷங்கள் நம்மிடம் குடிகொள்கின்றன. தேஹம், மனைவி, புத்ரன், பணம் இவற்றில் அபிமானம் நிலைக்கிறது. இந்த அபிமானத்தால் விஷயங்களைத் தேடிச்சேர்த்து இந்த இன்பத்தை நுகரவேண்டும் என்ற ஆசையால் இதிலேயே முழுவதும் ஈடுபட்டு நிற்கிறோம். உலக விஷயங்களில் நாம் கட்டுப்பட்டுவிட்டோம். (64-65)

अद्वयानन्दरूपात्त्वां प्रच्याव्यातीव धूर्तकैः ।
दूरनीतोऽसि देहेषु संसारारण्यभूमिषु ॥ ६६ ॥

அத்வயாநந்த ரூபாத் த்வாம் ப்ரச்யாவ்யாதீவ தூர்த்தகை:।
தூர நீதோऽஸி தேஹேஷு ஸம்ஸாராரண்ய பூமிஷு ॥

धूर्तकैः - வஞ்சகர்களான காமன் முதலியவர்களால், अद्वयानन्दरूपात्-பேதமில்லாத ஆனந்த ஸ்வரூபத்திலிருந்து, त्वां-உன்னை, अतीव-மிகவும் प्रच्याव्य – நழுவும்படிசெய்து, संसारारण्यभूमिषु–ஸம்ஸாரம் என்ற காட்டுப் பிரதேசங்களில், देहेषु–சரீரங்களில், दूरनीतोऽसि-வெகு தூரம் எடுத்துச் செல்லப்பட்டிருக்கிறாய்.

தன் ஊரில் தன் வீட்டில் ஸுகமாகத் தூங்கிக் கொண்டிருந்த புருஷனை வெகு தூரத்திலுள்ள காட்டிற்குத் திருடர்கள் எடுத்துச் சென்றதுபோல வஞ்சகர்களான காமாதிகள் எல்லோரும் சேர்ந்து, உண்மையில் நீ பரமானந்த ஸ்வரூபமாக இருந்தும் அதை மறக்கச் செய்து ஸம்ஸாரம் என்னும் பெரிய காட்டிற்கு உன்னைக் கொண்டு வந்து விட்டனர். ஸம்ஸாரநிலையும் மோக்ஷ நிலையும் ஒன்றுக்கொன்று நேர் எதிரிடையானதால் வெகு தொலைவில் உள்ளதாகக் கூறுகிறார். (66)

सर्वदुःखनिदानेषु शरीरादित्रयेषु च ।
नानायोनिषु कर्मान्धवासनानिर्मितासु च ॥ ६७ ॥

प्रवेशितोऽसि सृष्टोऽसि बद्धस्वानन्ददृष्टितः ।

ஸர்வ துக்க நிதானேஷு ஶரீராதி த்ரயேஷு ச ।
நாநா யோநிஷு கர்மாந்த வாஸநா நிர்மிதாஸு ச ॥

ப்ரவேஶிதோऽஸி ஸ்ருஷ்டோऽஸி பத்த ஸ்வாநந்த த்ருஷ்டித:।

सर्वदुःखनिदानेषु-எல்லாத்துன்பங்களுக்கும் மூல காரணமான, शरीरादित्रयेषु च-ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று சரீரங்களிலும், कर्मान्धवासनानिर्मितासु -

கர்மாக்களைச் செய்வதால் ஏற்பட்ட ஸூக்ஷ்மமான ஸம்ஸ்காரம் என்னும் வாஸனையால் உண்டுபண்ணப்பட்ட, **नानायोनिषु च**–மற்றும் பல பிறவிகளிலும், **प्रवेशितोऽसि**– நுழையும்படி செய்யப்பட்டிருக்கிறாய். **बद्धस्वानन्ददृष्टितः**– தன் ஸ்வரூபமான ஆத்மானந்த த்ருஷ்டி மறைக்கப்பட்டு விட்டதால், **सृष्टोऽसि**–ஸிருஷ்டிக்கப்பட்டவனாக இருக்கிறாய்.

ஸம்ஸாரம் என்னும் காட்டில் சரீரம் என்னும் குஹையில் ஜீவனை அடைத்துவிட்டனர். இந்தச் சரீரம் தான் எல்லாத் துன்பங்களுக்கும் இருப்பிடம். இதில் ஸ்தூலம் ஸூக்ஷ்மம், காரணம் என்று மூன்று சரீரங்கள் இருப்பதால் எளிதாக வெளியில் வரமுடியாது. தான் ஆனந்த ரூபன் என்ற உண்மை அறிவு மறைக்கப்பட்டு விட்டது. சரீராதிகளில் நான் என்ற அபிமானம் வேரூன்றி விட்டது. சரீரத்தால் பற்பலவிதமான கர்மாக்களைச் செய்கிறான். இந்தக் கர்மாக்கள் ஸூக்ஷ்ம ரூபமாக இவன் மனதில் இருந்து கொண்டு மேலும் மேலும் பலவிதமான பிறவிகளைக்கொடுத்துக்கொண்டே இருக்கின்றன. இந்த சரீரம் போனால் வேறொரு சரீரம்; அதுபோனால் மற்றொரு சரீரம்; இவ்விதம் முடிவில்லாமல் பரம்பரையாக சரீரம் வந்துகொண்டேயிருக்கிறது. (67½)

अनादिकालमारभ्य दुःखं चानुभवन्सदा ॥ ६८ ॥

जन्ममृत्युजरादोषनरकादिपरम्पराम् ।
निरन्तरं विषण्णोऽनुभवन्नत्यन्तशोकवान् ॥ ६९ ॥

அநாதிகாலமாரப்ய துக்கம் சானுபவன் ஸதா ॥

ஜன்மம்ருத்யு ஜரா தோஷ நரகாதி பரம்பராம் ।
நிரந்தரம் விஷண்ணோ நுபவன்னத்யந்தஶோகவான் ॥

**अनादिकालमारभ्य**–அநாதிகாலமாக, **सदा**–எப்பொழுதும் **दुःखं** – துன்பத்தை, **अनुभवन्** – அனுபவித்துக் கொண்டும், **जन्ममृत्युजरादोषनरकादिपरम्पराम्** - பிறவி, மரணம், மூப்பு, ராகத்வேஷாதி தோஷங்கள், நரகம் முதலியவைகளின்

பரம்பரையை, अनुभवन् च – அனுபவித்துக் கொண்டும், अत्यन्तशोकवान्–மிகுந்த சோகத்துடன் கூடியவனாக, निरन्तरं- இடைவிடாமல், विषण्णः–வருந்தியவனாக இருக்கிறாய்.

நமக்கு இந்த பிறவித் துன்பம் எப்பொழுது முதன் முதலில் ஆரம்பித்தது என்பதை யாரும் சொல்லமுடியாது. அனாதிகாலமாக அநுபவித்து வருகிறோம். இதற்கு முடிவே இல்லை. ஒன்று போனால் மற்றொன்று வந்து விடுகிறது. பிறவியே துக்கம், பிறகு பால்ய யௌவனாதிகளில் துக்கம், பிறகு மூப்பு, மரணம். சரீரத்தை விட்டுச் சென்றால் நரகம், மறுபடியும் வேறொரு சரீரத்துடன் பிறப்பு. இவ்வாறு பரம்பரையாக வெகு காலமாக சோகத்தால் மிகவும் துன் புறுகிறான். (68-69)

**अविद्याभूतबन्धस्य निवृत्तौ दुःखदस्य च ।**
**स्वरूपानन्दसंप्राप्तौ सत्योपायं न लब्धवान् ॥ ७० ॥**

அவித்யாபூத பந்தஸ்ய நிவ்ருத்தௌ துக்கதஸ்ய ச ।
ஸ்வரூபானந்த ஸம்ப்ராப்தௌ ஸத்யோபாயம் ந
லப்தவான் ॥

दुःखदस्य–துன்பத்தைத் தருகின்ற, अविद्याभूतबन्धस्य– அக்ஞானத்தால் ஏற்பட்ட கட்டு, निवृत्तौ – விலகவும், स्वरूपानन्दसंप्राप्तौ च–தன் ஸ்வரூபமான ஆனந்தத்தை அடையவும், सत्योपायं – உண்மையான உபாயத்தை, न लब्धवान्–அடையவில்லை.

மிகுந்த துக்கத்தைக் கொடுக்கும் ஸம்ஸாரபந்தம் விலக நமக்குத் தெரிந்த உபாயங்களைச் செய்து பார்க்கிறோம். மேலும் துன்பம் பெருகுகிறதே தவிற குறைவதாகக்காணோம் உண்மையாயிருந்தால் ஏதாவது உபாயத்தால் நீங்கும். இதுவோ அக்ஞானத்தால் ஏற்பட்டது. ஆகவே பந்தம் விலகவும் நம் ஸ்வரூபமான நித்யானந்தத்தை அடையவும் உண்மையான உபாயத்தை நாம் தெரிந்து கொள்ள வில்லை. (70)

(அ) இவ்வாறு காந்தார புருஷ திருஷ்டாந்தத்தையும் ஸம்ஸாரியின் நிலையையும் காட்டி திருஷ்டாந்தத்தில் அவன் ஊர் போய் ஸ்வஸ்தன் ஆவதைக் கூறுகிறுர்:—

यथा गान्धारदेशीयश्चिरं दैवाद्दयालुभिः ।
कैश्चित्पान्थैः परिप्राप्तैर्मुक्तदृष्ट्यादिबन्धनः ॥ ७१ ॥

स स्वस्थैरुपदिष्टश्च पण्डितो निश्चितात्मकः ।
ग्रामाद्ग्रामान्तरं गच्छन् मेधावी मार्गतत्परः ॥ ७२ ॥

गत्वा गान्धारदेशं स स्वगृहं प्राप्य पूर्ववत् ।
बान्धवैः संपरिष्वक्तः सुखी भूत्वा स्थितोऽभवत् ॥ ७३ ॥

யதா காந்தார தேஶீய: சிரம் தைவாத் தயாளுபி: ।
கைச்சித் பாந்தை: பரிப்ராப்தை: முக்த த்ருஷ்ட்யாதி பந்தன: ॥

ஸ ஸ்வஸ்தைருபதிஷ்டச்ச பண்டிதோ நிச்சிதாத்மக: ।
க்ராமாத் க்ராமாந்தரம் கச்சன் மேதாவீ மார்கதத்பர: ॥

கத்வா காந்தாரதேஶம் ஸ ஸ்வக்ருஹம் ப்ராப்ய பூர்வவத் ।
பாந்தவை: ஸம்பரிஷ்வக்த: ஸுகீ பூத்வா ஸ்திதோऽபவத் ॥

**यथा**–எவ்வாறு, **गान्धारदेशीयः**–காந்தாரதேச புருஷன், **चिरं**–வெகுநேரம் சென்ற பிறகு, **दैवात्**–அத்ருஷ்டவசமாக, **परिप्राप्तैः**–அங்கு வந்த, **दयालुभिः**–இரக்கமுள்ள, **कैश्चित्**–சில, **पान्थैः**–வழிப் போக்கர்களால், **मुक्तदृष्ट्यादिबन्धनः**–கண் முதலியவைகளின் கட்டு அவிழ்க்கப்பட்டவனுய் **सः**–அவன், **स्वस्थैः**–ஸ்வஸ்தர்களான அவர்களால், **उपदिष्टश्च**–மார்க்கம் உபதேசிக்கப்பட்டவனுக, **पण्डितः**–புத்திமானுகவும், **निश्चितात्मकः**–உறுதியான மனமுள்ளவனுகவும், **मेधावी**–மேதையுடன் கூடினவனுகவும், **मार्गतत्परः**–வழியிலேயே மனதைச் செலுத்தியவனுயும் இருந்து, **ग्रामाद्ग्रामान्तरं**–ஒவ்வொரு கிராமமாக, **गच्छन्**–செல்கின்றவனுய், **सः**–அவன்

गान्धारदेशं–காந்தாரதேசம், गत्वा–சென்று, स्वगृहं–தன் வீட்டை, प्राप्य–அடைந்து, बान्धवैः–உறவினர்களால், संपरिष्वक्तः – தழுவிக் கொள்ளப்பட்டவனாய், सुखी – ஸுக முள்ளவனாக, भूत्वा–ஆகி, पूर्ववत्–முன்போல், स्थितोऽभवत्–நிலைபெற்றிருந்தான்.

ஜனஸஞ்சாரமில்லாத நடுக்காட்டில் தன்னந்தனியாக காந்தார புருஷன் வெகுநேரம் கதறிக்கொண்டிருக்கும் பொழுது அவனுக்கு நல்ல அதிருஷ்டம் இருந்ததால் அந்த வழியாக சில வழிப்போக்கர்கள் கூட்டமாக வந்தார்கள். அவர்களும் இரக்கமுள்ளவர்களாயிருந்தார்கள். இவன் கூக்குரலிடுவதைக் கேட்டு "எங்கேயோ மனிதக் குரல் கேட்கிறதே" என்று சொல்லிக்கொண்டு இவன் சமீபம் வந்தனர். இவன் இருக்கும் நிலைமையை நேரில் பார்த்து மனம் இளகி உடனேயே இவனுடைய கால்களிலும், கைகளிலும், கண்களிலும் உள்ள கட்டை அவிழ்த்துவிட்டு, அவனுக்கு உணவும் நீரும் கொடுத்து சாப்பிடச்செய்து ஆச்வாஸப்படுத்தி அவன் வரலாறு முழுவதையும் அவனிடம் கேட்டுத் தெரிந்துகொண்டு அவனுக்கு ஆறுதல் கூறி அவனுடைய ஊருக்குப்போய்ச் சேரும்வழியையும் விவரமாகக் கூறிவிட்டு அவர்கள் சென்றுவிட்டனர். இவனும் அவர்கள் கூறிய வழி விபரங்கள் முழுவதையும் நன்கு புரிந்துகொண்டு, மறக்காமல் நினைவிலும் வைத்துக் கொண்டு, அவர்கள் சொன்ன விஷயத்தில் ஸந்தேஹ மில்லாமல் உறுதியான மனத்துடன் புறப்பட்டு தன் வழியிலேயே மனத்தைச் செலுத்தியவனாய் கிராமம் கிராம மாகச் சென்று கடைசியில் காந்தார தேசம் சென்று தன் வீட்டை அடைந்து தன்னை விட்டுப்பிரிந்து துன்பமுறும் தாய்தந்தையராலும் மனைவியாலும் தழுவிக்கொள்ளப் பட்டவனாய் எல்லா துக்கங்களும் விலகி ஆனந்தமடைந்து முன்போலவே நிலையாக தன் வீட்டிலேயே இருந்துவந்தான்.

இங்கு காந்தார புருஷன் தன் துக்கம் விலகி ஊர் போய் சேருவதற்கு முதலாவது அவனுக்கு நல்ல அதிருஷ்டம் இருந்தது. அது இருந்ததால்தான் வழிப் போக்கர்கள்

தற்செயலாய் அங்கு வந்தனர். இல்லாவிடில் ஜனஸஞ்சார மில்லாத பயங்கரமான அந்த நடுக் காட்டில் ஒருவரும் வரமாட்டார்கள். பட்டினியாலோ, துஷ்ட மிருகங்களாலோ பிராணனை விடவேண்டியதுதான். அப்படி வந்தவர்களும் பந்தமில்லாமல் ஸ்வஸ்தர்களாயிருந்ததால்தான் இவனுடைய கட்டை அவிழ்த்து இவன் துன்பத்தை விலக்க முடிந்தது. இவனைப்போலவே அந்தத்திருடர்களால் மேலும் பலர் கை, கால், கண்கள் கட்டப்பட்டு இவன் ஸமீபத்தில் வந்தார்களானால் அவர்களால் இவன் துக்கம் விலகாது. அவர்கள் வழிப்போக்கர்களாகவும் இரக்கம் உள்ளவர்களாகவும் இருந்தனர். வேறு திருடர்களாகவோ, கல்நெஞ்சர்களாகவோ இருந்தால் இவன் அருகில் வரவே மாட்டார்கள். அவர்கள் காந்தாரதேசம் செல்லும் வழியை நன்கு அறிந்தவர்களாக இருந்து இவனுக்கு விவரமாக மனதில் நன்கு பதியும்படி வழியை எடுத்துச்சொன்னார்கள். இவனுக்கும் அவர்கள் உபதேசித்த மார்க்க விவரங்களை நன்கு புரிந்துகொள்ளவும், அதை மறக்காமல் நினைவில் வைத்துக்கொள்ளவும் ஸாமர்த்தியம் இருந்தது. மேலும் அவர்கள் சொல்வதில் ஸந்தேஹம் கொள்ளாமல் அவர்கள் உபதேசித்த வழியாகவே செல்லுவது என்று தீர்மானம் கொண்டான். கடைசிவரை தான் போகவேண்டிய வழி ஒன்றிலேயே எப்பொழுதும் தன் கருத்தைச் செலுத்தினான். இது இல்லாமல் நடுவழியில் உள்ள ஊர்களைப் பார்க்கத் தங்கிவிட்டால் போய்ச்சேரமுடியாது. முன்கூறிய எல்லாத் தகுதிகளையும் பெற்றிருந்ததால்தான் சீக்கிரம் சுலபமாக தன் ஊருக்குச் சென்று எல்லாத் துன்பங்களும் விலகி முன்போல ஸுகமாக இருந்தான். இந்தத் தகுதிகள் இல்லாவிடில் இவன் ஊர் போய்ச்சேர்ந்திருக்கமுடியாது.

(அ) ஸம்ஸாரியான ஜீவன் பரமானந்த நிலையை அடையும் வழிகளைக் கூறுகிறார் :—

त्वमप्येवमनेकेषु दुःखदायिषु जन्मसु ।
भ्रान्तो दैवाच्छुभे मार्गे जातश्रद्धः शुकर्मकृत् ॥ ७४॥

वर्णाश्रमाचारपरोऽवाप्तपुण्यमहोदयः ।
ईश्वरानुग्रहाल्लब्धब्रह्मविद्गुरुसत्तमः ॥ ७५ ॥

विधिवत्कृतसंन्यासो विवेकादियुतः सुधीः ।
प्राप्तब्रह्मोपदेशोऽद्य वैराग्याभ्यासतः परम् ॥ ७६ ॥

पण्डितस्तत्र मेधावी युक्त्या वस्तु विचारयन् ।
निदिध्यासनसंपन्नः प्राप्तो हि त्वं परं पदम् ॥ ७७ ॥

த்வமப்யேவமநேகேஷு து:க்கதாயிஷு ஜன்மஸு ।
ப்ராந்தோ தைவாத் ஶுபே மார்கே ஜாதச்ரத்த: ஸுகர்மக்ருத் ॥

வர்ணாச்ரமாசார பரோऽவாப்த புண்ய மஹோதய: ।
ஈச்வரா நுக்ரஹாத் லப்த ப்ரஹ்மவித் குரு ஸத்தம: ॥

விதிவத் க்ருத ஸன்யாஸோ விவேகாதியுத: ஸுதீ: ।
ப்ராப்த ப்ரஹ்மோபதேஶோऽத்ய வைராக்யாப்யாஸத: பரம்॥

பண்டிதஸ் தத்ர மேதாவீ யுக்த்யா வஸ்து விசாரயன் ।
நிதித்யாஸன ஸம்பந்ந: ப்ராப்தோ ஹி த்வம் பரம் பதம் ॥

एवं-இதுபோல், त्वमपि-நீயும், दुःखदायिषु-துன்பங்களைத் தருகின்ற, अनेकेषु-பல, जन्मसु-பிறவிகளில், भ्रान्तः-உழன்று, दैवात्-அதிருஷ்டவசமாக, शुभे मार्गे-நல்வழியில், जातश्रद्धः-நம்பிக்கை ஏற்பட்டவனாய், सुकर्मकृत्-நல்ல காரியங்களைச் செய்துகொண்டு, वर्णाश्रमाचारपरः-தன் வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் ஏற்பட்ட ஆசாரங்களிலேயே ஈடுபட்டவனாய், अवाप्तपुण्यमहोदयः-புண்யங்களால் மிகுந்த சிறப்பைப் பெற்று, ईश्वरानुग्रहात्-ஈசுவரனுடைய அருளால், लब्धब्रह्मविद्गुरुसत्तमः-ப்ரஹ்மத்தை அறிந்த குருசிரேஷ்டரை அடைந்து, विधिवत्-சாஸ்திர முறைப்படி, कृतसंन्यासः-ஸந்யாஸம் செய்துகொண்டு, विवेकादियुतः-விவேகம் முதலியவைகளுடன் கூடியவனாகவும்

**सुधीः**- சிறந்த புத்தியுள்ளவனாகவும், **परं**-மிகவும், **वैराग्याभ्यासतः**-வைராக்யத்தாலும் அப்யாஸத்தாலும், **अद्य** - இப்பொழுது, **प्राप्तब्रह्मोपदेशः**-ப்ராஹ்மோபதேசம் பெற்று, **तत्र**-அதில், **पण्डितः**-பண்டிதனாகவும், **मेधावी**-மேதாவியாகவும், **युक्त्या**-யுக்தியால், **वस्तु**-வஸ்துவை, **विचारयन्**-விசாரித்துக்கொண்டு, **निदिध्यासनसंयुतः**-த்யானத்துடன் கூடியவனாய், **त्वं**-நீ, **परं पदं**-மேலான நிலையை, **प्राप्तो हि**-அடைந்துவிட்டாய் அல்லவா.

காந்தாரபுருஷனைப்போல ஒவ்வொரு ஜீவனும் அநாதி காலமாக அஜ்ஞானத்தாலும் விபரீத ஞானத்தாலும் மனதில் ராகமும் த்வேஷமும் நிலைபெற்று பலவிதமான கர்மாக்களைச் செய்து செய்து குவித்து அதன் பயனாக அநேகம் பிறவிகளைப்பெற்று பலவிதத்துன்பங்களை அனுபவிக்கிறான். இவ்வாறு உழன்றுகொண்டிருக்கும்பொழுது ஏதோ புண்ய வசத்தால் உயரிய மானிடப்பிறவியைப் பெற்று நல்வழியில் சிரத்தையும் ஏற்பட்டு ஸத்கர்மாக்களைச் செய்வதுடன் தன் வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட ஸதாசாரங்களிலேயே ஈடுபட்டு, அதனால் புண்யம் பெருகி ஈசுவரானுக்ரஹமும் இருக்குமானால் ப்ரஹ்ம வித்தான ஸத்குருவைத் தேடியடைவான். பிறகு முறைப்படி ஸந்யாஸம் செய்துகொண்டு விவேகம், வைராக்யம் முதலான ஸாதனங்கள் திடப்படுமானால் ஸத்குரு இவனுக்கு ப்ரஹ்மத்தை உபதேசிப்பார். இவன் பண்டிதனாகவும் மேதாவியாகவும் இருந்தால் குருவின் உபதேசத்தை மனதில் நிலைநிறுத்தி உபநிஷத்துகளின் தாத்பர்யத்தைத் தெரிந்துகொண்டு தகுந்த யுக்திகளால் விசாரித்துத் தீர்மானித்து ப்ரஹ்மதத்வத்தை த்யானம் செய்து ஆத்மானுபவம் பெறுகிறான் இங்கு ப்ரஹ்மஞானம் ஏற்பட ஸாதன பரம்பரையைக் காட்டுகிறார். அதாவது சிரத்தை, ஸத்கர்மானுஷ்டானம், வர்ணாச்ரமாசாரம், ஈசுவரானுக்ரஹம், ஸத்குரு லாபம், விவேகவைராக்யாதிகளின் அப்யாஸம், ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம், தத்வஞானம். (74-77)

अतो ब्रह्मात्मविज्ञानमुपदिष्टं यथाविधि ।
मयाऽऽचार्येण ते धीर सम्यक् तत्र प्रयत्नवान् ॥ ७८ ॥

भूत्वा विमुक्तबन्धस्त्वं छिन्नद्वैतात्मसंशयः ।
निर्द्वन्द्वो निःस्पृहो भूत्वा विचरस्व यथासुखम् ॥ ७९ ॥

*அதோ ப்ரஹ்மாத்ம விஜ்ஞானமுபதிஷ்டம் யதாவிதி ।*
*மயாசார்யேண தே தீர ஸம்யக் தத்ர ப்ரயத்னவான் ॥*

*பூத்வா விமுக்தபந்தஸ்த்வம் சின்னத்வைதாத்மஸம்ஶய: ।*
*நிர்த்வந்த்வோ நிஃஸ்ப்ருஹோ பூத்வா விசரஸ்வ யதாஸுகம் ॥*

अतः–ஆகையால், धीर–தைர்யமுள்ளவனே! आचार्येण–ஆசார்யனான, मया–என்னால், ते–உனக்கு, ब्रह्मात्मविज्ञानं–ப்ரஹ்மஸ்வரூபமான ஆத்மாவின் ஞானம், यथाविधि–முறைப்படி, उपदिष्टं – உபதேசிக்கப்பட்டிருக்கிறது. तत्र–அதில், सम्यक्–நன்கு, प्रयत्नवान्–முயற்சியுடன்கூடியவனாக, भूत्वा–இருந்து, त्वं–நீ, विमुक्तबन्धः - பந்தத்திலிருந்து விடுபட்டு, छिन्नद्वैतात्मसंशयः–த்வைத ப்ரபஞ்சத்திலும் ஆத்மாவிலும் உள்ள ஸம்சயங்கள் எல்லாம் நீங்கியவனாகவும், निर्द्वन्द्वः – த்வந்த்வங்கள் அற்றவனாகவும், निःस्पृहः - ஆசையற்றவனாகவும், भूत्वा–ஆகி, यथासुखं–ஸுகமாக, विचरस्व–ஸஞ்சாரம் செய்.

மிகுந்த தைர்யத்துடன் ஆத்மஞான மார்க்கத்தில் வந்துள்ள சிஷ்யனான உனக்கு முறைப்படி ஆசார்யனாக இருந்து நான் ப்ரஹ்மமும் ஆத்மாவும் ஒன்று என்ற தத்வத்தை உபதேசித்திருக்கிறேன். நீ இதில் நன்கு முயற்சி எடுத்துக்கொண்டு இதை அனுபவத்திற்குக் கொண்டுவந்து அதனால் த்வைதத்தைப் பற்றியும் ஆத்மாவைப் பற்றியும் இருந்த ஸந்தேஹங்கள் எல்லாம் விலகி, ஸுக துக்கங்கள், சீதோஷ்ணங்கள் முதலான த்வந்த்வங்களால் மனதில் சிறிதும் விகாரமில்லாமல் பற்றற்று ஸுகமாக ஸஞ்சாரம் செய். (78–79)

(அ) பந்தமோக்ஷ வியவஹாரத்தின் தன்மையைக் கூறுகிறார் :—

वस्तुतो निष्प्रपञ्चोऽसि नित्यमुक्तः स्वभावतः ।
न ते बन्धविमोक्षौ स्तः कल्पितौ तौ यतस्त्वयि ॥ ८० ॥

வஸ்துதோ நிஷ்ப்ரபஞ்சோ ஽ஸி நித்யமுக்த: ஸ்வபாவத: ।
ந தே பந்தவிமோக்ஷௌ ஸ்த: கல்பிதௌ தௌ
யதஸ்த்வயி ॥

वस्तुतः - உண்மையில், स्वभावतः-இயற்கையாகவே, निष्प्रपञ्चः-பிரபஞ்ச ஸம்பந்தமற்றவனாகவும், नित्यमुक्तः - எப்பொழுதும் விடுபட்டவனாகவும், असि-நீ இருக்கிறாய். ते-உனக்கு, बन्धविमोक्षौ-பந்தமும் மோக்ஷமும், न स्तः-இல்லை. यतः-ஏனெனில், त्वयि-உன்னிடத்தில், तौ-அவைகள், कल्पितौ-ஆரோபம் செய்யப்பட்டவைகள்.

இதுவரை பல சுலோகங்களால் காந்தார புருஷனை திருஷ்டாந்தமாகக் காட்டி, ஸம்ஸாரத்தில் பத்தனாக இருக்கும் நிலையையும் இதிலிருந்து விடுபடுவதற்கு வேண்டிய வழிகளையும் முக்தனின் நிலைமையையும் கூறினார். இவைகளெல்லாம் வியவஹார தசையில்தான் பொருந்தும். உண்மையில் விசாரித்துப் பார்த்தோமானால் பிரபஞ்சமே கல்பிதம். இதன் ஸம்பந்தமும் ஆத்மாவுக்கு இல்லை. ஆத்மா நித்ய முக்தமான வஸ்து. அஸங்கமானது. இதில் பந்தமும் மோக்ஷமும் அவித்யையால் ஆரோபம் செய்யப்பட்டுள்ளபடியால் உண்மையில் அவை ஆத்மாவுக்குக் கிடையாது. ப்ரமத்தால் தன்னிடம் பந்தம் இருப்பதாக எண்ணிக்கொண்டிருந்தான். இந்த ப்ராந்தி தத்வஞானத்தால் நீங்கிவிட்டது. இதைத் தவிர ஆத்ம ஸ்வரூபத்தில் ஒரு மாறுதலும் இல்லை. அது எப்பொழுதும் ஒரேவிதமாகத் தான் இருக்கிறது. (80)

(அ) இதற்கு ப்ரமாணமாக மாண்டுக்ய காரிகையிலுள்ள பரமகுருவின் ஸூக்தியைக் காட்டுகிறார் :-

न निरोधो न चोत्पत्तिः न बद्धो न च साधकः ।
न मुमुक्षुर्न वै मुक्त इत्येषा परमार्थता ॥ ८१ ॥

ந நிரோதோ ந சோத்பத்திர் ந பத்தோ ந ச ஸாதக: ।
ந முமுக்ஷுர் ந வை முக்த இத்யேஷா பரமார்த்ததா ॥

निरोधः-ப்ரளயம், न-இல்லை. उत्पत्तिश्च-ஸிருஷ்டியும், न-இல்லை. बद्धः-கட்டுப்பட்டவன், न இல்லை. साधकश्च-ஸாதனங்களை அனுஷ்டிக்கிறவனும், न-இல்லை. मुमुक्षुः-மோக்ஷம் அடையவிரும்புகிறவன், न-இல்லை. मुक्तः-விடுபட்டவனும், न वै-இல்லை. इति एषा-என்ற இது, परमार्थता-உண்மை நிலை.

மாண்டுக்ய காரிகையில் இரண்டாவதான வைதத்ய பிரகரணத்தில் 32-வது சுலோகம் இது. இந்த ப்ரகரணத்தில் ஸ்வப்னத்தை திருஷ்டாந்தமாகக் காட்டிப் பற்பல யுக்திகளால் ஜாக்ரத்தில் காணும் ப்ரபஞ்சம் முழுவதும் பொய் என்று தீர்மானம் செய்கிறார். இந்த ப்ரகரணத்தின் கருத்து முழுவதும் இந்த சுலோகத்தில் அமைந்திருப்பதாக இதன் அவதாரிகையில் பகவத்பாதாள் கூறுகிறார். ஆத்மா ஒன்றே உண்மைப் பொருள். மற்றவை எல்லாம் பொய் என்பது நிரூபணமாகி விட்டபடியால் த்வைதத்தை ஒட்டிய வியவஹாரங்கள் எல்லாம் உண்மையில் இல்லை. ஆகவே ஜகத்தின் ஸிருஷ்டி ப்ரளயங்களோ, பத்தனென ஸம்ஸாரி நிலையோ, ஸாதனங்களை அனுஷ்டிக்கும் நிலையோ, மோக்ஷமடைய விரும்புவதோ, பந்தத்திலிருந்து விடுபடுவதோ ஒன்றும் கிடையாது என்பதுதான் வாஸ்தவம். இவை எல்லாம் அவித்யையால் ஏற்பட்ட வியவஹாரங்கள். ஆகையால் பொய்தான். இதே சுலோகத்தை விவேகசூடாமணியிலும் பகவத்பாதாள் சேர்த்திருக்கிறார். (81)

(அ) தத்வோபதேசத்தை உபஸம்ஹாரம் செய்கிறார்:-

श्रुतिसिद्धान्तसारोऽयं तथैव त्वं स्वया धिया ।
संविचार्य निदिध्यास्य निजानन्दात्मकं परम् ॥ ८२ ॥

साक्षात्कृत्वाऽपरिच्छिन्नाद्वैतब्रह्माक्षरं स्वयम् ।
जीवन्नेव विनिर्मुक्तो विश्रान्तः शान्तिमाश्रय ॥ ८३ ॥

*ச்ருதி ஸித்தாந்த ஸாரோ.ऽயம் ததைவ த்வம் ஸ்வயா தியா ।*
*ஸம்விசார்ய நிதித்யாஸ்ய நிஜாநந்தாத்மகம் பரம் ॥*
*ஸாக்ஷாத்க்ருத்வாऽபரிச்சிந்நாத்வைதப்ரஹ்மாக்ஷரம் ஸ்வயம் ।*
*ஜீவந்நேவ விநிர்முக்தோ விச்ராந்த: ஶாந்திமாச்ரய ॥*

**अयं**-இது, **श्रुतिसिद्धान्तसारः**-உபநிஷத் ஸித்தாந்தத்தின் ஸாரம். **तथैव**-அவ்விதமே, **त्वं**-நீ, **स्वया धिया**-தன் புத்தியால் **संविचार्य**-நன்கு விசாரித்து, (மனனம் செய்து) **निदिध्यास्य**-த்யானம்செய்து, **निजानन्दात्मकं**-தன் ஆனந்தஸ்வரூபமாயும், **परं** – மேலானதும், **अपरिच्छिन्नाद्वैतब्रह्माक्षरं**-எல்லையற்றதும் இரண்டற்றதும் அழிவற்றதுமான ப்ரஹ்மஸ்வரூபத்தை, **स्वयं**-தானாகவே, **साक्षात्कृत्वा**-நேரில் ப்ரத்யக்ஷமாக அறிந்து, **जीवन्नेव**-உயிர்வாழும்பொழுதே, **विनिर्मुक्तः**-பந்தம் விலகியவனாய், **विश्रान्तः**-துன்பம் அற்றவனாய், **शान्ति**-அமைதியை, **आश्रय**-அடைவாயாக.

இதுவரை உனக்கு உபதேசித்தது உபநிஷத்துக்களின் ஸாரம். இவ்வளவுதான் ஆசார்யாள் செய்யக்கூடியது. இதற்குமேல் நீ தான் தானாக முயற்சி எடுத்துக்கொண்டு பலனை அடையவேண்டும். உனக்கு சிரவணம் கிடைத்து விட்டது. அத்வைதமான ப்ரஹ்மத்தில் தான் உபநிஷத்துக்களின் தாத்பர்யம் என்பது தெரிந்துவிட்டது. இதனால் அஸம்பாவனை நிவர்த்தியாகி விட்டது. இனிமேல் உன் புத்தியைக் கொண்டு நன்கு விசாரித்து மனனம் செய்ய வேண்டும் அதாவது தக்க யுக்திகளைக்கொண்டு இந்த ஸித்தாந்தத்தை உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டும். அப்பொழுது ஸம்சய பாவனை விலகும். பிறகு வேறு ஒன்றையும் நினையாமல் இதையே தியானம் செய்ய வேண்டும். அப்பொழுது விபரீத பாவனையும் விலகிவிடும்.

அப்பொழுது ஸச்சிதானந்த ஸ்வரூபமானதும் பரிச்சேதமற்றதும் அழிவற்றதும் ஆத்ம ஸ்வரூபமுமான அத்வைத ப்ரஹ்மத்தின் ஸாக்ஷாத்காரம் ஏற்படும். எல்லா பந்தமும் விலகி ஒரு விகாரமும் இல்லாமல் பரமமான சாந்தியைப் பெற்று ஜீவன்முக்தனுக விளங்குவாய். (82-83)

(அ) கடைசி நான்கு சுலோகங்களால் ஸ்ரீஸத்குருவின் மஹிமையை விரிவாகக் கூறுகிருர் :—

विचारणीया वेदान्ता वन्दनीयो गुरुः सदा ।
गुरूणां वचनं पथ्यं दर्शनं सेवनं नृणाम् ॥ ८४ ॥

விசாரணீயா வேதாந்தா: வந்தநீயோ குரு: ஸதா ।
குரூணும் வசனம் பத்யம் தர்சனம் ஸேவநம் ந்ருணும் ॥

**वेदान्ताः** – உபநிஷத்துக்கள், **विचारणीयाः** – விசாரிக்கத்தக்கவை. **सदा**–எப்பொழுதும், **गुरुः**–ஆசார்யர், **वन्दनीयः**–வணங்கத்தக்கவர். **गुरूणां**-ஆசார்யர்களுடைய, **वचनं**–உபதேசமும், **दर्शनं**–தர்சனமும், **सेवनं**-ஸேவையும், **नृणां**–மனிதர்களுக்கு, **पथ्यम्**–நன்மை பயக்க வல்லது.

ஞானத்தை அடைய விரும்புபவன் உபநிஷத்துக்களின் அர்த்தத்தை ஸதா நன்கு விசாரித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். ஆனுல் இது அனுபவத்திற்கு வரவேண்டுமானுல் குருவின் கிருபை வேண்டும். இதற்கு குருவை அடிக்கடி தர்சனம் செய்யவேண்டும். அவருக்கு சுச்ரூஷை செய்யவேண்டும். அவரை நமஸ்கரிக்க வேண்டும். அவர் சொன்னபடி கேட்க வேண்டும். இவைகளைச் செய்யாத வரையில் உபநிஷத்தை எத்தனை தடவை விசாரித்தாலும் ஞானுனுபவம் ஏற்படாது. இவைகளைச் செய்வதால் ஸாதாரண மனிதர்களுக்கும் எல்லாவித நன்மைகளும் ஏற்படும். (84)

गुरुर्ब्रह्म स्वयं साक्षात्सेव्यो वन्द्यो मुमुक्षुभिः ।
नोद्वेजनीय एवायं कृतज्ञेन विवेकिना ॥ ८५ ॥

குருர் ப்ரஹ்ம ஸ்வயம் ஸாக்ஷாத் ஸேவ்யோ வந்த்யோ முமுக்ஷுபி: ।
நோத்வேஜநீய ஏவாயம் க்ருதஜ்ஞேந விவேகிநா ॥

**स्वयं**–தான், **साक्षात्**–நேராக, **ब्रह्म**-ப்ரஹ்மஸ்வருபமாக உள்ள, **गुरुः**–குருவானவர், **मुमुक्षुभिः**–மோக்ஷம் அடைய ஆசையுள்ளவர்களால், **सेव्यः**–ஸேவிக்கத்தக்கவர். **वन्द्यः**–வணங்கத்தக்கவர். **कृतज्ञेन** – நன்றியறிவுள்ள, **विवेकिना**–விவேகமுள்ள சிஷ்யனால், **अयं**–இவர், **न उद्वेजनीय एव**–துன்பம் அடையும்படி செய்யத்தக்கவரேயல்ல.

முமுக்ஷுவானவன் எந்த ப்ரஹ்மத்தை அறிய முயற்சிக்கிறனே அந்த ப்ரஹ்மமாகவே குரு விளங்குகிறர். ஆகையால் கட்டாயம் குருவை வந்தனம் செய்து தன் விநயத்தைக்காட்டவேண்டும். அவருக்கு சுச்ருஷை செய்ய வேண்டும். உலகில் ஸாதாரண உதவி செய்தவனையே நாம் நன்றியுடன் போற்றவேண்டியது அவசியமாயிருக்கும் பொழுது ப்ரஹ்மஞானத்தைக் கொடுத்து மஹோபகாரம் செய்யும் குருவைப்பற்றிக் கேட்பானேன்? விவேகியாக உள்ளவன் எப்பொழுதும் அவரிடம் நன்றி பாராட்ட வேண்டும். குருவின் மனதிற்குத் தாபம் உண்டாகும்படியான காரியங்களை ஒருபொழுதும் செய்யக்கூடாது. அவ்விதமான வார்த்தைகளையே பேசக்கூடாது. (85)

(அ) ஞானிக்கும் குருபக்தி அவசியமெனக் கூறுகிறர்:—

**यावदायुस्त्वया वन्द्यो वेदान्तो गुरुरीश्वरः ।**
**मनसा कर्मणा वाचा श्रुतिरेवैष निश्चयः ॥ ८६ ॥**

யாவதாயுஸ் த்வயா வந்த்யோ வேதாந்தோ குருரீச்வர: ।
மநஸா கர்மணு வாசா ச்ருதிரேவைஷ நிச்சய: ॥

**त्वया**–உன்னுல், **यावदायुः**–ஆயுள் உள்ளவரை, **मनसा**–மனத்திஞலும், **कर्मणा**-செய்கையாலும், **वाचा**-வாக்காலும்,

**वेदान्तः**-உபநிஷத்தும், **गुरुः**-ஆசாரியரும், **ईश्वरः**-ஈசுவரனும், **वन्द्यः** - வணங்கத்தக்கவர். **एष निश्चयः**-இந்தத்தீர்மானம், **श्रुतिरेव**-வேதம்தான்.

ஞானம் அடைந்த பிறகும்கூட சரீரமுள்ளவரை உபநிஷத், குரு, ஈசுவரன் இம் மூவரையும் மனஸ், வாக்கு, செய்கை இம் மூன்று கரணங்களாலும் போற்றவேண்டும். இது வேதத்தின் உறுதியான கட்டளை. இதற்கு மாறுதலே கிடையாது. ஞானம் கிடைப்பதற்காக முன்னுலும், நன்றி மறத்தல் என்ற தோஷம் வராமலிருப்பதற்காக ஞானம் கிடைத்த பின்பும் இம் மூவர்களையும் போற்றவேண்டும். (86)

भावाद्वैतं सदा कुर्यात्क्रियाद्वैतं न कर्हिचित् ।
अद्वैतं त्रिषु लोकेषु नाद्वैतं गुरुणा सह ॥ ८७ ॥

பாவாத்வைதம் ஸதா குர்யாத் க்ரியாத்வைதம் ந கர்ஹிசித் ।
அத்வைதம் த்ரிஷு லோகேஷு நாத்வைதம் குருணு ஸஹ ॥

**भावाद्वैतं**-மனேபாவனையில் அத்வைதத்தை, **सदा**-எப்பொழுதும், **कुर्यात्**-செய்யலாம். **कर्हिचित्**-ஒரு இடத்திலும், **क्रियाद्वैतं**-செய்கையில் அத்வைதத்தை, **न**-செய்யக்கூடாது. **त्रिषु लोकेषु**-மூவுலகங்களிலும், **अद्वैतं**-அத்வைத பாவனை செய்யலாம். **गुरुणा सह**-ஆசார்யனேடுகூட, **अद्वैतं**-அத்வைத பாவனை, **न**-செய்யக்கூடாது.

உலகிலுள்ள பொருள்களில் பலவித வேற்றுமைகளும் ஏற்றத் தாழ்வுகளும் காணப்படுகின்றன. ஆனல் எங்கும் ஒரே ப்ரஹ்ம வஸ்து ஸமமாகவே இருக்கிறது. வேற்றுமைகளையும் ஏற்றத்தாழ்வுகளையும் மறந்து எங்கும் ஸமமான ப்ரஹ்மத்தை தியானிப்பதுதான் அத்வைத பாவனை என்பது இதை மனதால்தான் செய்யமுடியும். மனதால் அத்வைத பாவனை பண்ணலாம். செய்கையில் அத்வைதத்தைக் காட்டவே முடியாது. உலக வியவஹாரங்களில் ஈடுபட்டு காரியங்களைச் செய்யும்பொழுது அந்தந்த வேற்றுமைகளை

மதித்துத்தான் நடக்கவேண்டும். இங்கும் அத்வைதத்தைக் காட்டினுல் காரியங்களே நடைபெருது. விபரீத விளைவுகளும் ஏற்படும். ஆகையால் மனுேபாவத்தில் அத்வைதமே தவிர க்ரியையில் அத்வைதம் கிடையாது. பாவாத்வைதத்தையும் குருவினிடம் காட்டக்கூடாது. குருவைத் தவிர மற்ற இடங்களில்தான் காட்டலாம். மூவுலகிலும் உள்ள எல்லாப் பொருள்களேயும் தன்னுடன் ஒன்ருக மனத்தில் பாவனை செய்யலாம். இதுபோல் குருவும் தானும் ஒன்றுதான் என்ற எண்ணம் கொள்ளவேகூடாது. ஜீவன் முக்தனும்கூடத் தன் குருவைப் பூஜ்யராகவே நினைக்க வேண்டும். ஒவ்வொருவனும் ஸ்ரீஸத்குருவின் அருளால்தான் பரமானந்த நிலையை அடைகிருன். (87)

தத்வோபதேசம் முற்றிற்று.



|| श्रीः ||

# || गुर्वष्टकम् ||

## ஸ்ரீ குர்வஷ்டகம்

[குர்வஷ்டகம் எட்டு சுலோகங்கள் கொண்ட சிறிய பிரகரணம். ஒன்பதாவது சுலோகம் இதன் பலனைக் கூறுகிறது. உலக வாழ்க்கையில் பற்பல உயர்ந்த நிலைகள் இருக்கின்றன. இவைகளை எல்லாம் பெற்றதால் மட்டும் ஒருவன் உயர்ந்த பிறவிப்பயனை அடைந்ததாகக் கூறமுடியாது. இவைகள் எல்லாம் மறுபிறவியில் கிட்டாமல் தாழ்ந்த நிலையையும் அடைந்துவிடலாம். அரிய மானிடப்பிறவி பெற்று உயர்ந்த நிலையையும் பெற்றவன் மறுபடியும் கீழேவிழாமல் எல்லாவற்றிலும் உயர்ந்த சாச்வதமான ஆனந்த நிலையை அடைய வேண்டுமானால் ஸ்ரீ ஸத்குருவின் அருளைப் பெறவேண்டும். இதற்கு குரு பாதாரவிந்தத்தில் எப்பொழுதும் மனம் ஈடுபடவேண்டும். எப்பொழுதும் குருவின் திருவடிகளை மனதில் தியானம் செய்யவேண்டும் என்பதை இதில் நன்கு காட்டுகிறார். இதைப் படித்து இதன் பொருளை அனுஸந்தானம் செய்து வந்தால், தான் பெற்றவைகளால் யாதும் பயனில்லை என்று கண்டு குருவை நாடிச்செல்வான். அவனே புண்யசாலி. இவன் யாராயிருந்தாலும் குருவின் அருளைப்பெற்று அதனால் எல்லா அபீஷ்டங்களும் நிறைவேறப் பெற்றவனாய்க் கடைசியில் ப்ரஹ்மானந்தத்தையும் பெறுவான்.]

**शरीरं सुरूपं तथा वा कलत्रं यशश्चारु चित्रं धनं मेरुतुल्यम् ।**
**मनश्चेन्न लग्नं गुरोरङ्घ्रिपद्मे ततः किं ततः किं ततः किं ततः किम् ॥**

ஶரீரம் ஸுரூபம் ததா வா களத்ரம்
யஶச்சாரு சித்ரம் தனம் மேருதுல்யம் ।
மனச்சேத் ந லக்னம் குரோரங்க்ரி பத்மே
தத: கிம் தத: கிம் தத: கிம் தத: கிம் ॥ 1

**सुरूपं**-அழகிய, **शरीरं**-தேஹம், **तथा वा**-அப்படியே, **कलत्रं**-அழகிய மனைவி, **चारु**-அழகிய (சிறந்த) **यशः** -புகழ், **मेरुतुल्यं**-

மேருவிற்கு ஒப்பான, **चित्रं**-பலவிதமான, **धनं**-செல்வம் (இவ்வளவும் இருந்தும்), **गुरोः**-ஆசாரியருடைய, **अंघ्रिपद्मे**-சரணாரவிந்தத்தில், **मनः**-மனமானது, **न लग्नं चेत्**-ஈடுபடாமல் போனால், **ततः**-அதனால், **किं**-என்ன பயன்? **ततः**-அதனால் **किं** என்ன பயன்? **ततः**-அதனால், **किं**-என்ன பயன்? **ततः**-அதனால், **किं**-என்ன பயன்.

உலகில் அழகிய சரீரம், அழகிய மனைவி, நிறையப் பணம், சிறந்த கீர்த்தி இவைகளைப் பெற்றபோதிலும் குரு சரணாரவிந்தத்தில் மனது ஈடுபடவில்லையானால் இவற்றால் யாதுபயன்? இவன் சிரேயஸ்ஸைப் பெறமுடியாது. குருவின் அருள் இல்லாவிட்டால் இவைகள் எல்லாம் இவனைக் கீழே தள்ளிவிடும். (1)

**कलत्रं धनं पुत्रपौत्रादि सर्वं गृहं बान्धवाः सर्वमेतद्धि जातम् ।**
**मनश्चेन्न लग्नं गुरोरङ्घ्रिपद्मे ततः किं ततः किं ततः किं ततः किम् ॥**

களத்ரம் தனம் புத்ரபௌத்ராதி ஸர்வம்
க்ருஹம் பாந்தவா: ஸர்வமேதத் ஹி ஜாதம் ।
மநச்சேத் ந லக்னம் குரோரங்க்ரி பத்மே
தத: கிம் தத: கிம் தத: கிம் தத: கிம் ॥ 2

**कलत्रं**-மனைவி, **सर्वं** எல்லாவிதமான, **धनं**-பணம், **पुत्रपौत्रादि**-பிள்ளை, பேரன் முதலியவை, **गृहं**-வீடு, **बान्धवाः**-உறவினர்கள், **एतत् सर्वं**-இவை எல்லாம், **जातं हि**-வந்து விட்டது. **गुरोः**-குருவின், **अंघ्रिपद्मे**-சரணாரவிந்தத்தில், **मनः**-மனது, **न लग्नं चेत्**-ஈடுபடாமல் போனால், **ततः**-அதனால், **किं**-யாது பயன்? **ततः**-அதனால், **किं**-யாது பயன்? **ततः**-அதனால், **किं**-யாது பயன்? **ततः**-அதனால், **किं**-யாது பயன்?

நற்குணமுள்ள மனைவி, பணம், பிள்ளைகள், பேரன்கள், வீடு, உறவினர்கள் இவைகள் எல்லாம் கிடைத்த

போதிலும் குரு சரணத்யானம் இல்லாவிட்டால் பயன் இல்லை. (2)

(அ) தன் வீட்டில் எல்லா பாக்யங்களும் நிறைந்து உள்ளபோதிலும் பயனில்லை என்று கூறிவிட்டு கல்வியும் பயனற்றது என்று கூறுகிருர்:—

**षडङ्गादिवेदो मुखे शास्त्रविद्या कवित्वादि गद्यं सुपद्यं करोति ।**
**मनश्चेन्न लग्नं गुरोरङ्घ्रिपद्मे ततः किं ततः किं ततः किं ततः किम् ॥**

ஷடங்காதி வேதோ முகே சாஸ்த்ர வித்யா
கவித்வாதி கத்யம் ஸுபத்யம் கரோதி ।
மநச்சேத் ந லக்னம் குரோரங்க்ரி பத்மே
ததः கிம் தத: கிம் தத: கிம் ததः கிம் ॥ 3

**षडङ्गादिवेदः**-சிக்ஷை, கல்பம், வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யௌதிஷம் என்ற ஆறு அங்கங்கள் முதலானவற்றுடன்கூடிய வேதம், **शास्त्रविद्या**–சாஸ்திர ஞானம், **कवित्वादि** கவிதை முதலியவை இவை, **मुखे**–முகத்தில் இருக்கின்றன. **गद्यं**-கத்யத்தையும் (வசனநடையிலுள்ள காவ்யத்தையும்), **सुपद्यं**–சிறந்த பத்யத்தையும், (சுலோக ரூபமான காவ்யத்தையும்), **करोति**–இயற்றுகிருன். (ஆனலும்) **गुरोः**–ஆசார்யருடைய, **अंघ्रिपद्मे**–சரணுரவிந்தத்தில், **मनः**-மனம், **न लग्नं चेत्**–ஈடுபடாமல் போனல், **ततः**–அதனல், **किं**-என்ன பயன், **ततः**-அதனல், **किं** என்ன பயன், **ततः**–அதனல், **किं**–என்ன பயன், **ततः**–அதனல், **किं**–என்ன பயன் ?

ஆறு அங்கங்கள், வேதம், சாஸ்திரம், எல்லாவற்றையும் கற்று முகஸ்தமாக வைத்துக்கொண்டிருக்கிருன். வசனமாகவும் சுலோகமாகவும் சிறந்த காவ்யங்களை இயற்றுகிருன். இவ்வளவும் இருந்தும் குரு சரணத்யானம் இல்லாவிட்டால் பயன் இல்லை. (3)

**विदेशेषु मान्यः स्वदेशेषु धन्यः सदाचारवृत्तेषु मत्तो न चान्यः ।**
**मनश्चेन्न लग्नं गुरोरङ्घ्रिपद्मे ततः किं ततः किं ततः किं ततः किम् ॥**

விதேசேஷு மாந்ய: ஸ்வதேசேஷு தந்ய:
ஸதாசார வ்ருத்தேஷு மத்தோ ந சான்ய: ।
மநச்சேத் ந லக்னம் குரோரங்க்ரி பத்மே
தத: கிம் தத: கிம் தத: கிம் தத: கிம் ॥ 4

**विदेशेषु**-வெளிதேசங்களில், **मान्यः**-பூஜிக்கத்தகுந்தவனாக இருக்கிறேன். **स्वदेशेषु**-என் தேசத்திலும், **धन्यः**-பாக்யசாலியாக இருக்கிறேன். **सदाचारवृत्तेषु**-நல்ல ஆசாரம், ஸ்வபாவம் இவைகளில், **अन्यः**-வேறு ஒருவனும், **मत्तः**-என்னைக் காட்டிலும் சிறந்தவன், **न**-இல்லை. (என்று சொன்னாலும்) **गुरोः**-குருவின், **अंघ्रिपद्मे**-சரணாரவிந்தத்தில், **मनः**-மனம், **न लग्नं चेत्**-ஈடுபடாமல் போனால், **ततः**-அதனால், **किं**-யாது பயன், **ततः किं**-அதனால் யாது பயன், **ततः किं**-அதனால் யாது பயன், **ततः किं**-அதனால் யாது பயன் ?

என் நாட்டிலும் வெளி நாடுகளிலும் என்னைக் கொண்டாடாதவர்கள் கிடையாது. நல்லநடத்தையோ, ஆசாரமோ சீலமோ இவற்றில் என்னை மிஞ்சியவர் யாரும் இல்லை என்றெல்லாம் தன் பெருமையைச் சொல்லிக்கொள்கிறான். இதனால் இவன் சிரேயஸ்ஸை அடையமுடியுமா ? அதற்கு குரு பாதத்யானம்தான் வேண்டும். (4)

**क्षमामण्डले भूपभूपालवृन्दैः सदा सेवितं यस्य पादारविन्दम् ।**
**मनश्चेन्न लग्नं गुरोरङ्घ्रिपद्मे ततः किं ततः किं ततः किं ततः किम् ॥**

க்ஷமா மண்டலே பூப பூபால ப்ருந்தை:
ஸதா ஸேவிதம் யஸ்ய பாதாரவிந்தம் ।
மநச்சேத் ந லக்னம் குரோரங்க்ரி பத்மே
தத: கிம் தத: கிம் தத: கிம் தத: கிம் ॥ 5

**क्षमामण्डले**-பூமண்டலத்தில், **भूपभूपालवृन्दैः**-அரசர்கள், சக்கரவர்த்திகள் ஸமூஹங்களால், **यस्य**-எவருடைய, **पादार-**

विन्दं-சரணாரவிந்தம், सदा-எப்பொழுதும், सेवितं-ஸேவிக்கப் பட்டபோதிலும், गुरोः-குருவின், अंघ्रिपद्मे-சரணாரவிந்தத்தில் मनः-அவன் மனம், न लग्नं चेत्-ஈடுபடாமல் போனால், ततः किं-அதனால் என்ன ? ततः किं-அதனால் என்ன ? ततः किं-அதனால் என்ன, ततः किं-அதனால் என்ன ?

இப் பூமண்டலத்தில் சிற்றரசர்களோ சக்கரவர்த்தி களோ யாவரும் இவன் காலில் வணங்கிப் பூஜித்தபோதிலும் குருவின் அருளில்லாவிட்டால் எல்லாம் வீண் தான். (5)

यशो मे गतं दिक्षु दानप्रतापाज्जगद्वस्तु सर्वं करे यत्प्रसादात् ।
मनश्चेन्न लग्नं गुरोरङ्घ्रिपद्मे ततः किं ततः किं ततः किं ततः किम् ॥

யஶோ மே கதம் திக்ஷு தான ப்ரதாபாத்
ஜகத் வஸ்து ஸர்வம் கரே யத் ப்ரஸாதாத் ।
மநச்சேத் ந லக்னம் குரோரங்க்ரி பத்மே
ததः கிம் ததः கிம் தத: கிம் தத: கிம் ॥ 6

दानप्रतापात्-தான மஹிமையால், मे-என், यशः-புகழ் दिक्षु-திசைகளில், गतम्-சென்றிருக்கிறது, यत्प्रसादात्-எதன் ப்ரபாவத்தால், जगद्वस्तु सर्वं-உலகிலுள்ள எல்லா வஸ்துவும், करे-கையில் உள்ளது (என்றிருந்தாலும்), गुरोरंघ्रिपद्मे-குரு சரணாரவிந்தத்தில், मनः न लग्नं चेत्-மனது ஈடுபடாமல் போனால், ततः किं... ततः किम्-அதனால் யாது பயன் ?

இவன் செய்யும் தானத்தால் உலகம் முழுவதும் இவன் புகழ் பரவியுள்ளபோதிலும் உலகிலுள்ள எல்லாப்பொருள் களும் இவனுக்கு ஸ்வாதீனமாக இருந்தபோதிலும் பயன் இல்லை. (6)

(அ) இதுவரை ஸகாமர்களைப்பற்றிப் பேசினார். இனி நிஷ்காமர்களைப் பற்றிக் கூறுகிறார் :—

न भोगे न योगे न वा वाजिराजौ न कान्तामुखे नैव वित्तेषु चित्तम् ।
मनश्चेन्न लग्नं गुरोरङ्घ्रिपद्मे ततः किं ततः किं ततः किं ततः किम् ॥

ந போகே ந யோகே ந வா வாஜி ராஜௌ
ந காந்தா முகே நைவ வித்தேஷு சித்தம் ।
மநச்சேத் ந லக்னம் குரோரங்க்ரி பத்மே
தத: கிம் தத: கிம் தத: கிம் தத: கிம் ॥ 7

**भोगे**-விஷய ஸுகத்தில், **चित्तं**-மனது, **न**-ஈடுபடவில்லை. **योगे**-யோகத்தில், **न**-இல்லை. **वाजिराजौ**-குதிரைக்கூட்டத்தில், **न वा**-இல்லை. **कान्तामुखे**-பெண்ணின் முகத்தில், **न**-இல்லை. **वित्तेषु**-செல்வங்களில், **नैव**-செல்லவே இல்லை. (என்றாலும்), **गुरोरंघ्रिपद्मे**-ஆசார்ய சரணாரவிந்தத்தில், **मनः**-மனம், **न लग्नं चेत्** - ஈடுபடாமல் போனால், **ततः किं...ततः किं**-அதனால் யாது பயன் ?

எனக்கு உலகவிஷயங்களை அனுபவிப்பதிலோ, பலவித யோகங்களிலோ, சிறந்த குதிரைகளில் சவாரி செய்வதிலோ அழகிய பெண்ணின் முகத்திலோ, பணத்திலோ, மனம் செல்லாது. என் மனத்தை அடக்கி விட்டேன் என்று சொல்லுகிறான். ஆனாலும் குருசரணத்தில் மனம் செல்லவில்லையானால் மனோநிக்ரஹம் செய்து என்ன பயன்? (7)

**अरण्ये न वा स्वस्य गेहे न कार्ये न देहे मनो वर्तते मे त्वनर्घ्ये ।**
**मनश्चेन्न लग्नं गुरोरङ्घ्रिपद्मे ततः किं ततः किं ततः किं ततः किम् ॥**

அரண்யே ந வா ஸ்வஸ்ய கேஹே ந கார்யே
ந தேஹே மனோ வர்ததே மே த்வநர்க்யே ।
மநச்சேத் ந லக்னம் குரோரங்க்ரி பத்மே
தத: கிம் தத: கிம் தத: கிம் தத: கிம் ॥ 8

**अरण्ये**-காட்டில், **मे**-என்னுடைய, **मनः**-மனம், **न वर्तते**-இல்லை. **स्वस्य**-தன்னுடைய, **गेहे**-வீட்டிலும், **न**-இல்லை. **कार्ये**-கார்யத்திலும், **न**-இல்லை. **देहे**-சரீரத்திலும், **न**-இல்லை. **अनर्घ्ये**-விலை உயர்ந்த பொருளிலும், **न**-இல்லை. (என்றாலும்) **मनश्चेत् न लग्नं ... ततः किम्**-குருசரணாரவிந்தத்தில் மனம் பற்றிக்கொள்ளாமல்போனால் யாது பயன் ?

காட்டிலோ, வீட்டிலோ, தேஹத்திலோ, விலை உயர்ந்த பொருளிலோ, லௌகிககார்யத்திலோ, ஒன்றிலும் செல்லாத படி மனதை நிக்ரஹம் செய்தபோதிலும் குருவின் சரண த்யானத்தில் ஈடுபடாமல் போனால் என்ன பயன்? (8)

**गुरोरष्टकं यः पठेत्पुण्यदेही यतिर्भूपतिर्ब्रह्मचारी च गेही ।**
**लभेद्वाञ्छितार्थं पदं ब्रह्मसंज्ञं गुरोरुक्तवाक्ये मनो यस्य लग्नम् ॥ ९ ॥**

குரோரஷ்டகம் ய: படேத் புண்ய தேஹீ
யதிர் பூபதிர் ப்ரஹ்மசாரீ ச கேஹீ ।
லபேத் வாஞ்சிதார்த்தம் பதம் ப்ரஹ்ம ஸம்ஜ்ஞம்
குரோருக்த வாக்யே மனோ யஸ்ய லக்னம் ॥ 9

**गुरोः**-குருவினால், **उक्तवाक्ये**-உபதேசிக்கப்பட்ட வார்த்தையில், **यस्य**-எவனுடைய, **मनः** -மனது, **लग्नं**-ஈடுபட்டுள்ளதோ, **यः** -எந்த, **पुण्यदेही**-புண்யாத்மா, **गुरोरष्टकं**-குர்வஷ்டகத்தை, **पठेत्** -படிக்கிறானோ (அவன்), **यतिः** -ஸந்யாஸியாகவோ, **भूपतिः** -அரசனாகவோ, **ब्रह्मचारी**-ப்ரஹ்மசாரியாகவோ, **गेही च**-கிருஹஸ்தனாகவோ இருந்தாலும், **वाञ्छितार्थं**-விரும்பிய பொருளையும், **ब्रह्मसंज्ञं** - ப்ரஹ்மம் என்ற பெயருள்ள, **पदं**-ஸ்தானத்தையும், **लभेत्** -அடைவான்.

குரு சரணாரவிந்த த்யானத்துடன் குரு உபதேசித்த விஷயத்திலேயே மனதைச் செலுத்தி இந்த குர்வஷ்டகத்தை அர்த்த ஞானத்துடன் அநுஸந்தானம் செய்து வந்தால் குருவின் அருளைப் பெற்று இவ்வுலகில் எல்லா அபீஷ்டங்களையும் பெற்று முடிவில் ப்ரஹ்மானந்த நிலையை அடைவான். (9)

ஸ்ரீ குர்வஷ்டகம் முற்றும்

|| श्रीः ||

# ॥ धन्याष्टकम् ॥

## தன்யாஷ்டகம்

[தன்யாஷ்டகம் எட்டு சுலோகங்கள் கொண்டது. உலக வாழ்விலே பணம், பதவி முதலான பேறுகளைப் பெற்றவர்களை மஹா பாக்யசாலிகளாகவும் மற்றவர்களை பாக்ய ஹீனர்களாகவும் யாவரும் கருதுகின்றனர். ஆசார்யாள் இம்மாதிரி கருதவில்லை. ஸத்யலோகம் வரையிலும் எந்த லாபத்தைப் பெற்றபோதிலும் அதனால் பயனில்லை என்பதை 'குர்வஷ்டகத்திலும்' 'அநாத்ம ஸ்ரீவிகர்ஹணத்திலும்' பகவத்பாதாள் நன்கு காட்டியிருக்கிறார். இந்த பிரகரணத்தில் யார் பாக்யசாலி என்ற கேள்விக்கு விடைதருகிறார். பாக்யசாலிகள் இன்ன இன்ன விதமாக இருப்பார்கள் என்று இதில் கூறுகிறார். இதிலிருந்து பாக்யசாலிகளின் லக்ஷணத்தைக்கண்டு பிடிக்கலாம். ஆத்ம லாபத்தைவிடச் சிறந்த லாபம் இல்லை எனப் பெரியோர்கள் கூறுவர். ஆத்ம லாபத்திற்கு எவன் முயற்சி செய்கிறானோ அவனே பாக்யசாலி என்று இதில் கூறுகிறார். ஒவ்வொரு சுலோகத்திலும் 'धन्याः' என்றபதம் இருப்பதாலும் தன்யர்களைப் பற்றிப் பேசுவதாலும் இதற்கு தன்யாஷ்டகம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது.]

तज्ज्ञानं प्रशमकरं यदिन्द्रियाणां
तज्ज्ञेयं यदुपनिषत्सु निश्चितार्थम् ।
ते धन्या भुवि परमार्थनिश्चितेहाः
शेषास्तु भ्रमनिलये परिभ्रमन्ति ॥ १॥

தத் ஞானம் ப்ரமகரம் யதிந்த்ரியாணும்
தத் ஞேயம் யதுபநிஷத்ஸு நிச்சிதார்த்தம் ।
தே தந்யா புவி பரமார்த்தநிச்சிதேஹா:
ஶேஷாஸ்து ப்ரம நிலயே பரிப்ரமந்தி ॥

**यत्**-எது, **इन्द्रियाणां**-புலன்களுக்கு, **प्रशमकरं**-அடக்கத்தைக் கொடுக்கிறதோ, **तत्**-அது, **ज्ञानं**-அறிவு. **यत्**-எது, **उपनिषत्सु**-வேதாந்தங்களில், **निश्चितार्थं**-தீர்மானிக்கப்பட்ட பொருளோ, **तत्**-அது, **ज्ञेयम्**-அறியத்தகுந்தது. **भुवि**-பூமியில், **परमार्थनिश्चितेहाः**-(எவர்கள்) உண்மைப்பொருளில் உறுதியான முயற்சி உள்ளவர்களோ, **ते**-அவர்கள், **धन्याः**-பாக்யசாலிகள். **शेषास्तु**-மற்றவர்களோவெனில், **भ्रमनिलये**-ப்ராந்தியைத்தரும் இடத்தில், **परिभ्रमन्ति**-சுற்றிச் சுற்றி வருகின்றனர்.

உலகில் எத்தனையோ புதுப்புது விஷயங்களை ஆவலுடன் சிரமப்பட்டுத் தெரிந்துகொள்கிறோம். இந்த அறிவு நம்புலன்களை மேலும் மேலும் கிளப்பி விடுகின்றன. இவைகளால் நமக்கு நன்மை இல்லை. இந்த அறிவு பெற்றவர்கள் உலகில் திண்டாடுவதை நாம் பார்க்கிறோம். ஆகையால் எந்த அறிவைப் பெற்றால் புலன்கள் அடங்குமோ அதுதான் ஞானம். ஆகவே உபநிஷத்தில் கூறப்பட்ட ப்ரஹ்மத்தைத் தான் அறியவேண்டும். இதை அறிந்தால் தான் புலன்கள் அடங்கும். இந்த உண்மை அறிவைப் பெற உறுதியுடன் முயற்ச்சிப்பவர்கள்தான் பாக்யசாலிகள் மற்றவர்களெல்லாம் ப்ராந்தர்கள். மேல்நிலைக்கு வர முடியாமல் கீழேயே சுற்றிச் சுற்றி வருகின்றனர். (1)

(அ) மேல் நிலையை அடைவதற்கு உபாயங்களைக் கூறுகிறார்:—

आदौ विजित्य विषयान्मदमोहराग-
द्वेषादिशत्रुगणमाहृतयोगराज्याः ।
ज्ञात्वा मतं समनुभूय परात्मविद्या-
कान्तासुखं वनगृहे विचरन्ति धन्याः ॥ २ ॥

ஆதௌ விஜித்ய விஷயான் மதமோஹராக-
த்வேஷாதி ஶத்ரு கணமாஹ்ருத யோகராஜ்யா: ।

ஞாத்வா மதம் ஸமனுபூய பராத்மவித்யா
காந்தா ஸுகம் வனக்ருஹே விசரந்தி தன்யா: ||

**आदौ**-முதலில், **विषयान्** -சப்தம் முதலான விஷயங்களை யும், **मद**-கர்வம், **मोह**-அவிவேகம், **राग**-ஆசை, **द्वेषादि** வெறுப்பு முதலான, **शत्रुगण**-எதிரிக்கூட்டத்தையும், **विजित्य**-ஜயித்து, **आहृतयोगराज्याः** -மனோநிக்ரஹம் என்ற ராஜ்யத்தை ஸ்வாதீனம் செய்துகொண்டு, **मतं**-உபநிஷத்ஸித்தாந்தத்தை **ज्ञात्वा**-அறிந்து, **परात्मविद्याकान्तासुखं**-பரமாத்ம ஞானம் என்ற ஸ்திரீயிடமிருந்து கிடைக்கும் ஸுகத்தை, **समनुभूय**-அநுபவித்து, **धन्याः**-பாக்யசாலிகள், **वनगृहे**-அரண்ய கிருஹத்தில், **विचरन्ति**-ஸஞ்சரிக்கின்றனர்.

உலகில் உயர் நிலைக்குப் போகவொட்டாமல் தடுப்பது சப்தம் முதலான விஷயங்களும் அதன் மூலம் உண்டான ராகம் த்வேஷம் மதம், மோஹம் முதலியவைகளும் தான். இவைகள் நம் மனதிலேயே இருந்து கொண்டு நமக்கு எப் பொழுதும் தீங்கு விளைவிப்பதால் கோரமான உள்ளதிரிகள். இவைகளை வெல்லவேண்டும். இதற்கு யோகாப்யாஸம் மூலம் மனதை அடக்கவேண்டும். பிறகு உபநிஷத்துக்களை விசாரித்து ஆத்மாவை அறிந்தால் ஆத்மானந்தம் பெறலாம். விஷயானந்தத்தை அனுபவித்துப் பழகியவர்களுக்குப் புரிவதற்காக ஆத்மானந்தத்தை காந்தாஸுகமாக வர்ணிக் கிறார். இவர்களுக்கு வனம் தான் வீடு. (2)

त्यक्त्वा गृहे रतिमधोगतिहेतुभूता-
मात्मेच्छयोपनिषदर्थरसं पिबन्तः ।
वीतस्पृहा विषयभोगपदे विरक्ता
धन्याश्चरन्ति विजनेषु विमुक्तसङ्गाः ॥ ३ ॥

த்யக்த்வா க்ருஹே ரதிமதோகதி ஹேதுபூதாம்
ஆத்மேச்சயோபநிஷதர்த்த ரஸம் பிபந்த: ।
வீதஸ்ப்ருஹா விஷய போகபதே விரக்தா:
தந்யாச்சரந்தி விஜனேஷு விமுக்தஸங்கா: ||

**अधोगतिहेतुभूतां**-தாழ்ந்த நிலையை அடைவதற்குக் காரணமாக உள்ள, **गृहे रतिं**-வீட்டில் ஆசையை, **त्यक्त्वा**-விட்டுவிட்டு, **आत्मेच्छया**-ஆத்மஸ்வருபத்தை அறிவதில் ஆசையால், **उपनिषदर्थरसं**-உபநிஷத்துக்களில் கூறப்பட்ட விஷயத்தின் ரஸத்தை, **पिबन्तः**-பானம் செய்துகொண்டு, **विषयभोगपदे**-விஷயங்களை அநுபவிக்கும் நிலையில், **वीतस्पृहाः**-ஆசை நீங்கியவர்களாய், **विरक्ताः**-வைராக்யமுள்ளவர்களாக **धन्याः**-பாக்யசாலிகள், **विजनेषु**-ஜனஸஞ்சாரம் இல்லாத இடங்களில், **विमुक्तसङ्गाः**-பற்றற்றவர்களாய், **चरन्ति**-ஸஞ்சாரம் செய்கின்றனர்.

வீட்டில் ஆசைவைப்பவன்தான் அதற்காகப் பலவித கர்மாக்களைச் செய்து அதோகதியடைகிறான். ஆகையால் வீட்டில் ஆசையைத் துறக்கவேண்டும். ஆத்மாவை அறிவதில் தீவ்ரமான விருப்பத்துடன் உபநிஷத்துக்களை விசாரித்து அதில் கூறியுள்ள விஷயங்களை அனுஸந்தானம் செய்யவேண்டும். உலக விஷயங்களை அனுபவிப்பதில் சாபல்யமே இருக்கக்கூடாது. பூர்ண வைராக்யத்துடன் ஒன்றிலும் பற்றில்லாமல் ஏகாந்தமான இடத்தில் ஸஞ்சாரம் செய்யவேண்டும். இவர்களே தன்யர்கள். (3)

**त्यक्त्वा ममाहमिति बन्धकरे पदे द्वे**
**मानावमानसदृशाः समदर्शिनश्च ।**
**कर्तारमन्यमवगम्य तदर्पितानि**
**कुर्वन्ति कर्मपरिपाकफलानि धन्याः ॥ ४ ॥**

த்யக்த்வா மமாஹமிதி பந்தகரே பதே த்வே
மாநாவமான ஸத்ருசா: ஸமதர்சிநச்ச ।
கர்த்தாரமந்யமவகம்ய ததர்பிதானி
குர்வந்தி கர்ம பரிபாக பலானி தன்யா: ॥

**बन्धकरे**-பந்தத்தை உண்டுபண்ணுகிற, '**मम**-என்னுடையது, **अहं**-நான்' **इति**-என்ற, **द्वे पदे**-இரண்டு நிலைகளையும், **त्यक्त्वा**-விட்டு, **मानावमानसदृशाः**-மதிப்பு, அவமதிப்பு

இரண்டிலும் ஸமமாக இருப்பவர்களும், **समदर्शिनश्च**–ஸம மான ப்ரஹ்மத்தைப் பார்ப்பவர்களுமான, **धन्याः**–பாக்ய சாலிகள், **कर्तारं**–ஸிருஷ்டி செய்கின்றவரும், **अन्यं**–பிரபஞ் சத்தைக் காட்டிலும் வேருக இருக்கிறவருமான ஈசனே, **अवगम्य**–அறிந்து, **कर्मपरिपाकफलानि**–கர்மாவின் முடிவு பயன் இவைகளை, **तदर्पितानि**–அவரிடம் ஸமர்ப்பணம் செய்தவை களாக, **कुर्वन्ति**–செய்கிருர்கள்.

சரீரத்தில் நான் என்ற எண்ணம், இதைச் சேர்ந்த பொருள்களில் என்னுடையது என்ற எண்ணம் இந்த அஹங்காரம், ம்மகாரம் இவ்விரண்டும் தான் ஸம்ஸார பந்தத்திற்கு மூலகாரணம். இதை விட்டுவிடவேண்டும். இவைகள் உள்ளவர்களுக்குத்தான் சரீரத்தையோ, அதைச் சேர்ந்தவர்களேயோ பூஜித்தால் ஸந்தோஷமும், அவமதித் தால் துக்கமும் ஏற்படும். இதை விட்டவர்கள் மானம், அவமானம் இரண்டையும் ஸமமாக பாவிப்பார்கள். எல்லாவற்றிலும் ஸமதிருஷ்டி இருக்கும். இவர்கள் தாங்கள் செய்யும் கர்மாக்களின் முடிவைப்பற்றியோ, பலனேப் பற்றியோ சிறிதும் கவலேப்படமாட்டார்கள். எல்லா வற்றையும் ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்து கர்மாக்களேச் செய்வார்கள். இவர்களே பாக்யசாலிகள். (4)

**त्यक्त्वैषणात्रयमवेक्षितमोक्षमार्गा**
**भैक्षामृतेन परिकल्पितदेहयात्राः ।**
**ज्योतिः परात्परतरं परमात्मसंज्ञं**
**धन्या द्विजा रहसि हृद्यवलोकयन्ति ॥ ५ ॥**

த்யக்த்வைஷணு த்ரயமவேக்ஷித மோக்ஷ மார்கா:
பைக்ஷாம்ருதேன பரிகல்பித தேஹ யாத்ரா: ।
ஜ்யோதி: பராத் பரதரம் பரமாத்ம ஸம்ஞம்
தன்யா த்விஜா ரஹஸி ஹ்ருத்யவலோகயந்தி ॥

**एषणात्रयं**–தாரைஷணு (மனேவியிடம் பற்று) புத்ரை ஷணு (மக்களிடம் பற்று) வித்தைஷணு (பணத்தில் பற்று)

இம்மூன்றையும், त्यक्त्वा-விட்டு, अवेक्षितमोक्षमार्गाः-மோக்ஷம் அடையும் வழியைக்கண்டு, भैक्षामृतेन-பிக்ஷை எடுப்பதில் கிடைக்கும் அமிருதத்திற்கொப்பான அன்னத்தால், परि-कल्पितदेहयात्राः-தேஹ ஜீவனத்தை நடத்துகின்றவர்களாய், धन्याः-பாக்யசாலிகளான, द्विजाः-பிராமணர்கள், रहसि-ரஹஸ்யத்தில், हृदि-ஹிருதயத்தில், परात्परतरं-சிறந்த வற்றைக்காட்டிலும் மிகச்சிறந்ததான, परमात्मसंज्ञं-ப்ரமாத்மா என்று பெயருள்ள, ज्योतिः-பிரகாசத்தை, अवलोकयन्ति-பார்க்கிறார்கள்.

மனைவி, மக்கள், பணம் இம்மூன்று ஆசைகளும்தான் ஏஷணாத்ரயம் எனப்படும். இவைகள் இருந்தால் மோக்ஷத் திற்குச் செல்லும் வழியே தென்படாது. ஆகவே இந்த ஆசைகளைவிட்டு மோக்ஷவழியில் சென்று பிக்ஷான்னத் தால் ஜீவனத்தை நடத்திக்கொண்டு ஏகாந்தமான இடத்தில் தியானத்தால் மனதில் ஜ்யோதி ஸ்வரூபமான பரமாத்மாவைக் காண்பவர்கள் தன்யர்கள். (5)

नासन्न सन्न सदसन्न महन्न चाणु
न स्त्री पुमान्न च नपुंसकमेकबीजम् ।
यैर्ब्रह्म तत्सममुपासितमेकचित्तै-
र्धन्या विरेजुरितरे भवपाशबद्धाः ॥ ६ ॥

நாஸத் ந ஸத் ந ஸதஸத் ந மஹத் ந சாணு
ந ஸ்த்ரீ புமான் ந ச நபும்ஸகமேகபீஜம் ।
யைர் ப்ரஹ்ம தத்ஸமமுபாஸிதமேகசித்தைர்
தன்யா விரேஜுரிதரே பவபாஶ பத்தா: ॥

ब्रह्म-ப்ரஹ்மம், न असत्-அஸத்து இல்லை. न सत्-ஸத்து இல்லை. न सदसत्-ஸத்தாகவும் அஸத்தாகவும் இல்லை. न महत्-பெரியதுமில்லை. नाणु च-சிறியதுமில்லை. न स्त्री-பெண் அல்ல. न पुमान्-ஆணும் அல்ல. न च नपुंसकं-அலியும் அல்ல. एकबीजं-ஒரே காரணப்பொருள், समं-ஸமமான, तत्-

அந்த ப்ரஹ்மம், **एकचित्तैः**-ஒன்றிலேயே மனம் நிலைத்துள்ள, **यैः**-எவர்களால், **उपासितं**-த்யானம் செய்யப்பட்டதோ (அவர்கள்), **धन्याः**-பாக்யசாலிகளாக, **विरेजुः**-விளங்கினார்கள். **इतरे**-மற்றவர்கள், **भवपाशबद्धाः**-பிறப்பு இறப்பு என்ற பாசத்தால் கட்டப்பட்டவர்கள்.

ப்ரஹ்மமானது தர்மங்கள் ஒன்றும் இல்லாமல் ஆத்ம வஸ்துவாக விளங்குவதால் இதை வெளிப்பொருள்களைப் போல ஸத் என்றோ அஸத் என்றோ ஸத்தாகவும் அஸத்தாகவும் உள்ளது என்றோ சொல்லமுடியாது அது பெரியதுமில்லை, சிறியதுமில்லை, ஆணுமல்ல, பெண்ணும் அல்ல, அலியுமல்ல. உலகில் நாம் நம்மைக்காட்டிலும் வேறாகக் காணும் பொருள்கள் ஒன்றிலும் அது சேர்ந்ததல்ல. எல்லாவற்றிற்கும் ஒரே மூலகாரணம் அது. இதுவே நம் ஆத்மவஸ்து. இதிலேயே மனதைச் செலுத்தி தியானிப்பவர்கள் தான் தன்யர்கள். மற்றவர்கள் ஸம்ஸார பாசத்தில் கட்டுப்பட்டவர்கள். (6)

**अज्ञानपङ्कपरिमग्नमपेतसारं**
**दुःखालयं मरणजन्मजरावसक्तम् ।**
**संसारबन्धनमनित्यमवेक्ष्य धन्या**
**ज्ञानासिना तदवशीर्य विनिश्चयन्ति ॥ ७ ॥**

அக்ஞானபங்க பரிமக்நமபேத ஸாரம்
துக்காலயம் மரண ஜன்ம ஜராவஸக்தம் ।
ஸம்ஸார பந்தனமநித்யமவேக்ஷ்ய தன்யா
ஞானாஸிநா ததவஸீர்ய விநிச்சயந்தி ॥

**अज्ञानपङ्कपरिमग्नं**-அக்ஞானம் என்ற சேற்றில் அமிழ்ந்தியதும், **अपेतसारं**-ஸாரமற்றதும், **दुःखालयं**-துக்கங்களுக்கு இருப்பிடமும், **मरणजन्मजरावसक्तं**-இறப்பு, பிறப்பு, மூப்பு இவைகளுடன்கூடியதும், **अनित्यं**-அழியக்கூடியதுமான, **संसारबन्धनं**-ஸம்ஸாரமென்ற பந்தத்தை, **अवेक्ष्य**-நன்கு

அறிந்து, धन्याः -பாக்யசாலிகள், ज्ञानासिना-ஞானம் என்ற கத்தியால், तत् -அதை, अवशीर्य-சிதற அடித்து, विनिश्चयन्ति-(ப்ரஹ்மத்தை) தீர்மானிக்கிறார்கள்.

ஸம்ஸார வாழ்க்கை அக்ஞானம் என்ற சேற்றில் அமிழ்த்துகிறது. ஸாரமற்றது. துன்பங்களுக்கு இருப்பிடம். மரணம், பிறவி, மூப்பு இவை திரும்பித் திரும்பி வந்துகொண்டிருக்கும். ஸ்திரமுமல்ல இதை அறிந்து தத்வஞானத்தால் கட்டைப்பிளந்து வெளிப்படுபவர்கள் தன்யர்கள். (7)

शान्तैरनन्यमतिभिर्मधुरस्वभावै-
रेकत्वनिश्चितमनोभिरपेतमोहैः ।
साकं वनेषु विदितात्मपदस्वरूपै-
स्तद्वस्तु सम्यगनिशं विमृशन्ति धन्याः ॥ ८ ॥

ஶாந்தைரநந்ய மதிபிர் மதுர ஸ்வபாவை:
ஏகத்வ நிச்சித மனோபிரபேத மோஹை: ।
ஸாகம் வனேஷு விதிதாத்ம பத ஸ்வரூபை:
தத்வஸ்து ஸம்யகநிஶம் விம்ருஶந்தி தன்யா: ॥

धन्याः -பாக்யசாலிகள், शान्तैः -மனத்தை அடக்கினவர்களும், अनन्यमतिभिः-வேறு ஒன்றிலும் மனதைச் செலுத்தாதவர்களும், मधुरस्वभावैः -இனிமையான ஸ்வபாவம் உள்ளவர்களும், एकत्वनिश्चितमनोभिः -ஒரே தத்வத்தில், உறுதிகொண்ட மனம் உள்ளவர்களும், अपेतमोहैः -மோஹம் விலகியவர்களும், विदितात्मपदस्वरूपैः -ஆத்ம நிலையின் ஸ்வரூபத்தை நன்கு அறிந்தவர்களுமான மஹான்களோடு, साकं-கூட, वनेषु-காடுகளில், तत् वस्तु-அந்த வஸ்துவை, अनिशं-எப்பொழுதும், सम्यक्-நன்கு, विमृशन्ति-விசாரம் செய்கின்றனர்.

ஆத்மநிலையின் ஸ்வரூபத்தை அறிந்தவர்களின் மனதும் இந்திரியங்களும் அடங்கி இருக்கும். வேறொன்றிலும் மனம் செல்லாது. ஒரே தத்துவமான ஆத்மாவிலே மனம் உறுதியுடன் நிலைத்து நிற்கும். மனம் அடங்கி விட்டதால் அவர்களின் ஸ்வபாவம் இனிமையாக இருக்கும். மோஹம் விலகிவிடும் இந்த மஹான்களுடன் காட்டில் எப்பொழுதும் ப்ரஹ்மத்தை நன்கு விசாரிப்பவர்களே பாக்யசாலிகள். (8)

தன்யாஷ்டகம் முற்றும்.

